## அறிமுக உரை : சூஃபி ஞானப் பொக்கிஷங்கள்

இத்தொடர் முகநூலில் எழுதுவதற்கு முன்பாகவும், எழுதிக் கொண்டிருக்கும்போதும் நண்பர்கள் அதிகம் பேர் மனிதர்களை கண்ணியப்படுத்துகிறோம் என்ற பெயரில் கை, கால்களை முத்தமிட்டு ஷிர்க் செய்கிறார்கள் அது பற்றி அறிவியல் ரீதியாக ஆய்வு எழுதுங்கள் " என்றார்கள்.

எங்க பள்ளியில் பெரிய ஜிப்பா போட்ட வெளியூர்காரர் ஒருவர் பயான் செய்யும்போது, "ஆப்ரேஷன் செய்த டாக்டரையும், சிறையிலுள்ள கைதியை தன் வாதத்திறமையால் 'நிராபராதி' என்று வெளியே கொண்டு வந்த வக்கீலையும் இறைவளைவுக்கு புகழ்ந்து ஷிர்க் செய்கிறார்கள். இது எவ்வளவு பெரிய குபறித்தான விஷயம் " என்று மேலே மேலே பேசிக் கொண்டிருந்தவர் கீழ்கண்ட குர்ஆன் வசனத்தையும் மேற்கோள் காட்டினார்.

வானங்கள் பூமியிலுள்ள யாவரும் (தங்களுக்கு வேண்டியவற்றை) அவனிடமே கேட்கின்றனர். அவன் ஒவ்வோர் நாளிலும் ஒவ்வோர் நிலையில் இருக்கிறான். ( குர்ஆன் 55:29 )

நானும் இந்த வசனத்தைப் பற்றி தப்ஸீர்கள் மற்றும் M.S.M அப்துல்லாஹ் (ரஹ்) அவர்களின் கிதாபுகளை புரட்டிப் பார்த்ததும்
இவ்வாயத்தில் அறிவுக்கு ஓர் அகால மயக்கம் தோன்றுகிறது. உண்மைதான்.

என்னுடைய செருப்பின்வார் அறுந்தபோது நான் சம்மானிடத்தில் உதவி தேடுகிறேன். உணவுக்குப் பணத்தின் உதவியையும், சமையலுக்கு மனைவியின் உதவியையும் தேடுகிறேன். பிச்சைக்காரன் ஊன்றுகோலின் உதவியோடு பணக்காரரின் உதவியையும் தேடுகிறான். இதெல்லாம் பெரிய ஷிர்க்காகிவிடுமே !

இவை போன்ற பிற விஷயங்களையும் எடுத்துக்கொள்ளுங்கள்.உதவி தேடியவனும் உதவிசெய்த ஊன்றுகோலென்ற அஃறிணைப் பொருளும் அல்லாஹ்வின் வேறானவை என்று கூறினால், நாம் குர்ஆனை விளங்கிக் கொள்ள ஆற்றலில்லாத அறிவிலிகள் என்பதே அதன் அர்த்தமாகும்.

குர்ஆன் இறைவனின் பேச்சு. அதில் பொய்யோ முரணோ இருக்க முடியாது. அதை உருட்டிப்புரட்டி மறைக்கவும் முடியாது. யார் யார் எவ்வெவரிடத்தில் எவ்வெப் பொருளிடத்தில் உதவி தேடினாலும் அது அல்லாஹ்விடம் தேடிய உதவி தானென்பது ஆயத்தின் தெள்ளத் தெளிவான அர்த்தமாகும்.

எனவே சிருஷ்டியென்ற தோற்றப்பாடான ஸூறத்திலிருந்து உதவி தேடியவனும், கேட்பவனும் றப்பு என்ற தோற்றப்பாடான ஸூறத்தற்ற நிலையில் பாதினாய் இருந்து உதவி செய்பவனும், கொடுப்பவனும், மறுப்பவனும் அவனாகவே இருக்கிறானென்றும் அவனுடன் அவனல்லாத எதுவும் கிடையாதென்றும் கலிமாவின் உண்மை விளக்கத்தையே இவ்வாயத்து உறுதிப்படுத்துகிறது ! இதைத்தான் நம் சற்குருமார்கள் நமக்கு போதிக்கிறார்கள்.

" அல்லாஹ் அல்லாதவர்களை அவனுக்கு இணையாக வைத்துக் கொண்டு, அவர்களை அல்லாஹ்வை நேசிப்பதற்கொப்ப நேசிப்போரும் மனிதர்களில் இருக்கிறார்கள்; ஆனால் நம்பிக்கை கொண்டவர்கள் அல்லாஹ்வை நேசிப்பதில் உறுதியான நிலையுள்ளவர்கள்; இன்னும் (இணை வைக்கும்) அக்கிரமக்காரர்களுக்குப் பார்க்க முடியுமானால், (அல்லாஹ் தரவிருக்கும்) வேதனை எப்படியிருக்கும் என்பதைக் கண்டு கொள்வார்கள்; அனைத்து வல்லமையும் அல்லாஹ்வுக்கே சொந்தமானது; நிச்சயமாக தண்டனை கொடுப்பதில் அல்லாஹ் மிகவும் கடுமையானவன் (என்பதையும் கண்டு கொள்வார்கள்).
(அல்குர்ஆன் : 2:165)

இந்த வசனமும் இதைப் போன்ற வேறுபல ஆயத்துக்களும் சர்வவல்லமையும் சர்வசக்தியும் அல்லாஹ்வுக்கே உரியதென்று கூறும் உண்மை இதுவே !

உதவிதேடுபவன் அனாறிய்யத்துடையவனாயிருந்து, அல்லாஹ் அல்லாதவரிடம், அல்லாஹ் அல்லாதவையிடம் உதவி தேடுகிறேனென்று நம்பியிருப்பதாலேயே அவன் முஸ் ரீக் என்று கணிக்கப்படுகிறான். உயர்திணை, அஃறிப் பொருட்களான சிருஷர்களின் உதவி ஒத்தாசையின்றி எந்த ஒரு மாமேதையான சிருஷ்டியாலும் எங்கேயும் எப்போதும் வாழவே முடியாதென்பதை நாம் ஊன்றி உணர வேண்டும்.

செருப்புடைய வார் அறுந்துபோனாலும் அல்லாஹ்விடமே உதவி தேடவேண்டுமென்றால் வாரைத் தைத்துத் தரும் சம்மான் அல்லாஹ்வின் ஸூறத்துக்களிலொன்றே என்பதையும், அவனிடமிருந்து வெளியாகும் சக்தி அல்லாஹ்வுடையதே என்பதையும் நாம் அறிந்திருக்கவேண்டும். இல்லையானால் ஷிர்க்கில்லாத எந்த ஓர் மனிதனையும் எங்கேயும் நாம் காணமுடியாது !

றசூல்(ஸல்) அவர்களிடம் அல்லது நல்லடியார்களான அவ்லியாக்களிடம் உதவி தேடல்,ஸபாஅத்தின் ஆதரவு வைத்தல் போன்றவை யெல்லாம் ஷிர்க்கல்ல என்பது உண்மை. ஆயினும் அது பாமர மனிதனிடத்தில் ஷிர்க்காக அமைவதன் காரணம் அவர்களை அல்லாஹ்வை விட்டும் வேறானவர்களென்று நம்ப வைத்து குழியில் தள்ளுவது நவீன தௌஹீது வாதியின் வேலை.

அந்த நல்லடியார்கள் இறைவனின் விசேட ஸூறத்துக்களென்றும் அவர்களில் வெளியாகும் சக்தி, உதவி, அல்லாஹ்வின் சக்தியும், உதவியுமே என்றும் தெரிந்து கொண்ட ஓர் மூமீனிடத்தில் நல்லடியார்கள் மட்டுமன்றி அஃறிணைப் பொருட்களிடத்தில் உதவி தேடினாலும்கூட அது ஷிர்க்காக அமையாது ! என்பதைத்தான் நம் சற்குருமார்கள் நமக்கு போதிக்கிறார்கள்!

நுட்பமாய் உணர்க. இஸ்லாத்தின் தௌஹீதையும் இக்கால வஹ்ஹாபிகளின் ஓரிறைக் கொள்கையையும் ஒப்பிட்டு நோக்கி உண்மையில் தெளிவு பெறுங்கள். சர்வ பேரண்டத்திலுமுள்ள சர்வ சிருஷ்டியும் அல்லாஹ்வின் ஸூறத்தான தோற்றப்பாடே என்பதை நிரூபணஞ் செய்ய அனேக ஆதாரங்களுள்ளன.

ஸூறத் என்பதில் இன்னுமோர் நுட்பமுண்டு, பௌதீக உலகத்தை நாம் லாஹிர், (வெளிப்படை) என்று கூறுகிறோம். இதற்கு மாறான தோற்றாத மலக்குகள், ஜின்கள் போன்ற சூட்சும சிருஷ்டிகள் வாழும் உலகை பாதின் (மறைந்தது) என்று கூறுகிறோம்.

இது பாமர மனித அறிவிடத்தில் உண்மைதான். ஆனால் விபரம் வேறுவகையாய் இருக்கிறது. எப்படியென்றால் மலக்குகள், ஜின்கள் வாழும் சூட்சும உலகம் எமதறிவுக்கு மறைந்ததாயிருப்பினும் உண்மையில் அவையும் லாஹிருடைய உலகம் தான். ஏனென்றால் ஸூறத்தில் இல்லையானால் சிருஷ்டி என்று ஆகாது.

எனவே, நாம் அந்த சூட்சும உலகங்களை ஜடப்பொருட்களாய் காணாவிட்டாலும் அந்த சூட்சம் உலகுக்கும் ஸூறத்து உண்டு, ஆகையால் அவ்வுலக மக்களுக்கு அவ்வுலகங்கள் ஜடம்தான். எமதுலகில் நாம் ஜடத்தை கணிக்கும் முறை வேறு, அவர்கள் கணிக்கும் முறை வேறு.

ஆகையால் லாஹிர் என்பதில் பௌதீக உலகும் சூட்சும உலகும் அடங்கி விட்டன. அப்படியானால் பாதின் என்பதன் உண்மை என்ன? இந்த "பாதின்" "தன்ஸீஹீ" என்ற நிலமை, குன்ஹு, தாத்து, வஜுது என்று கூறப்பட்ட மனித அறிவு வட்டத்தைக் கடந்த ஓர் நிலையாகும்.

இதை ஆராய செய்தல் தடைப்படுத்தப்பட்டுள்ளது. லாஹிர் என்பது அப்து, றப்பென்ற பூபியத்தின் நிலைமையை உள்ளடக்கியது. இதில் மனித அறிவு ஓர்பகுதியை எல்லாப் புலன்கள் வாயிலாகவும் இன்னோர் பகுதியை அறிவின் புலன்கள் (அனுமான.அறிவின்) வாயிலாகவும் அறியலாம். குன்ஹு என்ற சுயநிலையான பாதினை, தன்ஸீயி இறைவன் மட்டுமே அறிவான் !

இந்த தோற்றப் பிழை மயக்கத்தை எளிதாக நடந்து போகத்தான் நம் சற்குருமார்கள் நமக்கு தொடர்ந்து போதிக்கிறார்கள்! இத்தகைய சூஃபியாக்கள் வெவ்வேறு தருணத்தில் நமக்குப் போதித்ததை தொகுத்து 65 பதிவுகளாக தொடர்ந்து முகநூலில் எழுதி வந்ததை நண்பர் Valippoken சிரமம் பார்க்காமல், சளைக்காமல் மிக அழகாகக் கோர்த்து உங்களின் முன் சமர்த்திருக்கிறார். அவருக்கு வல்ல ரஹ்மான் எல்லா பாக்கியத்தையும் வளமாக வழங்கியருள பிரார்த்திக்கிறேன்.

# அணிந்துரை

நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களோடு இருக்கும் போது . .
"உங்களில் எவராவது சொர்க்கத்திற்கு சென்று வந்தது உண்டா ?"
அனைவரும் திகைத்தனர் .அங்கிருந்த அப்துல்லாஹ் இப்னு உமர் ரலி உடனே கையை உயர்த்தியவராக "யா ரசூல்லாஹ் ! நான் சென்றுள்ளேன்" என்றார் .

அருகில் இருந்து இதனைக் கவனித்துக் கொண்டு இருந்த அவரது தந்தை உமர் (ரலி ) தமது தலையில் கை வைத்தவராக திடுக்கிட்டு மகனைப் பார்க்கிறார்கள்.

நபி (ஸல் ) அவர்கள் "உங்களில் சொர்க்கத்து நீரோடையில் நீர் அருந்தியது உண்டா ?" அப்போதும் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி ) அவர்கள் "யா ரசூல்லாஹ் ! நான் அருந்தியிருக்கிறேன் "

உமர் (ரலி )அவர்கள் 'எனது மகன் எழுந்து செல்லாமல் மானத்தை வாங்கப் போகிறானே' என்று எண்ணினார்கள் .

நபி (ஸல் ) அவர்கள் மீண்டும் "உங்களில் எவராவது சொர்க்கத்தின் உணவை சுவைத்தது உண்டா ? "அப்போதும் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி )அவர்கள் "நான் சுவைத்திருக்கிறேன்" என்றார்கள்

'நம்முடன் உலகில் உயிருடன் இருக்கிறார். இவர் மட்டும் எப்படி சொர்க்கம் சென்றிருக்க முடியும் ? ' என்று அனைவரும் திகைத்தனர்

நபி (ஸல் ) அவர்கள் "அப்துல்லாஹ்வே ! உங்கள் விளக்கத்தை மக்களிடம் கூறுங்கள் "

அப்துல்லாஹ் இப்னு உமர் கூறினார்கள் : "யா ரசூல்லாஹ் ! சொர்க்கத்தை நேரில் கண்ட செய்தியை தாங்கள் எங்களிடம் கூறினீர்கள். அப்போது நானும் உங்களுடன் நுழைந்ததாகவே உணர்ந்தேன்.சொர்க்கத்து நீரோடையில் நீர் அருந்தியதைத் தாங்கள் குறிப்பிட்ட போது நானும் அதிலிருந்து நீர் அருந்தியதாகவே உணர்ந்தேன் .சொர்க்கத்துப் பழங்களை உண்டதைக் குறித்து தாங்கள் கூறிய போது நானும் உங்களுடன் உண்டதாகவே உணர்ந்தேன்" என்றார்கள்.

ஆமாம். இதுதான் 'அதுவாக மாறி விடு' என்பது. இதே நிலை மாபெரும் கவிஞர் ஆலிப் புலவருக்கும் ஏற்பட்டிருக்கிறது.

மிகுராசு மாலை"காப்பியத்தை அரங்கேற்றம் செய்த ஆலிப் புலவர் எழுவான் சிறப்பை எழிலுடன் துவங்கி விரிவுரை நிகழ்த்தி வரும்பொழுது, " முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) புராக் என்னும் புரவி இவர்ந்து நான்காம் விண் சென்ற சீர்மையை எடுத்துரைத்து, அங்குள்ள பைத்துல் மஃமூர் பள்ளியில் தம்முடைய சுட்டுவிரலால் அழகிய தூண் ஒன்றில் துளை செய்து அப்புரவியைக் கட்டி விட்டு, அதன் பின் ஐந்தாம் விண்ணுக்கு எழுந்தருளினார் என்ற கருத்தமைந்த பாடலை பாடும்போது

"கோலத்தூண்தான் துளைத்துக் கட்டியரோ " என்ற அடி வந்ததும், முச்சுடர் வடிவான முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் நிதர்சனமாக திருக்காட்சி நல்கி,

"ஆலி..! அச்செய்தி அல்லாஹ்வுக்கும், என்னுடன் வந்த ஜிப்ரயீலுக்கும் தாமே தெரியும் ? உமக்கு எவ்வாறு தெரியும் ?" என்று அமுதவாய் விண்டனர்.

"அண்ணலெம் பெருமானே..! அடியேன் வாயில் அவ்வாறு வந்தது ; விண்டேன் . அதையன்றி வேறொன்றும் கண்டேனல்லேன்" என்று நாக்குளற விடையிறுத்து விட்டுக் காணாத காட்சியை கண்ட பெரும் அதிர்ச்சியினால் கீழே சாய்ந்தார்.

' புத்துஹாத்துல் மக்கியா , மஸ்னவீ, மிர்தாத்.திருக்குறள் போன்ற புத்தகங்கள் எழுதப்படுவதில்லை அவை பிறக்கின்றன.யாராலும் அவற்றை இயற்ற முடியாது.அவை மனதினால், மனதிலிருந்து உற்பத்தி செய்யப்படுபவை அல்ல ;அவை எட்டாத தூரத்தில் இருந்து பறவையைப் பயணித்து வருகின்றன. அவை எந்த ஒரு காலத்திலும் அழியாத வெகுமதி...'

என்று நான் எழுதியதை நண்பர் ஒருவர்,மஸ்னவியோ , மிர்தாதோ , புத்துஹாத்தோ, திருக்குறளோ மனிதர்கள் இயற்றியதுதானே . "எழுதப்படுவதில்லை அவை பிறக்கின்றன" - எப்படி நீங்கள் சொல்லலாம் என்று கேட்கிறார் . உதாரணத்திற்கு சொல்றேன்

இப்னு அரபி (ரஹ்) அவர்கள் தாங்கள் எழுதிய புத்துஹாத்துல் மக்கியா வை உடனே மக்களுக்கு கொடுக்கவில்லை. அதனை கஃபாவின் மோட்டு மீது ஒரு வருட காலத்திற்கு போட்டு வைத்து, "யா அல்லாஹ் இயற்கையின் சக்திகளான மழை நீர் , வெயில் , வேகமாக வீசும் காற்று போன்றவற்றால் பாதிக்கபடாமல் இயற்கையோடு இந்த கிதாபு இயந்திருந்தால் மட்டுமே வெளிப்படுத்துவேன் . இல்லையேல் , உன் பொருத்தம் இல்லையென்று அதனை தூக்கியெறிவேன் "

ஒரு வருடத்திற்குப் பிறகு அந்த கிதாபு அன்று வைத்த மாதிரியே தூசி கூட படாமல் இருந்தது . இன்றும் பூமியில் இருக்கிறது . 800 வருடம் இஸ்லாம் ஆட்சி நடைபெற்ற ஸ்பெய்னில் வஹ்ஹாபிகள் புத்துஹாத்தை தீ யிட்டு கொளுத்தினர் .

அதன் பிறகு இஸ்லாம் ஸ்பெயினிலிருந்து துடைத்து எறியப்பட்டது.
அதனால்தான் சொன்னேன். "அவை எட்டாத தூரத்தில் இருந்து பறவையைப் பயணித்து வருகின்றன" .

ஒரு குழந்தையோ அல்லது ஒரு பறவையோ அல்லது ஒரு ரோஜா மலரோ பிறப்பது போன்று புதிர் நிறைந்த விதத்தில் பிறக்கின்றன .
ஒரு ரோஜா குச்சி அழகான மலர்களை பிரசவிக்கும் போது , நல்ல மனிதர்கள் மிகச் சிறந்த உயர்வான புத்தகங்களை படைக்க முடியாதா என்னே ?

மன வெளி (Mind Space ) என்று ஒன்று உள்ளது. அங்குதான் விஞ்ஞானிகள் கண்டுபிடித்த விதிகளெல்லாம் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக கேட்பாற்று கிடந்தன. அதை ஒரு நியூட்டனோ , ஒரு டால்டனோ , ஒரு ஐன்ஸ்டீனோ அதனுள் பிரவேசித்து , அதை எடுத்துச் சொன்னார்கள் . நோபளையும் பெற்றார்கள் .

உலகில் புவிஈர்ப்பு விதியையோ , ஒளியியல் விதியையோ இவர்கள் சொல்வதற்கு முன் அந்த விதிகள் எங்கிருந்தன ? யோசித்தீர்களா ?

மனவெளி. மனவெளியில்தான் மண்டிக் கிடந்தன. இன்னும் கோடான கோடி விதிகள் நம்மை சந்திக்க காத்திருக்கின்றன .

இதைப் போலவேதான் நல்ல புத்தகங்களும் இந்த மன வெளியில் குவிந்திருக்கின்றன .இந்த புத்தகங்கள் மனிதர்களை கருவியாக்கி அவர்கள் மூலம் எழுதப்பட்டதே தவிர அவர்கள் ஒன்றும் அதைப் படைக்க வில்லை. மன வெளிப் பக்கம் அடிக்கடி போய்ப் பாருங்கள். உங்களுக்கும் புதையல் கிடைக்கலாம்.

ஒவ்வொரு படைப்பாளிகளும் தங்கள் படைப்புகளை படைக்கும்போது வேறு ஒரு உலகத்தில் பிரவேசிக்கிறார்கள். அந்த உலகத்தில் அவர்களைத் தவிர யாருமே இருக்க முடியாது. எழுதுவது என்பது ஒரு வகை கலை . . அந்த உலகம் அவர்களுக்கானது. நிச்சயமாக அவர்களுக்கு மட்டுமேயான உலகம் அது.

மிகச் சிறந்த எழுத்தாளர்கள் தங்கள் படைப்புகளில் அவர்களால், வர்ணிக்கப்படும் அந்த உலகில் நம்மையும் கூட்டிக்கொண்டு போவார்கள். சிறுவர் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் சொர்க்கத்திற்கு கூட்டிச் சென்றது போல !

எழுத்துலகின் பயணம் என்பது அசாதாரணமானது .

எழுத்து ஒரு வார்த்தை
அதுவே வாக்கியம்
அதுவே இலக்கியம்

எழுத்து ஓர் ஆயுதம்
அதுவே கேடயம்
அதுவே யுத்த களம்

எழுத்து ஒரு அழகு
அதுவே ஆபரணம் .
அதுவே ஜொலிப்பு .

எழுத்து ஒரு மூச்சு .
அதுவே உயிர்
அதுவே வாழ்க்கை

எழுத்து ஒரு ஞானம்
அதுவே விஞ்ஞானம்
அதுவே மெஞ்ஞானம் .

எழுத்து ஒரு சொல்
அதுவே உரை
அதுவே கவிதை

எழுத்து ஒரு படகு
அதுவே துடுப்பு
அதுவே கடல்

எழுத்து ஓர் ஒளி
அதுவே பிரகாசம்
அதுவே சூரியன்

எழுத்து ஓர் எழுத்து
அதுவே எழுதுகோல்
அதுவே பாடம்

எழுத்து ஓர் அறிவு
அதுவே பகுத்தறிவு
அதுவே பட்டறிவு

எழுத்து நான்
அதுவே நீங்கள்
அதுவே நாம்

ரஹ்மத் ராஜகுமாரன்

+919360181033

## சூ.ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 1

كَاَنَّهَا كَوْكَبٌ دُرِّىٌّ يُّوْقَدُ مِنْ شَجَرَةٍ مُّبٰـرَكَةٍ زَيْتُوْنَةٍ لَّا شَرْقِيَّةٍ وَّلَا غَرْبِيَّةٍ

" அந்தக் ( கல்ப் என்னும் அகக்) கண்ணாடி ஒரு முத்தைப் போல் ஜொலிக்கும் நட்சத்திரமாய் இருக்கிறது. (அத்தீபம் ) ஒரு முபாரக்கான ஜைத்தூன் என்னும் விருக்ஷத்தைக் கொண்டு ஜொலிக்கிறது. ( அவ்விருக்ஷம் ) மேற்கைச் சேர்ந்ததோ கிழக்கைச் சேர்ந்ததோ அல்ல. ( அதாவது, திக்குத் திசையற்ற ஆலம் மிதால் என்னும் சூக்கும உலகத்தில் உள்ளதாய் இருக்கும் ) " (அல்குர்ஆன் : 24:35)

وَاعْلَمُوْۤا اَنَّ فِيْكُمْ رَسُوْلَ اللّٰهِ

"உங்களிலே அல்லாஹ்வின் ரசூல் நிலைத்திருக்கிறார் என்பதை திட்டமாக உணருங்கள்" ( அல்குர்ஆன் 49:7 )

முதல் வசனத்திற்கு ( 24:35 ) க்கு விளக்கமாக இரண்டாம் வசனம் (49:7 ) இருக்கிறது.

மேலும் விளக்கத்திற்கு உங்களது சற்குருவை நாடவும்.

## சூ.ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 2

( ஷைகு - மூரிது ) பகுதி – 1



نَحْدُهُ وَنُصَلِّي عَلَى رَسُولِهِ الْكَرِيمِ

"நாம் அவனை (அல்லாஹ்வை)த் துதிக்கிறோம்; மேலும், அவனுடைய சங்கை பொருந்திய திருத்தூதர் மீது ஸலவாத்து (சோபனம்) சொல்கிறோம்"

ஒரு முஸ்லிம் காமிலான ஒரு ஷைகிடம் (சற்குருவிடம்) முரீதாகாமலே (வழிபடும் வாக்குறுதி பெறாமலே ) ஷரீஅத்தின் ஏவல் விலக்கல்களைக் கட்டுப்பாட்டுடன் ஏற்று அனுஷ்டானம் புரிந்துவருவதனால் அவன் ஈடேற்றம் அடைந்துவிடமுடியுமாயினும்,

அவன்மீது அல்லாஹ்வின் *தஜல்லியாத்துக்கள் (அல்லாஹ்வின் சிபத்துகளென்னும் வருணிப்புகளின் வெளிப்பாடு) வெளியாகவும், ஆத்மானந்தப் பூரணப் பதவிகளை அவன் அடையவும்,"இர்பானே இலாஹீ" என்னும் மெஞ்ஞான நிலையை எத்திக்கொள்ளவும் ஒரு காமிலான ஞான குருவின் வழிகாட்டுதல் அவனுக்கு அவசியமானதாகவே இருக்கிறது.

எவரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துகிறானோ, அவரே நேர் வழிப்பட்டவராவார்; இன்னும், எவனை அவன் வழிகேட்டில் விடுகிறானோ, அவனுக்கு நேர் வழிகாட்டும் உதவியாளர் எவரையும் நீர் காணவே மாட்டீர்" (குர்ஆன் : 18:17) என்ற திருக்குர்ஆன் வசனத்தையும் கருத்தில் கொள்க.

படிப்பின் மூலம் ஷரீஅத்தின் ஞானம் கைகூடிவிடுகிறது; (நல்ல அமல்களைச் செய்யும்) உழைப்பால் ஈடேற்றம் கிட்டிவிடுகிறது. இதே போல் கற்றுக்கொள்வதால் ஆத்ம ஞான அறிவும், உழைப்பால் அல்லாஹ்வை நெருங்கி அதில் கலக்கும் நிலையும் சித்தியாகின்றன.

காமிலான ஷைகு (குருவின்) அடையாளம் :-

காமிலான ஞான குரு யார் என்பதற்கு ஒரு சாதாரண அடையாளம் இதுதான் அவருடைய அருகிலானதும் அல்லாஹ்வைப்பற்றிய நினைவே உண்டாகிக் கொண்டிருக்கும்.

சாதாரணமானவர்கள் ஷைகை முதன் முதலில் சந்தித்ததுமே அவருடைய ஞானத் தத்துவம் எத்தகையது என்பதைத் தெரிந்துகொள்ள முடியாதுதான். எனவே, ஷைகை முதன்முதலில் சென்று கண்டு கொள்வதற்கு முன்னதாக, அவருடைய முரீதுகளில் அறிவாளியும், கல்விமானுமாகிய ஒருவரிடம் சென்று அந்தக் சற்குருநாதரைப் பற்றிய விவரங்களை முதலில் தெரிந்துகொள்வது அவசியமாகும்.

அவர் ஷைகின் ஆத்மஞான அப்பியாச உயர்வு பற்றியும், அவருடைய படித்தரம் பற்றியும், அந்த ஷைகு தன்னுடைய ஷைகுடன் நீண்ட காலம் கலந்திருந்து பயிற்சியடைந்து ' கிலாபத்து ப் பெற்றவர் ( சிஷ்யர்களை ஏற்று அவர்களுக்கு ஞனோபதேசம் செய்ய அனுமதி பெறுதல்) என்றும் தெரிவித்தால் அந்த ஷைகின் கையில் 'பைஅத்து(வழிபடும் வாக்குறுதி)ச் செய்து முரீதாகிக்கொள்ள வேண்டியது.

ஷைகு செய்யிதாக இருக்கவேண்டிய அவசியமில்லை :-

சியாதத்து (நபிபெருமான் (ஸல்) அவர்களின் வமிசத்தினர்-அஹ்லே பைத் ) என்னும் சிறப்பு வேறு ; ஞான வழியின் மகிமை வேறு. சிஷ்யர்களின் லக்ஷியம் காமிலான குருவை அடைவதன்றி வமிசத்தாரின் சிறப்பைத் தேடித் திரிவது அன்று. யாதாமொரு ஒலியாகியவரின் கரத்தைப் பற்றி பிடித்துக்கொள்ளுங்கள்.

அவர் உமர் (ரலி) அவர்களின் வமிசத்தினராயினும் சரியே. (செய்யிதாகிய அஹ்லே பைத் ) அலி (ரலி) அவர்களின் வமிசத்தினராயினும் சரியே" என்று மௌலான ரூமி (ரஹ்) அருளியுள்ளார்கள்.

**ஸூ:பி ஞானப் பொக்கிஷங்கள் 3**

( ஷைகு - மூரிது ) பகுதி – 2



நீங்கள் முரீதானபின் கீழ்க்காணும் போதனைப் படி நடந்து வரவேண்டும்.

1.சதா காலமும் முரீது தன் சற்குருவைத் தரிசனம் செய்துகொண்டே இருக்கவேண்டும். அப்படித் தரிசிப்பதால் முரீதின் அகமியத்துக்கும் சற்குருவின் அகத்துக்கும் தொடர்பு உண்டாகும்; அதனால் சற்குருவின் சிபத்துக்கள் முரீதின் அகத்தில் பிரதிபலித்து முரீதின் அகத்தேயுள்ள மறைவான தீமைகளை விலக்கும்.

அதிர்ஷ்டவசமாகக் சற்குருவின் சந்நிதியில் அவருடன் கூடிக் கலந்திருக்கும் வாய்ப்புக் கிடைத்துவிடுமானால் முரீது தன் குறிக்கோளை விரைவில் எய்த வசதியாய் இருக்கும். முரீது தன் குருநாதருக்கு மரியாதை செய்யும் அளவுக்கேற்ப அவனகத்தே அன்பும் அதிகமாகும். அன்பு வளர வளர முரீதின் நாட்டமும் சம்பூரணமடையும்.

ஷைகைத் தரிசனம் செய்யும் முறையைக் காமிலான சற்குருவிடமே கற்றுக்கொள்ளவேண்டும்.முரீதின் சுய ஆராய்ச்சி இதில் பயன் தராது. சம்பூரணமான சற்குரு ஒருவரை அணுகி ஆத்ம ஞானப் பயிற்சியோ அனுபவமோ பெறாதவர்கள் சிலர், ஆத்ம ஞானப் பயிற்சி ஷரீஅத்துக்கு விரோதமானது என்று கதைகட்டி வருகின்றனர். மரியாதையற்றவன் எப்பதவியையும் அடையாதவனாய்ப் போவதுடன் ஆண்டவனின் ரஹ்மத் என்னும் கருணையையும் பெறத் தகாதவனாய் ஆகிவிடுகிறான்.

2. சற்குருநாதரான ஒரு ஷைகிடம் பைஅத்துப் பெற்று முரீதான பின் நல்ல குணமுடையவராகவும், ஷைகின் பெயருக்குப் பெருமையுண்டாக்குபவராகவும் நடக்கவேண்டியது முரீதின்மீது கடமையாகும்.

கடமையான ஐந்து வக்துத் தொழுகையையும் குறைவற நிலைநிறுத்தி அனுஷ்டித்து வருவதுடன், தஹஜ்ஜுத்' (இரவில் சற்று உறங்கிப் பாதி இரவுக்குப்பின் துயிலெழுந்து தொழும் தொழுகை )

தொழுகையிலும் ஒரு முரீது பூரணமாக ஈடுபட்டுவரவேண்டும்.

தஹஜ்ஜுத் முதல் சுபுஹு வரையில் ஷைகு போதனை செய்த தவக் கிரியைகளை (திக்று அனுஷ்டானங்களை)க் கடைப் பிடித்து வரவேண்டும். அப்படிக் கடைப்பிடிப்பதுடன் அமர்ந்தபடியே முராகபாவில் ( இதன் விவரம் பின் வரும் பதிவுகளில் சொல்ல இருக்கிறேன் ) தூக்கம் மேலிட்டுச் சயனித்தாலும், அதிக நலமாகும். இந்தச் சயனமும் தவத்தில் சேர்ந்தது தான்.

இன்னும் மற்றச் சமயங்களிலும் (எந்நேரமும்) (அதே திக்று) தியானத்தில் இருக்கவேண்டியது முக்கியம். ஏனென்றால், மனிதன் வெளியிடும் சுவாசம் ஒவ்வொன்றும் அவனுடைய வாழ்நாளின் முடிவைக் கணிப்பதாய் இருக்கும்.

அதே மூச்சில் அவன் வாழ்நாள் முடிந்து மௌத்து (மரணம்) நேரிடவும் கூடும். அப்படியாயின் அவன் அல்லாஹ்வைத் தியானித்தவனாக இறப்பதல்லவா பெரும் பாக்கியம்!

இவ்வித அனுஷ்டானத்தில் சந்தேகம் ஏதேனும் உண்டானால், அதைத் தன் சற்குருவிடம் தெரிவித்து சந்தேக நிவர்த்தி செய்து கொள்ளவேண்டும்.

முஜாகிதா (போர்புரிதல்-தன் நப்சின் இச்சைகளுக்கு மாறுதல் செய்வது. அதாவது, ஹக்குடைய காட்சிக்குத் திரையாக நிற்கும், வெளித் தோன்றும் வஸ்துக்களை விலக்குவதில் நப்சுடன் போர்புரிவது ) செய்வதும்,

ரியாலத்து (அப்பியாசம்) செய்வதும் முரீதின் முடிவான இலக்கல்ல. எனினும், அவற்றின் உதவியுடன் கல்பை (அகத்தை) கார்மானம் பெறச் செய்து சம்பூரணமாக்குவதுதான் முடிவான லட்சியமாகும்.

மேலும், அவைகளின் இச்சையின் புரம் கல்பை இழுத்துச் செல்லவிடாமல் தன்னை விட்டும் விலக்குவதே நாட்டம் (முராதத்) ஆக இருக்கும். விரோதிகளை (இயன்ற மட்டிலும்) பலஹீனப்படுத்தி அடக்கித் தன் நாட்டத்தை எய்த முடியுமாயின் அதுவே வெற்றியாய் இருக்கும். இல்லையேல் இன்னும் லட்சியசித்தி அடையவில்லை என்றுதான் அர்த்தம்.

3. ஷைகின் முன்னர் தன் உள்ளமை ஒன்றுமில்லை என்ற அளவுக்கு வந்துவிடவேண்டும். தன் உடல், பொருள், ஆவியால் ஷைகுக்குப் பணியாற்றவேண்டும். ஷைகு தன் சீடர்களிடை நபியைப் போலாய் இருக்கும்.

حديث - الشيخ فِي قَوْمِهِ كَالنَّبِيِّ فِي أُمَّتِهِ

சமுதாயத்திற்குள் அதன் சற்குருவானவர், மக்களுக்குள் நபியைப் போலாயிருக்கும். (ஹதீது)

அவரிடமிருந்து மறுமையின் தேவையைத் தேடவேண்டும். இம்மையின் பலா பலன்கள் எதையும் அவரிடமிருந்து நாடவேண்டாம். அவர் முரீதின் முன்னர் இருப்பதையும் இல்லாமலிருப்பதையும் சமமாகப் பாவித்து அவருக்குரிய மரியாதையைத் தந்து வரவேண்டும்.

ஷரீஅத், தரீகத், ஹகீகத், மஃரிபத் என்னும் நான்கு வகை ஞான நெறிகளை விளக்கிச் செல்லும் தக்கலை பீர் முகம்மது அப்பா அவர்களின் ஞானமணி மாலையின் பாடல்களில் ஒன்று

"குருக்களற்ற ஞானமும் குணங்களற்ற சீடனும்

கருக்களற்ற வித்தையும் களங்கமுற்ற புத்தியும்

உருக்கமற்ற நெஞ்சமும் உணர்ச்சியற்ற விவையெலாம்

சுருக்கமற்ற சோதியைத் தொடர்ச்சியுற்ற தொக்குமே."

சற்குருவில்லாத ஞானமும், நற்குணவொழுக்க மற்ற சீடனு போல்வன, பெருஞ்சோதியைக் கண்டும் பயன்படுத்தப் பார்க்க பேதைமை நிலைக்கு உவமை செய்யப்படும் திறன் சுவைத்தின் புறக்தக்கது.

## ஸூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 4

( ஷைகு - மூரிது ) பகுதி – 3



4. முரீதானவர் தமது வெளிரங்கத்தை ஷரீஅத்தின் சட்டதிட்டங்களைக் கொண்டும், அந்தரங்கத்தை தரீக்கத்தைக் கொண்டும் அழகாக்கிக்கொள்ள வேண்டும். புறம்பேசுவதை விட்டும் விகற்பங்களை விட்டும் விலகிக்கொள்வது அவசியமாகும்.

ஷரீஅத்துக்கு மாறுபாடாக நடக்கும் குருமார்களோடும்,மோட்சானந்த சுகபோகத்தில் மூழ்கி இருக்கும் மஜ்தூபுகளோடும், ஆண்டவன் வழியில் நிலை பெற்றிருக்கும் ஒலிமார்களைப் பரிகசிப்பவர்களோடும் முரீது சேராமல் விலகியிருக்க வேண்டும்.

6. தினந்தோறும் அல்லது வாரம் இரு முறை முரீதீன்களான சிஷ்ய சகோதரர்கள் ஒன்றுகூடித் தம் குருவின் ஷஜ்ராவை ஓதி அதன் தவாபை ஷஜ்ராவில் குறிப்பிட்டுள்ள ஷைகுமார்களின் ஆத்மாவுக்கு எத்திவைக்க வேண்டும். அதைக் கொண்டு முரீதுகளுக்கு ஆத்ம விகாசிதம் அதிகரிக்கும். அதனால் "அன்வாரே ஸர்மதி" எனப்படும் பரஞ்சோதி ஒளிக்கதிர்கள் இடைவிடாது அவர்கள் இதயங்களில் இறங்கிக் கொண்டிருக்கும்.

7 சுலூக் என்னும் தவக் கிரியைகளுக்கு ஒன்பது ஷர்த்துகளுண்டு. அவற்றுள் நான்கு வெளிரங்கம் சம்பந்தப்பட்டவை; ஐந்து அந்தரங்கம் சம்பந்தப்பட்டவை. அவை வருமாறு

மிதமாய் உண்ணல் - மிதமாய்ப் பேசல் - மிதமாய் உறங்குதல் - பொது ஜனங்களுடன் அதிகமும் கலவாதிருத்தல் ஆகிய நான்கும் வெளிரங்கத்தோடு தொடர்புள்ளவை,

உண்மை - அல்லா(ஹ்)விடமே முழுப் பொறுப்பையும் ஒப்படைத்தல் - திட்டம் - பொறுமை- உறுதி ஆகிய ஐந்தும் அந்தரங்கத்தோடு தொடர்புள்ளவை. இந்த ஐந்துக்கும் விபரமாவது :-

1) சத்தியம் (சித்கு) :-

சத்தியம் என்பது அனைத்தையும் படைத்த அல்லா(ஹ்)விடமும், அண்ட சராசரங்களாகிய சிருஷ்டிகளிடமும் உண்மையாய் நடந்துகொள்வது (சகலவற்றிலும் சத்தியவந்தனாய் இருப்பது).

2) அல்லா(ஹ்)விடமே பொறுப்புகளை ஒப்படைத்தல் (தவக்கல்):--

சகல நிலைமைகளிலும் அல்லா(ஹ்)வின் மீது நம்பிக்கை வைத்துப் பொறுப்பை அவனிடமே விட்டுவைப்பது.

3) திட்டம் (எக்கீன்)

திட்டம் என்பது நன்மையும் தீமையும் அல்லா(ஹ்)வின் புறத்தாலேயே உண்டாகுபவை என்பதை உள்ளத்தில் சந்தேகமின்றி திட்டப்படுத் திக்கொள்வது. எல்லாம் அவன் செயல் என்று உறுதிகொள்வதாகும்.

4) பொறுமை (ஸப்று)

இரகசிய பராசியமாகிய சகலவிதக் கஷ்டங்களையும் மனப் பொருத்தத்துடன் சகித்திருப்பது. ஏனெனில், பொது ஜனங்களுக்கு ஆத்மார்த்த அந்தரங்கங்கள் சுலபமாக விளங்கிவிடாது. ஆனதால், அவர்கள் சதாவும் அக நாட்டமுடையவர்களுக்கு மாறுபட்டவர்களாகவே இருக்கிறார்கள். இதனால், அவர்களில் பலர் ஞான அறிவு பெற்ற ஆரிபீன்களாகிய சாதுக்களுக்கு ஊறு செய்கிறார்கள். ஞானிகளாகிய அவர்கள் யார் என்பதும், அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதும் இந்த ஜனங்களுக்குத் தெரிவதில்லை.

5) உறுதி (அதுமு)

எண்ணங்களையும் நாட்டங்களையும் கொண்ட சுலூக் என்னும் இப்பாதையிலே உயிரிழக்க வேண்டியதிருக்கும் என்ற நிலைமை உண்டானாலும் வழி பிசகாத திடச்சித்தம் அவசியமானதாகும். இதுதான் ஞானிகளின் ஒருமைப் பிடியாய் இருக்கும். இந்த உறுதியால்தான் மகான்களெல்லாம் சித்திபெற்று ஜெயமடைந்தார்கள். இவ்விதப் பாக்கியங்களை அடையப்பெற நம்பெருமான் ரஸூலே கரீம் முஸ்தபா (ஸல்) அவர்களின் திரு அருள் இன்றியமையாததாகும்

## **ஸூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 5**

( ஷைகு - மூரீது ) பகுதி – 4



ஒரு முரீது தனது ஆன்மீக குருவுடன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பது தொடர்பாக ஸூஃபி மகான்கள் மிக ஆழமாக ஆய்வு செய்து சில விதி முறைகளை அமைத்துள்ளார்கள்.

அந்த விதி முறைகளைப் பேணி நடக்கும் ஒரு முரீது பல வருடங்களில் அல்லாஹ்விடமிருந்து பெற வேண்டிய ஆன்மீகப் பரிசில்களை ஒரு சில மாதங்களிலேயே பெற்றுக் கொள்வான் என்றும், "பைஅத்" ஞான தீட்சையின் இலட்சியத்தை அடைந்து கொள்வான் என்றும்,

ஒழுக்க விதிகளைப் பேணாத ஒரு முரீது எவ்வளவுதான் வணக்கவழிபாடுகள் செய்தாலும், எத்தனை வருடங்கள் அயராது முயற்சி செய்தாலும் எந்த ஒரு பயனும் பெற மாட்டான் என்றும் திட்டவட்டமாகக் கூறியுள்ளார்கள்.

இரண்டு வகை ஒழுக்கங்கள்.

ஒரு முரீதுக்கான ஒழுக்கங்களை ஸூஃபி மகான்கள் இரண்டு வகைகளாக வகுத்துள்ளனர்.

1) வெளிரங்கமான ஒழுக்கங்கள்.

2) உள்ரங்கமான ஒழுக்கங்கள்.

ஒழுக்கம் 01:

முரீது தனது சற்குருவை தனது சக்திக்கேற்றவாறு கண்ணியம் செய்தல். அதாவது பள்ளிவாயலுக்கு வெளியே பாதணிகளை கழட்டுவது போல் அவர் தங்கியுள்ள இடத்திற்கு வெளியே பாதணிகளைக் கழட்ட வேண்டும்.

"நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அல்லாஹ்வுடன் உரையாடுவதற்காக "தூர்ஸீனா" மலைக்குச் சென்ற போது, "மூஸாவே! பரிசுத்த இடத்திற்கு வந்துவிட்டீர்கள். ஆகையால் உங்கள் பாதணிகள் இரண்டையும் கழட்டுங்கள் என்று அல்லாஹ் அவர்களுக்குக் கூறினான். அவர்கள் அவ்வாறே செய்தார்கள்.

இதை ஆதாரமாகக் கொண்டுதான் ஒரு ஷெய்கு ஆன்மீகவாதி ஞான சற்குரு ஒரு ஸெய்யித் - நபீ வழித்தோன்றல் - முதலானோரிடம் செல்வோரும், கண்ணியத்துக்குரிய இடங்களுக்குச் செல்வோரும் பாதணிகளைக் கழட்டும் வழக்கம் தோன்றியுள்ளது.

சற்குருவின் முகத்தை முரீது பார்ப்பது வணக்கமாக இருந்தாலும் கூட முரீது இதில் கூட சற்று அதிக ஒழுக்கம் பேண வேண்டும். அதாவது நாண உணர்வோடுதான் குருவின் முகம் பார்க்க வேண்டும். ஒரு நண்பனின் முகம் பார்ப்பது போல் பார்த்தலாகாது.

ஒழுக்கம் 02:

முரீது தனது கால்களால் "ஷெய்கு" அவர்களின் படுக்கை விரிப்பை மிதித்தல் கூடாது. தேவை ஏற்பட்டால் அவரின் படுக்கையை காற்பாதத்தால் மிதிக்காமல் முழங்கால்களால் மிதித்து நடந்து செல்ல முடியும்.

அவர் தொழுகைக்காகப் பயன்படுத்தும் "முஸல்லா" தொழுகை விரிப்பை சிஷ்யன் பயன்படுத்துதல் கூடாது.

அதேபோல் அவர் பாவிக்கும் "ஸுப்ஹத்" ஜெபமாலையை சிஷ்யன் பாவித்தல் கூடாது.

அவரின் தலையணையில் உறங்குவதும், அவருக்கு உடைகளை உடுத்தாட்டுவதும், அவர் முரீதுக்கு ஷேட், செருப்பு, சாரன் போன்றவற்றை அன்பளிப்புச் செய்தால், அவற்றை முரீது பாவிக்கும் வேளையில் பாவம் செய்வதும் கூடாது. இதனால் மற்ற நேரம் பாவம் செய்யலாம் என்று விளங்கிக் கொள்ளக் கூடாது.

ஒழுக்கம் 03:

முரீது சற்குருவின் நேரில் இருக்கும் போது தலை குனிந்து மௌனியாக இருப்பதும், சற்குருவிடம் அனுமதி பெறாமல் பேசுவதும், அவர் இருக்கும் சபையில் சிரிப்பதும், கொட்டாவி விடுவதும், உறங்குவதும், அவருடன் உண்பதும், அவர் இருக்கும் போது அவரின் அனுமதியின்றி உண்பதும் கூடாது.

ஒழுக்கம் 04:

சற்குரு விவாகரத்துச் செய்த பெண்ணை முரீது திருமணம் செய்வதும், அல்லது அவர் மரணித்த பின் அவரின் மனைவியை திருமணம் செய்வதும் கூடாது.

முரீது சற்குருவின் கை,கால்களை முத்தமிடுவது ஆகும். இது அவருக்குச் செய்யும் மிகப் பெரிய கண்ணியமுமாகும். ஆனால் இவ்வழக்கம் சற்குருவும், முரீதும் இருக்கும்.ஊரிலுள்ள ஸூஃபிகளிடம் இருந்தால் மட்டுமே.

முரீது குருவின் கை கால்களை முத்தமிடுதல் மிகச் சிறந்த கண்ணியமாயினும் இவ்வழக்கம் தொன்று தொட்டு இல்லாத ஊரில் புதிதாக செய்யப்பட்டால் குழப்பவாதிகளான வஹ்ஹாபிகள் குழப்பத்தை ஏற்படுத்தலாம்.சுருங்கச் சொன்னால் ஒரு முரீது தனது சற்குருவுக்கு அவரின் பாதணியாக இருக்க வேண்டும்.

ஒழுக்கம் 05:

ஒரு முரீது பொதுவாக எல்லாக் காரியங்களிலும் தனது சற்குருவுக்கு அடி பணிந்து செயல்பட வேண்டும். அவர் செய்யுமாறு சொல்வதை செய்ய வேண்டும். செய்ய வேண்டாம் என்று விலக்குவதை தவிர்ந்து நடக்க வேண்டும். முரீது தனது விருப்பத்தை சற்குருவின் விருப்பத்தில் விட்டு விட வேண்டும்.

சுருங்கச் சொன்னால் (உனது விருப்பம், தெரிவு, சிந்தனை, ஆய்வு அனைத்தையும் தூக்கி எறிந்துவிட்டு அனைத்தையும் குருவின் விருப்பத்தில் விடு என்றே சொல்ல வேண்டும்)

ஸூஃபி மகான்கள் அதிகமாகப் பின்வருமாறு சொல்லிக் கொண்டே இருப்பார்கள்.முரீதே ! நீ உனது சற்குருவிடம் மையித்தை - மரணித்தவனை குளிப்பாட்டும் ஒருவனிடம் அது இருப்பது போன்று இருந்து கொள்.

அதாவது மரணித்தவனுக்கு சுயவிருப்பம் எதுவும் இருக்காது. குளிப்பாட்டுபவன். எந்தப் பக்கம் அதைப் புரட்டினாலும் அந்தப்பக்கம் அது புரளும். இவ்வாறுதான் ஒரு முரீது தனது சற்குருவோடு இருந்து கொள்ள வேண்டும்.

ஆதார நூற்கள் :-

1) துஹ்பதுஸ் ஸாலிகீன்: ஆசிரியர்: அஸ்ஸம்னூதீ

2) அல் அன்வாறுல் குத்ஸிய்யஹ்: ஆசிரியர்: அப்துல் வஹ்ஹாப் அஷ்ஷஃறானீ

3) ஈகாளுல் ஹிமம்: ஆசிரியர்: இப்னு அஜீபா

4) ஹகாயிக் அனித் தஸவ்வுப், ஆசிரியர்: அப்துல் காதிர் ஈஸா

## ஸூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 6

(கலிமாவின் விளக்கம் ) பகுதி - 1



ஷைகுனா ஸதக்கத்துல்லாஹ் ( ரலியல்லாஹூ அன்ஹூ ) அவர்கள் .

( ஆதார நூல் : தஸ்ஹீஹூல் ஜலாலா- )

மனப்பேய் பிடித்த மடையர்களுடன் கூடி மார்க்கத்திற்கு மாறு செய்யாமல், மனதுடன் யுத்தம் செய்யும் மகான்களுடன் கூடி மார்க்கப்படி நடக்க உதவி செய் மாலிக்கி எவ்மித்தினே !

லா இலாஹ இல்லல்லாஹ் முஹம்மது ரஸூலுல்லாஹ்

لا اله الله محمد رسول الله

நம்மில் ஒவ்வொரு நபர்களும் கலிமாவிலுள்ள எழுத்துக்களின் உச்சரிப்புகளையும் நுணுக்கங்களையும் அவசியமாக அறிந்து வைத்து கொள்ள வேண்டும் !

நாம் சொல்லும் கலிமாவின் வார்த்தை உச்சரிப்புகள் சரியா ? தவறா ? என்பதை அறிய கண்டிபா படிக்க வேண்டி செய்தி .....

" லா இலாஹ " لا اله - என்று கூறும் பொழுது அலிஃபை ' இ ' ( الف)என்று அழுத்தங்கொடுத்து தொண்டையால் உச்சரிக்க வேண்டும் . அவ்வாறின்றி " இ " (الف)-என்பதை " யி " (ي) -என்று " யே "யுடைய உச்சரிப்பைக் கொண்டு கூறினால் அது கலிமாவாக ஆகாது.

இவ்வாறே-

[اهدنا الصراط المستقيم ]

" இஹ்தினஸ்ஸிராதல் முஸ்தகீம் " என்பதில் " இ " (الف)-என்பதை அழுத்தாமல் " யே " (ي)-யாக ஓதினால் அதாவது- [يهدنا الصراطالمستقيم]( "யஹ்தினஸ்ஸிராதல் முஸ்தகீம் ") என்று ஓதினால் அது சூரத்துல் ஃபத்திஹாவாக ஆகாது . பாத்திஹா கூடாவிட்டால் தொழுகையும் கூடாது .

மேலும் " அல்லாஹ் " ( الله ) -என்பதை உச்சரிக்கும் பொழுது இரண்டு (لا )-லாமாகவே உச்சரிக்க வேண்டும் .மாறாக (ض)--ளாவாகவோ ,(ظ )- ளோயாகவோ ,உச்சரிக்கக் கூடாது .இதில் பெரும்பாலானவர்கள் தவறு செய்கிறார்கள் .இந்தத் தவறு ஏற்படுவதற்குரிய காரணத்தைக் கவனிக்க வேண்டும் . அதாவது - "அல்லாஹ் " ( الله )- என்ற வார்த்தை - ஜலாலத்துடைய - வல்லமைமிக்க வார்த்தை என்று கூறப்படும் .

இதனை வலுப்பமாக,கனமாகச் சொல்வது சுன்னத் . இவ்வாறு சொல்ல வேண்டுமென்பதற்காக நுனி நாவை முன் பல்லையடுத்த மேல் முரசில் சேர்த்துச் சொல்வதற்காக, நுனி நாவைச் சற்று அதிகமாக உயர்த்தி அழுத்திச் சொல்வதால்,

" ளோ " (ظ) யுடைய உச்சரிப்பிலும் அல்லது நாவை அலகு பக்கத் சாய்த்து " ளா " (ض) துடைய உச்சரிப்பிலும் கூறுகின்றனர் . இது பெரும் தவறாகும் .

" அல்லாஹ் "( الله )- என்பதை " லா "(لا )- முடைய உச்சரிப்பிலேயே மெல்லினமாகவே உச்சரிப்பதால் ,அதனைக் கனப்படுத்திச் சொல்வது மட்டும் தான் விடுபட்டு விடுகிறது . பொருளில் தவறு ஏற்படுவதில்லை . ஆனால் அதனை " ளோ" (ظ) -யாக அல்லது " ளா "(ض)- தாக உச்சரிப்பதில் பொருள் மாற்றம் ஏற்பட்டு விடுகிறது . இது பெரும் தவறாகும்.

## சூ:ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 7

"ஷஹாதத் கலிமா " என்று ஏன் பெயர் வந்தது ?



"இஸ்லாமாகிறது ஐந்து காரியங்களின் மீது அமைக்கப் பட்டுள்ளது. அவற்றில் முதலாவது. லாஇலாஹ இல்லல்லாஹ் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எந்த நாயனுமில்லை என்று சாட்சி சொல்வதும், முஹம்மதுர் ரசூலுல்லாஹ்- நிச்சயமாக முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வுடைய தூதரென்று சாட்சி சொல்வதுமாகும் இதற்கு 'ஷஹாதத் கலிமா' என்று பெயர் வந்ததற்கு அல்லாஹுதஆலா குர்ஆனில் கூறுகின்ற பின்வரும் ஆயத்து காரணமாகும்:

شَهِدَ اللَّهُ أَنَّهُ لَا إِلَٰهَ إِلَّا هُوَ وَالْمَلَائِكَةُ وَأُولُوا الْعِلْمِ قَائِمًا بِالْقِسْطِ لَا إِلَٰهَ إِلَّا هُوَ الْعَزِيزُ الْحَكِيمُ

'நபியே! அல்லாஹ் சாட்சி கூறுகின்றான்: நிச்சயமாக அவனைத்தவிர வேறு நாயன் இல்லை. அன்றி, (அவ்வாறே) மலக்குகளும், (வேத ஞானம் பெற்ற) கல்விமான்களும், நீதத்தை நிலை நிறுத்தி, அவனைத்தலிர வேறு நாயன் இல்லை (அவன் யாரையும்) மிகைத்தோன் ஞானமுடையோன் (என்று சாட்சி கூறுகின்றனர்)( குர்ஆன் 3:18 )

இந்த ஆயத்தின் மூலம்தான் ஷஹாதத் கலிமா (சாட்சி கூறும் கலிமா) என்று பெயர் ஏற்பட்டது.

இந்தக் கலிமாவானது, நான்கு வேதங்கள், மற்றுமுள்ள சுஹு:ஃபுகள் அனைத்தின் ஞானங்களையும், இரகசியங்களையும் உள்ளடக்கியதாகும்.

ஏழு நரகங்களின் அமளிகளை விட்டும் விலகுவதும் எட்டு சொர்க்கங்களின் மகிழ்ச்சியை அடைவதும் இந்தக் கலிமாவைக் கொண்டேயாகும்.

ஒரு போது சிலர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் ரசூலே! எல்லோரும் இக்கலிமாவையே கூறுகிறார்கள்: எனவே, எங்களுக்கு விசேஷமாக ஏதேனும் ஒன்றைச் சொல்லித் தாருங்கள் என்று கேட்டார்கள்.

அப்பொழுது நபியவர்கள், "மனிதர்களே! நான் சொல்லியிருப்பவை அனைத்திலும் எனக்கு முன்னுள்ள நபிமார்கள் சொன்னவை அனைத்திலும் மிகச்சிறந்தது "லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமா தான்" என்று கூறினார்கள்.

கண்ணால் கண்டதற்குத் தான் சாட்சி சொல்லுதல் என்று கூறப்படும். காணாத ஒன்றுக்கு எப்படி சாட்சி சொன்னால் அது பொய் சாட்சி எனப்படும். கண்ணால் காணாத அல்லாஹ்விற்கு சாட்சி சொல்லுதல் என்பதன் கருத்தாகிறது,

இந்தப் பிரபஞ்சத்தில் காணப்படுகின்ற ஒவ்வொரு பொருளும் அல்லாஹ்வுடைய சிஃபத்துகளை வெளிப்படுத்தக் கூடியவையாகவும், அவனைப்பற்றி அறிவிக்கக் கூடியவையாகவும் இருக்கின்றது.

பிரபஞ்சத்தில் காணுகின்ற அனைத்தும் அவனுடைய ஆட்சியல்லாமல் வேறில்லை.எனவே அவனைப்பற்றி உறுதி என்பது உண்டாகி விட்டபடியால் நேரில் கண்டதுபோல் சாட்சி சொல்ல வேண்டியதாயிற்று.

இதன்படி ஷஹாதத் கலிமாவின் பொருளாகிறது, "நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயனில்லை என்று சாட்சி சொல்கின்றேன். மேலும் நிச்சயமாக முஹம்மது (ஸல்) அவர்கள் அவனுடைய திருத்தூதராக இருக்கிறார்கள் என்று அறிந்து சாட்சி சொல்கின்றேன்" என்பதாகும்.

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 8



கலிமாவுக்கு ஷரிஅத், தரீகத், ஹகீகத், மஃரிஃபத் என்னும் நான்கு வழிகளில் நான்கு விதமான விளக்கங்கள் .

- ஷரீஅத்தாகிறது ரசூலுல்லாஹி (ஸல்) அவர்களுடைய சொல்லாகும். -தரீகத்தாகிறது அவர்களுடைய செயலாகும்.

-ஹகீகத்தாகிறது, அவர்களுடைய (ஹால்) நிலையாகும். -மஃரிஃபத்தாகிறது அன்னாருடைய (ஸிர்ரு) இரகசியமாகும்.

இந்த நான்கும் ஒன்றை ஒன்று பிரியாமல் தொடர்புள்ளவையாகும்.

உதாரணமாக : கடலிலுள்ள சிப்பியில் மேல் ஓடு, சதை, எலும்பு, முத்து ஆகியவை இருக்கின்றன. முத்துக்குளிப்பவன் முத்தை எடுக்க நாடினால் சிப்பியிலுள்ள எல்லாவற்றையும் சேர்த்து எடுத்தால் தான் முத்தை எடுக்க முடியும்.

1) ஷரீஅத்தின் படி கலிமாவின் பொருள் :

لا مَعْبُودَ بِحَقّ فِي الْوُجُودِ إِلَّا الله

"பிரபஞ்சத்தில் உண்மை கொண்டு வணங்கப்படுவதற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருமில்லை" என்பதாகும்.

2) தரீகத்தின் படி கலிமாவின் பொருள்:

لَا فَاعِلَ إِلَّا اللهُ

"அல்லாஹ்வைத் தவிர செய்து முடிப்பவன் வேறு எவருமில்லை" என்பதாகும்.

3) ஹகீகத்தின் படி கலிமாவின் பொருள்:

لَا مَقْصُودَ إِلَّا اللهُ

"அல்லாஹ்வைத் தவிர நாடப்படுகிறவன் வேறு எவருமில்லை" என்பதாகும்.

4) மஃரிஃபத்தின் படி கலிமாவின் பொருள்:

لَا مَوْجُودَ إِلَّا اللهُ

"அல்லாஹ்வைத் தவிர உண்மையான உள்ளமையுடையவ என்பதாகும். வேறு எவருமில்லைட்

கலிமாவின் துவக்கத்தில் 'லா' (இல்லை) என்ற எழுத்தை வைத்ததற்குரிய காரணம். அடியானுடைய இதயத்தில் எப்பொழுதும் அநிய்யத், கைரிய்யத் غيرية அனாநிய்யத் (தானென்ற, வேறென்ற, நானென்ற) அகம்பாவ அழுக்குகள் சேர்ந்து கொண்டே இருப்பதால் அவற்றை இல்லை' என்ற எழுத்தைக் கொண்டு முதலாவதாக சுத்தப்படுத்தி, பிறகு "இல்லல்லாஹ்" என்ற வாசகத்தின் மூலம் அல்லாஹ்வை அதில் தரிப்படுத்துவதற்காக வைக்கப்பட்டதாகும்.

இதயம் என்பது ஒரு பாத்திரம், அதில் வேற்றுமை என்பது நிரம்பியிருந்ததால் அதனை 'லா' (இல்லை) என்பதைக் கொண்டு இல்லாமலாக்கி பிறகு தவ்ஹீத் என்னும் ஓர்மையை அதில் உண்டாக்குவதற்காக 'இல்லா' என்ற தரிபடுத்துதலுடைய எழுத்தைத் கூறி, அதன் பிறகு அல்லாஹ் என்பதைக் கூறும்பொழுது வேற்றுமை நீங்கி தரிபடுத்துதல் உண்டாகி விடுகிறது.

ஒரு பாத்திரத்தில் ஒரு பொருள் நிரம்பி இருந்தால் மற்றொரு பொருள் அதனுள் செல்லாது. முந்தியதை எடுத்தால் தான் மற்றொன்றைப் போட முடியும். அவ்வாறே இதயத்திலுள்ள அழுக்கை நீக்கும் பொழுதுதான் தூய்மை என்பது அதில் நுழையும்

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 9

( ஷரீ அத், தரீக்கத்.மஃரிபத், ஹகீகத் )



ثُمَّ جَعَلْنَاكَ عَلَىٰ شَرِيعَةٍ مِنَ الْأَمْرِ فَاتَّبِعْهَا وَلَا تَتَّبِعْ أَهْوَاءَ الَّذِينَ لَا يَعْلَمُونَ

சர்வ காரியத்திலும் உம்மை ஒரு ஷரீ அத்தின் மீது நாம் ஆக்கியிருக்கிறோம். அதைப் பின்பற்றி ஒழுகுவீராக குர்ஆன் : (45 : 18)

நாம் காணும் பொருட்கள், நமது எண்ணங்கள், செயல்பாடுகள் அனைத்திலும் உயர்தரம், இடைத்தரம், கடைத்தரம் என்று பல தரங்கள் இருப்பதைக் காணுகிறோம் அந்த நியதிக் கேற்ப இறைப்பாதையில் நடைபோடும் போதும் அதில் நான்கு தரங்களைக் காணலாம்.

1. ஷரீ அத், 2 தரீக்கத், 3. ம:ரிபத், 4. ஹகீகத்

நமது உறுப்புகளை இறைவன் அனுமதித்த வழிகளில் நடைபோடச் செய்த இறைவன் அனுமதிக்காதவற்றிலிருந்து கட்டுப்படுத்திக் கொள்வதற்கு "ஷரீ அத் " (சட்டம்) என்றும்

நமது உள்ளங்களை மேற்கூறிய கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதற்கு "தரீக்கத்" (உண்மையான பாதை) என்றும் கூறப்படும்

உள்ளத்தை அந்த நிலையிலிருந்து சற்று முன்னேறச் செய்து அல்லாஹ் அல்லாத எந்த பொருளையும் நினைவில் இருத்தாது பழக்குவதற்கு "ம:ரிபத்" (இறைவனை அறிந்துகொள்ளுதல்) என்றும்

இன்னும் சற்று முன்னேறி ஹக் ஒருவனைத் தவிர தன்னையே கூட ஒரு பொருளாக நினைக்காமல், இறையன்பில் தோய்ந்து போவதற்கு "ஹகீகத்" என்றும் கொள்ளல் வேண்டும்

இந்த நான்கும் ஒன்றன் பின் ஒன்றாக அடையும் நிலைகளாகும். இவை ஒரு தளத்தின் மீது எழுப்பப்படும் மற்றொரு தளத்தைப் போன்றாகும். கீழ் தளத்தைக் கட்டாது மேற்தளத்தைக் கட்ட இயலாது.

ஷரீ அத்தைப் பின்பற்றாது தரீக்கத்தில் நடைபோட இயலாது. தரீகத்தைப் பேணாமல் ம:ரிபத்தை அடைய முடியாது. ம:ரிபத்தைக் கடக்காமல் ஹகீகத்தைதைக் காண முடியாது.

உவமை கூறி இந்த நான்கின் எதார்த்தத்தையும் புரிய வைப்பதாக இருந்தால் ஷரீ அத்தைப் பால் என்றும், அடுத்த நிலைகளை முறையே தயிர் வெண்ணெய், நெய் என்றும் நயம்பட உரைக்கலாம்.

ஷரீ அத்தை தேங்காய் மட்டை என்றும், அடுத்த நிலைகளை முறையே தேங்காய் ஒடு, தேங்காய், தேங்காய் எண்ணெய் என்றும் பகுத்துணரலாம்.

ஷரீ அத்தை மரம் என்றால் தரீக்கத் கிளை, ம:ரிபத் இலை, ஹகீகத் பழம் என்றும் கொள்ளல் வேண்டும்.

நாம் செய்யும் ஒவ்வொரு அமல்களிலும் இந்த நான்கு நிலைகளையும் பகுத்துணரலாம். தொழுகையை உவமைக்காக நாம் எடுத்துக் கொள்வோம்.

ஒரு மனிதன் தக்பீர் கட்டியது முதல் ஸலாம் கொடுக்கும் வரையுள்ள செயல்பாடுகள் அனைத்தையும் முறையாகச் செய்தான். முறையாக கிராஅத் ஓதினான், ருகூஉ ஸுஜுது செய்தான். அத்தஹிய்யாத்து ஒதினான். ஆனால் உள்ளம் மட்டும் அவன் சற்று முன் பறிகொடுத்து விட்ட பணப்பையைப் பற்றியே ஏங்கிக்கொண்டிருந்தது. ஷரீ அத் முறைப் பிராகரம் இவன் தொழுகை செல்லத்தக்கதாக் ஆகிவிடும்.

மற்றொரு மனிதன் மனதை அடக்கிப் பயிற்சி பெற்றவன். அவன் தனது கவனத்தை

வேறெதிலும் செலுத்தாது கிராஅத்திலும், ருகூஉ ஸுஜுதில் ஒதப்படும் தஸ்பிஹ்களிலும், அத்தஹிய்யாத்திலும் மனதை நிலைபெறச் செய்தான். இவன் தரீகத் முறையில் தொழுதவனாகக் கருதப்படுவான்.

இன்னொரு மனிதன் இறை அன்பில் தோய்ந்தவன் நீதிபதி முன்னால் நிற்கும் குற்றவாளியைப் போன்று, மன ஓர்மையுடன் இறைவன் முன்னால் நிற்கிறான்.

தொழுகையின் ஒவ்வொரு செயல்களிலும் 'இறைவா! நீ என்னை அங்கீகரிக்க வேண்டும். எனக்கு நீ வேண்டும். இதோ நான் உன் பக்கம் வருகிறேன் என்று அவன் கெஞ்சுவதைப் போன்றிருக்கிறது. இவனது நிலைக்கு ம:ரிபத் என்று கூறலாம்.

நான்காமவனின் நிலை காதலியைக் கண்டுவிட்ட காதலனின் நிலைக்கு ஒத்ததாக இருந்தது. அவன் என்னென்னவோ செய்கிறான். என்னென்னவோ பேசுகிறான் அனைத்திலும் அவளைத் திருப்திப்படுத்துவதே நோக்கமாக இருக்கிறது.

அது போன்று தொழும் ஒருவனின் நினைவு இறைவனைச் சுற்றியே வட்டமிடுகிறது. இறைவன் குனி என்றால் இவன் குனிகிறான். நிமிரு என்றால் நிமிருகிறான். ஓது என்றால் ஓதுகிறான். மௌனியாக இரு என்றால் மௌனியாக இருக்கிறான். திரும்பு என்றால் திரும்புகிறான். ஒடு என்றால் ஓடுகிறான்.

அந்த நேரத்தில் அவன், தான் எங்கே இருக்கிறோம் என்பதை மறந்தான். தனது கவுரவத்தை மறந்தான். ஏன்? அவன் தன்னையே கூட மறந்தான். தன்னை ஒரு பொருட்டாகவே கருதவில்லை அவனது ஒவ்வொரு அசைவிலும் இறைவன்தான் தென்படுகிறான். இவனைத்தான் ஹக்கைக் கண்டு கொண்டவன் என்று குறிப்பிடப்படுகிறது.

மனத்தூய்மைக்கே முதலிடம் :-

ஷரீ அத் முறைப் பிராகாரம் தொழுதவன், அவன் தன் மீதுள்ள கடமை நீங்கப் பெற்றாலும், அவன் உள்ளத்தை ஒன்றச் செய்த அளவே கூலி அளிக்கப்படுவான்

ஒரு சமயம் ஹள்ரத் அலி (ரலி) அவர்கள் கூபா நகரின் பள்ளிவாசலொன்றில் அமர்ந்திருந்தார்கள். அப்போது ஒரு கிராமவாசி அப்பள்ளி வாசலுக்கு வந்து விரைவாகத் தொழுது விட்டுத் திரும்பினார் அதைக் கண்காணித்துக் கொண்டிருந்த ஹள்ரத் அலி (ரலி) அவர்கள் அந்தக் கிராமவாசியைக் கூவி அழைத்தார்கள்

"நண்பரே! தொழுகையை இவ்வளவு அவசரமாகத் தொழுகலாகாது" என்று கூறி, அவருக்கு ஒவ்வொரு செயல் முறைகளையும் நிதானமாகச் செய்யும் முறையைக் கற்றுக் கொடுத்தார்கள்

அவரைத் திரும்பவும் தொழுது வருமாறு பணித்தார்கள். அந்தக் கிராமவாசியும் ஹள்ரத் அலி (ரலி) அவர்கள் காட்டித்தந்ததைப் போன்றே தொழுது திரும்பினார்.

அப்போது ஹள்ரத் அலி (ரலி) அவர்கள் "நண்பரே! பாராட்டுக்கள் இப்போதுதான் நீர் முறையாகத் தொழுதீர்" என்று கூறினார்கள்.

அதைச் செவியுற்ற அந்த கிராமவாசி அமீருல் மு. ஃமினீன் அவர்களே! நீங்கள் எப்படி வேண்டுமானாலும் நினைத்துக்கொள்ளுங்கள். ஆனால் எனது கணிப்பில் நான் தொழுத முதல் தொழுகையே சிறந்ததாகப்படுகிறது. ஏனெனில் அது அல்லாஹ்வுக்காக மட்டும் தொழுகப் பெற்றது. எனது இரண்டாவது தொழுகை தாங்கள் குறைகண்டுவிடக் கூடாதே! என்ற எண்ணத்தில் நிறைவேற்றப்பட்டது என்று அக்கிராமவாசி கூறினார்.

அவர் மனத்தூய்மைக்கு முதலிடம் அளித்ததை அறிந்த ஹள்ரத் அலி (ரலி) அவர்கள் வாயடைத்துப் போனார்கள்.

இதனாற்றான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "அமல்களெல்லாம் எண்ணங்களைக் கொண்டே மதிப்பிடப்படுகிறது" என்று கூறினார்கள்

நூல் : புஹாரி , அறிவிப்பவர்: ஹள்ரத் உமர் (ரலி)

தரீ கத் கூறுவதைப் போன்று உள்ளத்தைப் பண்படுத்தாவிடில் நல்லமல்களும் பாழாகும் ஆபத்து உள்ளது. நல்லமல் செய்த ஒருவர் பெருமை கொள்ளும்போது அவர் செய்த நல்லமல்களின் பலா பலன்கள் அனைத்தும் பாழய்ப் போய்விடுகின்றன. பிறர் போற்ற வேண்டும் என்று எண்ணிச் செய்யும் கருமங்கள் அனைத்தும் கானல் நீராக மாறி விடுகின்றன.

ஒரு உபகாரத்தைச் செய்துவிட்டு அதைச் சொல்லிக் காட்டுவதும், அந்த உபகாரம் பெற்றவரை வேதனைப்படுத்தும் வார்த்தைகளைக் கொண்டு சீண்டி விடுவதும் உபகாரத்தின் நன்மையைக் கெடுத்துவிடும். இவைகளெல்லாம் திருக்குர்ஆனின் அறிவிப்புக்களாகும். தரீ க்கத் மூலம் மனப் பயிற்சி பெறாதவர்க்கே இத்தகைய கெடுதிகள் ஏற்படுகின்றன.

உள்ளத்தின் சீர்கேடே எல்லா தீமைக்கும் காரணமாகும். கோபத்தை அடக்கிப் பழகாதவன் அடுத்தவர்களுக்கு அநியாயம் செய்து விடுகிறான். ஆசையை அடக்கத் தெரியாதவன் பல தவறுகளுக்கு ஆளாகிவிடுகிறான் கஞ்சத்தனத்தில் ஊறிப்போன உள்ளம் ஜக்காத், ஹஜ் கடமைகளைத் தள்ளிப்போடுகிறது. அதனால் சில வேளைகளில் அவற்றைச் செய்ய சந்தர்ப்பமே கிடைக்காமல் போய்விடுகிறது.

மனம் ஒரு குரங்கு' என்று கூறப்படுவதை நாம் செவியுற்றிருக்கிறோம் அந்த மனத்தை துர்க்குணங்களிலிருந்து இறக்கி, நற்குணங்களுக்கு பயிற்சி அளிக்கும் தரீ க்கத் முறைப் பயிற்சி ஒவ்வொரு மனிதனுக்கும் இன்றியமையாததாகும்

தரீ க்கத் பயிற்சி

தரீ க்கத்தின் நோக்கம் மனதைப் பண்படுத்துவது. அல்லாஹ்வைப் பற்றிய பயத்தை மனத்துள் நிலைபெறச் செய்வது. அதற்குச் சிறந்த வழி அல்லாஹ்வை அடிக்கடி திக்ருச் செய்தாகும்.

நினைத்த போதெல்லாம் ஒரு பாடத்தை நினைவில் கொண்டு வர எண்ணும் மாணவன் முதலில் அந்தப் பாடத்தை ஒன்றுக்கு நூறு தடவைகள் திரும்பத் திரும்பக் கூறி மனதில் பதிய வைக்கிறான் அதன் பின்னர் அவன் அந்தப் பாடத்தை நினைத்த போதெல்லாம், நாவு தயங்காமல் சொல்கிறது.

அது போன்றே இறைவனைப் பற்றிய எண்ணம் எல்லா நேரத்திலும் உள்ளத்தில் இடம்பெற வேண்டுமேயானால், முதலில் அவனது திருநாமத்தை ஒன்றுக்கு நூறு தடவைகள் திரும்பத் திரும்ப பல நாட்கள் கூறி மனதில் உரு ஏற்ற வேண்டும். இத்தகைய முயற்சியே தரிக்கத்தின் வாயிலாக மேற்கொள்ளப்படுகிறது

وَأَنْ لَوِ اسْتَقَامُوا عَلَى الطَّرِيقَةِ لَأَسْقَيْنَاهُمْ مَاءً غَدَقًا

அல்லாஹ் கூறுகிறான்: "அவர்கள் தரீக்கத்தின் மீது நிலை பெற்று நின்றால் (இறைநேயமென்னும்) மதுரமான நீரை நாம் அவர்களுக்கு புகட்டுவோம் அல்குர்ஆன் : (72:16)

மஃரிபத்தின் மேன்மை

உலகில் நாம் காணும் பொருட்கள் அனைத்தும் சக்தியற்றவை.அவைகளுக்கு அல்லாஹ்தான் சக்தியளிக்கிறான். அவைகளோடு அல்லாஹ்வின் சம்பந்தம் இல்லையாயின் அவைகளால் ஒரு பயனுமில்லை அதற்கு மின்சாரத்தை உவமையாகக் கொள்ளலாம்; மின்சாரமின்றி உபகரணங்களால் பயனொன்றுமில்லை அல்லவா? ஆனால் அல்லாஹ்வன்றி அந்த மின்சாரத்தாலும் பயனில்லை. இந்த உண்மையைப் புரிய வைப்பதற்கு மஃரிபத் என்று கூறப்படுகிறது

தரீக்கத் பயிற்சியின் மூலமாக சதாவும் அல்லாஹ்வை நினைக்க பழகிக்கொண்டவனுக்கு, அந்த அல்லாஹ்வின் வல்லமையை போதிப்பதும் பொருள்களின் கையாலாகா தன்மை உணர்த்துவதும் இன்றியமையாததாகும்

நபி ஹள்ரத் மூஸா (அலை) அவர்களுக்கு ஒரு சமயம் வயிற்று நோவு கண்டது. அவர்கள் இறைவனிடம் முறையிட்டார்கள். ஒரு குறிப்பிட்ட பச்சிலையை பறித்துண்ணும்படியாக இறைவன் கூறினான். அது போன்றே அவர்களும் செய்தார்கள். வயிற்று நோவு குணமாகியது

சிறிது காலங்களுக்குப் பிறகு திரும்பவும் அது போன்றே நோவு ஏற்பட்டது. உடனே அவர்கள் முன்பு சாப்பிட்ட பச்சிலையை பறித்து உண்டார்கள். ஆனால் வயிற்று நோவு தீரவில்லை. ஆச்சரியமடைந்த ஹள்ரத் மூஸா (அலை) அவர்கள் இறைவனிடம் இது பற்றிக் கேட்டார்கள். அதுபோது அல்லாஹ் கூறினான்

"மூஸாவே! முன்பு எனது உத்தரவுக்கிணங்க அந்த பச்சிலையை நீர் உண்டீர்! குணம் கிடைத்தது. ஆனால் தற்போது எனது உத்தரவைப் பெறாமலையே அந்த பச்சிலையை நீர் உண்டீர்! எனவே குணம் கிடைக்கப் பெறவில்லை. மூஸாவே! அறிந்து கொள்வீராக! எல்லாப் பொருட்களும் எந்த சக்தியும் அற்றவையே! அதற்கு நான் சக்தியைக் கொடுத்தால் அது சக்தியை வெளிப்படுத்தும் நான் அதற்கு சக்தியைத் தராவிட்டால் வெறுமையாகிவிடும்

இந்த உண்மையை திருக்குர்ஆன் பல இடங்களில் தெளிவுப் படுத்துகிறது ஹள்ரத் இப்ராஹீம் (அலை) அவர்களைக் கட்டியிருந்த கயிற்றை சுட்டெரித்துவிட்ட நெருப்பால் அவர்களின் உரோமத்தைக்கூட சுட முடியவில்லை. பாறையை பொடிப் பொடியாக்கிய கத்தியால் குழந்தை ஹள்ரத் இஸ்மாயீல் (அலை) அவர்களின் மலர் போன்ற கழுத்தைப் பதம் பார்க்க முடியவில்லை.

ஹள்ரத் மூஸா நபி (அலை) அவர்களையும், அவர்களின் லட்சோபலட்ச உம்மத்துக்களையும், அவர்களின் கணுக்காலைக்கூட நனைக்க முடியாத நைல் பெரு நதி ஃபிர்அவ்னையும், அவனது லட்சோபலட்ச தொண்டர்களையும் மூழ்கடித்து வேடிக்கை பார்த்தது

இந்த வரலாற்று உண்மைகளை அள்ளித் தரும் திருக்குர் ஆன்

وَمَا تَشَاءُونَ إِلَّا أَنْ يَشَاءَ اللَّهُ ۚ إِنَّ اللَّهَ كَانَ عَلِيمًا حَكِيمًا

"அல்லாஹ் நாடாமல் நீங்கள் நாட்டம் கொள்ள முடியாது"என்று நமது கையாலாகாத தன்மையையும் அறியத் தருகிறது குர்ஆன் ( 76: 30)

மனிதன் ஒரு மணித்துளியில் உள்ளத்தால் உலகையே அளந்து வருகிறான் என்பது உண்மையென்றாலும் கூட, நாம் வேண்டினாலும் வேண்டாவிட்டாலும் அல்லாஹ் துணையிருப்பதால்தான் அதுவும் முடிகிறது ஆம்! நாம் காணும் பொருட்களெல்லாம் வெறும் மாயை அதில் அல்லாஹ்தான் சக்தியாகிறான். இந்த உண்மையை புரிந்து கொள்ளுவதற்கே மஃரிபத் நிலை என்று கூறப்படுகிறது. இந்த மஃரிபத் நிலையை அறிவதற்கே மனிதன் படைக்கப் பெற்றுள்ளான்

திருக்குர் ஆன்கூறுகிறது:

وَمَا خَلَقْتُ الْجِنَّ وَالْإِنْسَ إِلَّا لِيَعْبُدُونِ

"மனிதனையும், ஜின் இனத்தையும் என்னை அறிவதற்காகவேயன்றி நான் படைக்கவில்லை அல்குர் ஆன் : (51: 56)

ஹகீகத் ஒரு விளக்கம்

உள்ளது ஒன்று, மற்றது அன்று' என்று இறைநேசர்கள் குறிப்பிடுவார்கள். பொருள்களின் மாயத் தோற்றத்தைப் புரிந்து கொண்ட ஒருவன், இறைவன் மீது அன்புகொண்டு அந்த அன்பிலேயே தோய்ந்து, உருகி, இரண்டறக் கலந்து அந்த அன்பனை விட்டு தன்னை வேறுபடுத்திப் பார்க்காத நிலையை அடைவதற்கு ஹகீகத் நிலை என்று கூறப்படும் அத்தகைய நிலையை அடைந்தவர்கள் செய்ததை இறைவன், தான் செய்ததாகவே அறிவிக்கிறான்.

وَمَا رَمَيْتَ إِذْ رَمَيْتَ وَلَٰكِنَّ اللَّهَ رَمَ

நீர் எறிந்தபோது நீர் எறியவில்லை. என்றாலும் அல்லாஹ்வே எறிந்தான் அல்குர்ஆன் : (8 : 17)

فَلَمْ تَقْتُلُوهُمْ وَلَٰكِنَّ اللَّهَ قَتَلَهُمْ

நீங்கள் அவர்களைக் கொல்லவில்லை. எனினும் அல்லாஹ்வே

அவர்களைக் கொன்றான் அல்குர் ஆன் : (8 : 17)

إِنَّ الَّذِينَ يُبَايِعُونَكَ إِنَّمَا يُبَايِعُونَ اللَّهَ يَدُ اللَّهِ فَوْقَ أَيْدِيهِمْ

உம்மிடம் பைஅத் செய்து கொண்டவர் அல்லாஹ்விடம் பைஅத் செய்து கொண்டவராவார் அல்குர் ஆன் : (48 : 10)

يَدُ اللَّهِ فَوْقَ أَيْدِيهِمْ

அல்லாஹ்வின் கரம் அவர்களின் கரத்தின் மீதிருந்தது

அல்குர்ஆன் : (46 : 17)

வல்ல ரஹ்மான் நமக்கு தரீக்கத்தில் நடந்து, மஃரிபத்தில் மிதந்து

ஹக்கை காணும் பாக்கியத்தைத் தந்தருள்புரிவானாக

(மதிப்பிற்குரிய அல்ஹாஜ் அல்ஹாபிழ் O.M.அப்துல் காதிர் பாகவி ஹழ்ரத் அவர்கள் எழுதிய திருக்குர்ஆன் தேன் துளிகள் புத்தகத்திலிருந்து எடுத்தாண்ட **காதிர் மீரான் மஸ்லஹி** பதிவு தளத்திலிருந்து....)

## **சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 10**

( தீன் )



தீன் என்ற சொல்லுக்கு மூன்று பொருள் உண்டு!

இஸ்லாம் (வழி பாடு اسلام .

ஆதத்து (வழக்கம்) عادة

ஜஸா (ஊதியம் ) جزاء

இந்த முப்பொருளையும் பொதிந்ததுதான் தீன் எனும் மார்க்கம்.

தீன் என்பது வழிபாடு என்பதற்கு ஆதாரம் அல்லாஹ் தஆலாவின் பின்வரும் திருவசனமாகும்

إِنَّ الدِّينَ عِنْدَ اللَّهِ الْإِسْلَامُ

"திட்டமாக தீன் என்பது அல்லாஹ்விடம் இஸ்லாம்தான்"

தீன் என்பது ஆகத்து (வழக்கம்) என்பதற்கு ஆதாரம் لَكُمْ دِينَكُمْ وَلِيَ دِينِ

நீங்கள் வழக்கமாக்கிக் கொண்ட இணைவைப்பது உங்களுடைய மார்க்கமாகவும், நான் வழக்கமாக்கிக்கொண்ட ஏகத்துவம் என்னுடைய மார்க்கமாகவும் இருக்கிறது. என்ற திருவசனமாகும்.

தீன் என்பது (ஜஸா) ஊதியம் பெறுதல் என்பதற்கு ஆதாரம் مَالِكِ يَوْمِ الدِّينِ

கைமாறு வழங்கப்படும் நாளின் அதிபதி" என்ற திருவசனமாகும். எனவே அல்லாஹுத ஆலாவிற்கு வழிபடுதல் என்பது நம்முடைய வழக்கமாக இருந்தால் மறுமையில் நற்பிரதி பலன் உண்டு என்பது உறுதியாகிவிட்டது.

மேலும் ஹதீஸில் இதற்கு ஆதாரமாவது

كَمَا تَدِينْ تُدَانُ

"நீ வழிபடுவது போன்று கூலி கொடுக்கப்படுவாய்" என்பதாகும்.

தீன் என்பது இஸ்லாம் என்றும் இஸ்லாம் என்பது தீன் என்றும் கூறப்படும். இதற்கு ஆதாரம் பின்வரும் திருவசனமாகும்

اِنَّ اللّٰهَ اصْطَفٰى لَـكُمُ الدِّيْنَ فَلَا تَمُوْتُنَّ اِلَّا وَاَنْـتُمْ مُّسْلِمُوْنَ

(அல்குர்ஆன் : 2:132)

"திட்டமாக அல்லாஹ் உங்களுக்கு இந்த தீனை தேர்ந்தெடுத்துக் கொண்டான். எனவே நீங்கள் முஸ்லிம்களாக இருந்தே தவிர மரணிக்க வேண்டாம்" இவ்வசனம் தீன் இஸ்லாம் இரண்டும் ஒன்றுதான் என்பதற்கு ஆதாரமாகும்

தீன் என்பதற்கு மார்க்கம் என்று பொருளாகும். மார்க்கம் என்பது நேரான மார்க்கம்.தவறான மார்க்கம் என்று இரு வகை உண்டு. நேரான மார்க்கம் இஸ்லாம் ஒன்றுதான். தவறான மார்க்கங்கள் உலகத்தில் ஆயிரத்து எழுநூறு வரை இருப்பதாக கணக்கிடப்பட்டுள்ளது

நாம் நேரிய தீனுல் இஸ்லாத்தில் நிலைத்திருக்க அவனிடம் துஆ செய்வது ஃபளாகும். ஆகவேதான்

اِهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيْمَۙ

(அல்குர்ஆன் : 1:6)

எங்களை நேரான வழியில் நடத்தாட்டுவாயாக" என்று ஒவ்வொரு தொழுகையிலும் கேட்பது ஃபர்ளாக்கப்பட்டுள்ளது.

ஒருவருக்கு இவ்வுலகில் எவ்வளவு பாக்கியங்கள் கொடுக்கப்பட்டிருந்தாலும் இஸ்லாம் என்ற பாக்கியம் கிடைத்ததற்கு அவையெல்லாம் சமமாக மாட்டா.

எனவே இஸ்லாம் நம்மிடம் நிலைத்திருப்பதற்காக நாம் துஆ கேட்பது ஃபர்ளாக்கப்பட்டிருப்பது போல், அந்த பாக்கியம் நமக்கு கிடைத்ததாக நன்றி செலுத்துவதும் பர்ளாகும்.

முஸ்லிமான ஒருவர் தீனுல் இஸ்லாத்தை மகத்துவம் மிக்கதாக எண்ணாமலும் அதற்காக நன்றி செலுத்தாமலும் இருந்தால் அவருடைய கடைசி முடிவு தீய முத்திரை உடையதாக ஆகிவிடும் என்பதை பயப்பட வேண்டும். அவ்வாறு ஆவதை விட்டும் அல்லாஹ் நம்மை காத்தருள்வானாக !

தீன் என்னும் கட்டிடத்திற்கு நான்கு தூண்கள் உண்டு. முதலாவது ஈமான் ( நம்பிக்கை) இரண்டாவது இஸ்லாம் (வழிபாடு) மூன்றாவது தவ்ஹீத் ( ஏகத்துவம்) நான்காவது மஃரிஃபா ( அல்லாஹ்வே அறிதல்) இந்த நான்கில் ஒன்று மாறுபட்டால் தீனும் மாறுபட்டு விடும்

“தீன்” என்ற சொல் ஷரீஅத், தரீகத், ஹகீகத், மஃரிபத் என்ற நான்கு அம்சங்களில் ஹகீகத், மஃரிபத் என்ற இரண்டையும் ஒன்றாக்கி மூன்று அம்சங்களையும் உள்வாங்கிய ஒரு சொல்லாகும்.

“தீன்” என்ற சொல்லுக்கு மார்க்கம் என்பதே பொருள். மார்க்கம் என்ற சொல் மேற்கண்ட மூன்று அம்சங்களையும் உள்வாங்கியதாகும். இதற்கு ஸஹீஹான நபீ மொழி ஆதாரமாக உள்ளது. அதை முழுமையாக எழுதாமல் அதில் தேவையான குறிப்பை மட்டும் இங்கு எழுதுகிறேன்.

ஒரு சமயம் நபி ஸல்லல்லாஹ் அலைஹிஸ் வஸ்ஸலாம் அவர்கள் தோழர்களுடன் பேசிக் கொண்டிருக்கையில் ஒருவர் அங்கு வந்து யா முஹம்மத்! எனக்கு இஸ்லாம் பற்றி சொல்லித் தாருங்கள் என்றார்.

நபிகள் நாயகம் சொல்லிக் கொடுத்தார்கள். இரண்டாவதாக “ஈமான்” பற்றிச் சொல்லித் தாருங்கள் என்றார். அதையும் சொல்லிக் கொடுத்தார்கள். மூன்றாவதாக “இஹ்ஸான்” அதாவது “இக்லாஸ்” பற்றிக் கேட்டார். அதற்கு

أَنْ تَعْبُدَ اللَّهَ كَأَنَّكَ تَرَاهُ، فَإِنْ لَمْ تَكُنْ تَرَاهُ فَإِنَّهُ يَرَاكَ

என்று கூறினார்கள். இறுதியில் இருந்த தோழர்களிடம் இங்கு வந்து கேள்வி கேட்டுச் சென்றவர் யார் தெரியுமா? என்று கேட்டார்கள். அவர்கள் தெரியாதென்று சொன்னார்கள். அப்போது நபீகளார்

هذا جبريلُ أَتَاكُمْ لِيُعَلِّمَكُمْ أمور دِينَكُمْ

இவர்தான் ஜிப்ரீல். உங்களின் “தீன்” மார்க்க விடயங்களை உங்களுக்கு கற்றுத்தரவே வந்தார் என்றார்கள்.

இந்த நபிமொழி மூலம் இஸ்லாம், ஈமான், இக்லாஸ் இம் மூன்றையும் உள்வாங்கியதே “தீன்” மார்க்கம் என்பது தெளிவாக விளங்குகிறது. இம் மூன்றிற்கும் “தீன்” என்று பெயர் சொன்னவர்கள் பெருமானார் அலைஹிஸ்ஸலாது வஸ்ஸலாம் அவர்களே!

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 11



உள நோய்களும், அவற்றுக்கான வைத்தியர்களும் என்பது பற்றி அப்துர் றஊப் மிஸ்பாஹீ அவர்கள் தங்கள் கிதாபில்,

உடலுக்கு நோய் வருவது போல் “கல்பு” என்ற உள்ளத்திற்கும் உள நோய் வரும். .

உடல் நோய்க்கு மருத்துவர்களும், மருந்துகளும் இருப்பது போல் உள நோய்க்கும் மருத்துவர்களும்,மருந்துகளும் உள்ளன. இரண்டு வகை நோய்களுக்கும் மருத்துவமனைகளும் உள்ளன.

உடல் நோய்க்கு விஷேட மருத்துவர்கள் இருப்பதுபோல் உள நோய்க்கும் விஷேட மருத்துவர்கள் உள்ளனர்.

''புகஹாஉ'' சட்டக்கலை சார்ந்த அறிஞர்கள் "ஷரீ அஹ்" வின் உலமாகள் உடல் நோய்க்குரிய மருத்துவர்களுமல்லர், உள நோய்க்குரிய மருத்துவர்களுமல்லர். அவர்கள் சட்ட மேதைகள். சட்டத்தோடு மட்டும் நிற்பவர்கள். ஏன்? எதற்கு? என்ற கேள்விகளுக்கு அவர்கள் விளக்கம் . சொல்லமாட்டார்கள். சொல்லவும் தெரியாது !

உதாரணமாக "ஷாபிஃ" மத்ஹப் வழியில் செல்லும் சட்டவாதிகளிடம், தொழுகையில் நிலையில் "தக்பீர்" கட்டும் போது கை எவ்வாறிருக்க வேண்டும்என்று கேட்டால் சட்டம் சொல்வார்கள்.

"வலது கையால் இடது கை மணிக்கட்டைப் பிடித்து இடது பக்கம் கையை சாய்த்து கட்ட வேண்டும்" என்று சொல்வார்கள். சட்டம் சரிதான். ஆனால் ஏன் அவ்வாறு கட்ட வேண்டும்? அதற்கான இரகசியம் என்ன என்று கேட்டால் "பகீஹ்" சட்டவாதி காரணம் தேவையில்லை, அதை அறிய வேண்டிய அவசியமும் இல்லை என்று முகம் சற்றுச் சிவந்த நிலையில் பதில் கூறிவிடுவார். கேட்டவன் காரணமின்றிக் காரியமா? அவனும் முகம் சிவந்த நிலையில் போய் விடுவான்.

சட்டக் கலையில் சட்டம் மட்டுமே கூறப்படும் அதற்கான காரணம் விளக்கப்படுவதில்லை. இதனால்தான் சட்டத்தோடு மட்டும் நின்று கொள்பவர்கள் காரியத்துக்கான காரணம் தெரியாதவர்களாகி விடுகின்றனர்.

சட்டக்கலை நூல்களில் எந்த ஒரு நூலிலும் நோய்கள் பற்றியோ, அவற்றுக்கான உள மருந்துகள் பற்றியோ எழுதப்படுவதில்லை. இதனால் சட்டத்துறை சார்ந்தவர்களைக் குறை காணவும் முடியாது.

உதாரணமாக இமாம் நவவீ, இமாம் றாபிஃ, இமாம் றமலீ,இமாம் ஷாபிஃ றஹிமஹுமுல்லாஹ் போன்றோரை எடுத்துக் கொள்ளலாம்.இவர்கள் சட்டக்கலை ஆய்விலேயே தமது காலத்தைக் கழித்தவர்களாவர். இவர்கள் சட்டக்கலையில் அதி விஷேடமானவர்களாயினும், இவர்களுக்கு ஏனைய கலைகள் அறவே தெரியாது என்பது கருத்தல்ல.

இமாம் இப்னு மாலிக், இமாம் முஃதீ இப்னு ஹிஷாம் போன்றவர்கள் மொழி இலக்கணக் கலையிலேயே தமது காலத்தைக கழித்தவர்களாவர். இவர்களும் மேற்கண்டவர்கள் போன்றவர்களே!

இமாம் புகாரீ, இமாம் முஸ்லிம் போன்றோர் "ஹதீது"க்கலை ஆய்விலேயே தமது காலத்தைக் கழித்தவர்களாவர். இவர்களும் மேற்கண்டவர்கள் போன்றவர்களே!

இமாம் இப்னு அறபீ, இமாம் அப்துல் கரீம் அல்ஜீலீ போன்றோர் ஸூபிஸக்கலை மேதைகளாவர். இவர்களும் இக்கலை ஆய்விலேயே தமது காலத்தைக் கழித்தவர்களாவர்.

இஸ்லாமிய அறிவுலகில் ஒரு சிலர் மட்டுமே பல்கலை மேதைகளாக இருந்துள்ளார்கள். இமாம் அப்துல் கனீ, அந் நாபலஸீ, இமாம் பக்றுத்தீனுர் றாஸீ, இமாம் ஸுயூதி போன்றோரைக் கூறலாம்.

உடல்நோய் மருத்துவர்களில் ஒவ்வொரு நோய்க்கும் விஷேடமானவர்கள் இருப்பது போல் உள நோய் மருத்துவர்களிலும் உள்ளார்கள். அவர்கள்தான் அவ்லியாஉகளும், மகான்களும், “தர்பியத்” முரீதுகளின் ஆன்மாவை வளர்க்கும் திறமையுள்ள ஷெய்குமார்கள்.

உள நோய் வராமல் பாதுகாப்பதற்கும், வந்துள்ள நோய்களை சுகப்படுத்துவதற்கும் மேற்கூறிய உள நோய் மருத்துவ நிபுணர்களின் கரம் பற்றி அவர்களின் முரீதுகளாகி ஸூபிஸ வழி செல்வது அவசியமாகும்.

ஸூபிஸம் கற்காத, அவ்வழி சென்று உள்ளத்தைப் பக்குவப்படுத்தாத எவரும் “விலாயத்" எனும் ஒலித்தனம் பெறுவதும், சூஃபி ஆகுவதும் அசாத்தியமானதேயாகும்.

ஸூபிஸ வழி சென்று உள்ளத்தைப் பக்குவப்படுத்தாத ஒருவர் கூட ஒர "வலீ" ஆனதற்கோ, சூஃபி ஆனதற்கோ ஒரு சிறு வரலாறு கூட இல்லை.

இவ்வுண்மையை அனேக முஸ்லிம்கள் விளங்குவது இல்லை, விளங்கவும் இல்லை. ஐங்காலம் தொழுது கொண்டால் மட்டும் போதும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். அவர்களின் இந்நினைவு அர்த்தம் மற்றதும் அறிவற்றதும் ஆகும்.

அவர்களின் எண்ணப்படி திருக்குர்ஆனிலும் ஹதீதுகளிலும் தொழுகை பற்றிய வசனங்களும், நபி மொழிகளும் வந்து இருந்தால் போதும். அவ்விரண்டிலும் சூஃபிஸம் தொடர்பான எந்த ஒரு வசனமும், எந்த ஒரு ஹதீஸும் வந்திருக்க தேவையில்லை.

மேற்கண்டவாறு நினைப்பவர்கள் ஆயிரம் வருடங்கள் வாழ்ந்தாலும் கூட இறைவனை அறிந்து கொள்ளவோ அவனை அடைந்து கொள்ளவோ மாட்டார்கள் மனப்பக்குவமும் பெற மாட்டார்கள்.

" தஸவ்வுப் " என்னும் சூஃபிஸ வழியில் கால் வைக்காத எவரும் கரைசேர முடியாது என்பதே எனது ஆய்வின் பயனும் முடியுமாகும்.

பூஅலி சீனாவின் போதனை அளிக்கும் ஒரு செய்தியை காஜா ஹபீபுல்லாஹ் ஷாஹ் அவர்கள் தன்னுடைய பைஜுல் ஹபீப் கிதாபில்..,

பூஅலி சீனா (ரஹ்) உலகில் சிறந்த வைத்திய மேதை ; தத்துவ சாஸ்திரத்தில் பெரிய நிபுணர். மார்க்கக் கலைகளிலும் தேர்ச்சியுடையவர். ஆனால், அவர் ஆத்ம ஞான அனுஷ்டானத்தின் பக்கம் கவனம் திருப்பவில்லை. அவருடைய மரணத் தருவாயில் அவர் நண்பர்களில் சிலர் அவரிடம் நற்போதனைபுரியுமாறு வேண்டினர்.

பூஅலி சீனா அழுத வண்ணமாக, "நண்பர்களே, என் நெஞ்சிலிருந்த கலைகள் அத்தனையும் இத்தருணம் ஒன்றுமில்லாமல் வெளியேறிவிட்டன. இவ்வண்ணம் சம்பவிக்கு மென முன்னமேயே அறிந்திருப்பேனேயாகில் அக்கலைகளை யான் (வீணில்) கற்றிருக்கமாட்டேன்.

“ மன் அரப” (தன்னை அறிதல்) என்னும் ஆத்ம ஞானம் எனக்கில்லை. ஆகையால் பூஅலி பேதையாகச் செல்கிறான் " என்று கூறி வருந்தினார்.

இதனால் வெளிக் கல்விகளான கலைகளை எவ்வளவுதான் கடல் போன்று கற்றாலும் ஆத்ம ஞான மென்னும் கிந்தீல் தீபத்தை ஒஸீலாவாகிய ஒரு காமில்ஆன காரண குருவைக் கொண்டு தெரிந்து, அனுஷ்டித்து வராதவர்களெல்லாம் மேற்சொன்னபடி முடிவு காலத்தில் அல்லாஹ்வின் ஜமாலியத்தான மணிவிளக்கைக் கண்டுகொள்ளாத நிர்ப்பாக்கியஸ் தர்களாய் கைசேதமடைந்து அழிய நேரிடும்.

இது மறுக்க முடியாத உண்மை. இதைப்பற்றி பெருமக்களாகிய மகான்களெல்லாம் தங்களுடைய ஞான நிலைக் கண்ணாடிகளில் எவ்வளவோ மேற்கோளாக வழிகாட்டிக்கொண்டு போகிறார்கள்.

## **சூ:ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 12**

( இறை ஞானம் கற்றுக்கொடுத்த சூ:ஃபியாக்கள்



இமாம் ஜ:ஃபர் சாதிக் (ரஹ்) அவர்களிடம் நண்பர் ஒருவரைக் கூட்டிக் கொண்டு வந்து , " இமாம் அவர்களே , இவர் இராக் நாட்டின் சட்ட மாமேதைகளில் ஒருவர் " என்றார் .

"அப்படியா ? பகுத்தறிவு ரீதியில் மார்க்கத்தை அணுகும் நு:ஃமான் இப்னுதாபித் தானே இவர் ? "

"ஆம்'' என் பெயர் அதுதான் ; ஆனால் மக்கள் என்னை , 'இமாம் அபூஹனீ:பா ' என்று அழைப்பார்கள் " .

"தாங்கள் இஸ்லாமிய மார்க்க சட்ட திட்டங்களைத் தாங்கள் பகுத்தறிவு ரீதியில் அணுகி விளக்கம் கூறுவதாக அறிந்தேன். ஆதம் (அலை) அவர்களுக்கு சிரவணக்கம் (சுஜூது ) செய்யுமாறு இறைவன் பணிக்க,

"நான் நெருப்பால் படைக்கப்பட்டவன் .மண்ணால் படைக்கப்பட்ட ஆதத்திறகு நான் எவ்வாறு சிரவணக்கம் செய்வேன்" என்று இப்லீஸ் பகுத்தறிவு ரீதியில் வாக்குவாதம் செய்து இறை கோபத்திற்கு ஆளாகி இழிநிலை அடைந்தான் என்பதை தாங்கள் மறந்து விடாதீர்கள் "என்று இமாம் ஜ:பர் சாதிக் (ரஹ்) கூறி விட்டு , பின் அவரிடம்......

"நு:மானே ...! அறிவுள்ளவன் என்றால் யார் ?"

"நன்மையையும், தீமையையும் பிரித்தறிபவன் "

"நன்மையையும் , தீமையையும்தான் நாற்கால் மிருகங்களும் பிரித்தறிகின்றனவே , தனக்குத் தீனி போட்டு தடவிக் கொடுப்பவனை நல்லவன் என்றும், தன்னை அடித்து விரட்டுகின்றனைத் தீயவன் என்றும் அவை தெரிந்து வைத்துள்ளனவே "

"அவ்விதமாயின் தாங்களே கூறுங்கள் "

"இரண்டு நன்மைகளுக்கிடையில் இரண்டு தீமைகளுக்கிடையில் பகுத்தறிந்து இரண்டு நன்மைகளில் எது மேலானது என்பதை தேர்ந்தெடுக்கவும், இரண்டு தீமைகளில் எது கீழானது என்பதைத் தெரிந்து நீக்கவும், அறிவு பெற்றவனே அறிஞன் " என்று இமாம் ஜ:பர் சாதிக் (ரஹ்) கூறினார்கள் .கூறிவிட்டு .....

"இறைவன் கொடியவை என்று கூறும் இரண்டில் அதாவது கொலையிலும்,விபசாரத்திலும் கொடுமையானது எது என்று தாங்கள் கருதுகிறீர்கள் ? "

" கொலை "

"அவ்விதமாயின் கொலையை நிரூபிப்பதற்கு இரண்டு பேர் சாட்சி பகர வேண்டுமென்று கூறும் இறைவன் , விபச்சாரத்தை நிரூபிப்பதற்கு நான்கு பேர் சாட்சி பகர வேண்டுமென்று இறைவன் பணித்துள்ளானே , ஏன் ? இதிலிருந்து கொடிது கொடிது விபச்சாரமே கொடிது . உண்மை இவ்வாறு இருக்க தாங்கள் பகுத்தறிவு எத்தனை தவறில் போய் முடியும் பார்த்தீர்களா ?

அடுத்து , .இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளில் இரண்டு . ஒன்று தொழுகை . அடுத்து நோன்பு இதில் எது அதிக முக்கியத்துவம் வாய்ந்தது ?

" தொழுகை " என்று அபூஹனீபா கூறினார்கள் .

"அவ்விதமாயின் மாதவிடாய் நாட்களில் தவறிப் போன தொழுகையை பின் நிறைவேற்ற வேண்டியதில்லை என்று பெண்களுக்கு சலுகை வழங்கிய இறைவன், மாதவிடாயினால் தவறிப் போன நோன்பை பின்னர் நோற்றுத்தான் தீர வேண்டும் என்ற கட்டளை பிறப்பிக்கப்பட்டுள்ளது .இதிலிருந்து தொழுகையை விட நோன்பே சிறப்புடையது.

"ஆண் - பெண் வலுவற்றவர் யார் ? "

" பெண் "

"அப்படியானால் சொத்துரிமையில் ஆணுக்கு இரண்டு பங்கு

பெண்ணுக்கு ஒரு பங்கு என்ற இறை தீர்ப்பை (குர்ஆன் 4 : 11)

பகுத்தறிவால் சிந்தித்து இறைக்கட்டளைக்கு மாற்றமாகவா பங்கு கொடுக்க தீர்ப்பளிப்பீர்கள் ...?

"தங்களிடம் உள்ள எத்தனையோ விஷயங்களைப் பற்றி தாங்கள் சரியாக விளங்காதிருக்கும்போது, எப்படி பகுத்தறிவு ரீதியில் ஏதேதோ விளக்கம் கொடுத்துத் தங்களையும் , மற்றவர்களையும் குழப்பத்தில் ஆக்கி விடாதீர்கள் " என்றனர் .

இந்த உரையாடல்களுக்குப் பிறகு இமாம் அபூ ஹனீபா அவர்கள் இமாம் ஜ:பர் சாதிக் .(ரஹ்) அவர்களிடம் இரண்டாண்டுகள் பற்பல கல்விகளையும் மெஞ்ஞான விளங்கங்களையும் கற்றுத் தேர்ந்து வெளிவந்தார்கள் .

அப்போது அபூ ஹனீபா விடம் , " உங்கள் வயது என்ன ? " என்ற கேட்ட போது ,

" இரண்டு "

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 13



"தப்ஸீரே கபீர்" என்ற உலகப் புகழ்பெற்ற கிரந்தை எழுதிய இமாம் பக்ருத்தீன் ராஜி (ரஹ்) அவர்களுக்கு, ஹஜரத் ஷைகு முஹ்யித்தீன் அரபி (ரஹ்) அவர்கள் நிரூபம் ஒன்று எழுதி அனுப்பினார்கள்.

அதில் இமாம் பக்ருத்தீன் ராஜி அவர்களின் வெளிரங்கமான கல்வித் திறமையை ஆமோதித்துவிட்டு, அவர்களுக்குச் சில உபதேச மொழிகளை அருளியுள்ளார்கள்.

அது வருமாறு :

"என் அன்புள்ள சகோதரரே, யாதாமொரு ஞானிகள் நாயகத்தின் சபையில் கலந்திருந்து ஷரீ அத்தின் உட்கருத்தை விளங்கிக் கொள்வீர்களாகில் அது உங்களை விரைவிலேயே 'ஷுஹுதே ஹக்' என்ற இறைவன் தரிசனையை அடையும் பதவி வரையில் கொண்டுபோய்ச் சேர்த்துவிடும்.

அந்தத் தரிசனையைக் கொண்டு உங்களுக்கு ஆண்ட வன் புறமாக அகமிய ஞானக்கல்வி அருளப்படும். அறிவின் துணையால் அடையப் பெறும் கல்விக்கும், இந்த அகமிய மெஞ்ஞானச் சுடருக்கும் எவ்விதச் சம்பந்தமும் கிடையாது என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

ஏனெனில், ஆராய்ச்சி என்பது அறிவின் மாயா விநோதங்களின் மறுபெயர்தான். இதற்கும், மெஞ்ஞான உண்மைக் கல்விக்கும் எவ்விதத் தொடர்புமில்லை. பூரண அகமியத்தை அருளக் கூடிய, மரணத்துக்குப்பின் உங்களோடு இருக்கக் கூடிய ஞானஜோதியை நீங்கள் அடையப்பெறுவது அத்தியாவசியமாகும்.

ஞான ஜோதியானது அல்லாஹுத் தஆலாவின் புறத்தால் காட்சியாகவும், கொடையாகவும் அருளப்படும் கல்வி என்பதை உணர்வீர்களாக! இக்கல்வியைத் தவிர்த்துள்ள சகல கல்விகளும், அவற்றின் பலாபலன்களும் மனிதனின் இவ்வுலக வாழ்க்கை சம்பந்தப்பட்டவரை மட்டுமே பயன்படுவனவாய் இருக்கின்றன. மரணத்துக்குப்பின் அவற்றால் எந்தப் பயனும் விளையாது.

இதனால் அழிந்து போகக்கூடிய இவ்வுலகத்தை விட்டுக் கடந்த பின்னரே, தங்கள் உள்ளமைவுடன் தொடர்ந்து வரக்கூடிய மெஞ்ஞான ஜோதியைப் பெறுவதற்கு முயற்சிப்பதே அறிவாளிகளின் கடமையாகும்.

அவ்விதக் கல்விகள் இரண்டே இருக்கின்றன. ஒன்று, "மஃரிபத்தே இலாஹி- அல்லாஹுத் தஆலாவை அறிதல் என்னும் மெஞ்ஞானம். மற்றொன்று, மறுமையின் கல்வி (ஆத்மீக உலகத்தின் தெளிவு). ஆகையால், இவ்வுலக வாழ்க்கையில் இவ்விரண்டே கல்விகளைத் திட்டமாய்த் தெளிந்தறிவதில் கருத்துக் காட்டவேண்டியது உங்கள்மீது கடமையாகும். இதைக் கொண்டு மறுமையில் உங்களுக்குப் பயன் கிடைக்கும்.

இம்மை சம்பந்தப்பட்ட மற்றக் கல்விகளில் வாழ்க்கைக்கு முக்கியமாக அவசியமான (தேவையுள்ள) அளவு மட்டும் - சன்மார்க்க வழியில் உதவி அளிக்கத்தக்க அளவுக்கு மட்டும் கூடக் கற்றால் போதும். மேலே குறிப்பிட்ட இரண்டு விதக் கல்விகளையும் பெறுவதற்கு, தனித்திருத்தல் - நன்னடத்தையில் அப்பியாசம் செய்தல்", "அகயமிக் காட்சி பெறுதல்" - "ஆண்டவன் பேரில் மோகம் மேலிட்டு, அவன் பக்கம் அகமியத்தில் இழுக்கப்பட்டு, தெய்வ குணங்களின் பேரில் நிலைத்திருக்கச் செய்யும் வல்லபம்" ஆகிய அம்சங்களும் அவசிய மாகும்.

"என் அன்பரே, ஷரீ அத்தின் உட் கருத்தையும், ரகசியத்தையும் விளங்கிக்கொள்ளாமல் வெறும் வெளிப்படையான பதவுரைப் பூஜை செய்யவர்களும், வாய்விவாதம், பொறாமை, புறம்பேசுதல், இவைகளையே தங்கள் நடப்பாகக் கொண்டிருப்பவர்களும், ஞான நாதர்களை ஏசிப் பேசுவதில் பெருமை அடித்துக் கொண்டு இருப்பவர்களும், உண்மை யதார்த்தத்தை அறியாமல் அதை நிகாகரிப்பவர்களும் என்னுடைய வார்த்தைகளைக் கேட்டு விளக்கமுற மாட்டார்கள்.

அன்பரே, ஞான நாதர்களாகிய கண்ணிய மிக்க மகான்களை நிராகரிக்காமல் இருப்பது உங்கள் கடமையாகும். இவர்கள் திருகுர்ஆனையும், உண்மையான ஹதீதுகளையும் வெளிப்படையான கட்டளைகளை விட்டும் மாற்றி விவரிப்பதாக ஒருபோதும் எண்ணவேண்டாம்! ஏனெனில், ஷரீ அத்தின் வெளிப் பொருளை மாற்றுவது "குப்ராய்" (நிராகரிப்பதாய்) இருக்கும்.

إِنَّ لِكُلِّ آيَةٍ ظَهْرًا وَبَطْنًا وَحَدًا وَ مُطَّلَعًا إِلى سَبْعَةِ أَبْطن

"உண்மையாவது, நபிபெருமான்(ஸல்) அவர்களின் திருமொழிப்படி "குர்ஆனின் ஒவ்வொரு ஆயத்துக்கும் வெளிப்பொருளும் உட்பொருளும் உண்டு; இன்னும், ஏழு எண்ணிக்கை வரையில் உட்பொருள்களும் உள்ளன."

வெளிப் பொருளின் கருத்தாவது ஷரீ அத்தின் கட்டளைகளாகும். அக்கட்டளைகளுக்கு உட்பட்டு நல்லொழுக்கத்தோடு நடக்க முடிகிறது.

ஆனால் உட்பொருள் என்பதன் கருத்தாவது அகமிய மெஞ்ஞான ரகசியங்களாகும். இது சம்பூரண ஈமானும் தக்வாவும் கொண்டே அருளப்படுகிறது. இனி "முன்கிர்" - உண்மையை ஏற்றுக்கொள்ள மறுப்பவர்களாகிய விஷமிகள் - தங்கள் அறியாமையால் உண்மையாளர்களின் (மெஞ்ஞானிகளின்) சத்தியத்தை ஒப்புக்கொள்ளவிடாது, உங்களைத் தடுப்பார்களாயின் நீங்கள் அவர்களைக் கண்ணெடுத்தும் பார்க்க வேண்டாம்.

காரணம், திருகுர்ஆனின் உட்பொருள்- ரகசியப் பொக்கிஷம் - இப்பதவுரைப் பூஜாரிகளைவிட்டும் மறைவானதாய் வைக்கப்பட்டிருக்கிறது. உண்மையாளர்களை எதிர்ப்பதும், பொய்ப்பிப்பதும் பொறாமை கொள்ளுதலும், குரோதங் கொள்ளுதலுமே இவர்களின் சேவையாய் இருக்கிறது. உண்மையாளர்கள் ஒரு புதிய விஷயத்தையோ அல்லது புதிய ஷரீ அத்தையோ எடுத்துக் காட்டவில்லை.

ஆனால், ஆண்டவனால் அவர்களுக்கு அருளப்பட்ட பரந்த ஒளி, உள் விளக்கம், இறைவன் தரிசனை இவற்றின் உதவியால் திருகுர்ஆனிலும், உண்மையான ஹதீதுகளிலும் பொதிந்துள்ள மறை பொருளான விளக்கங்களை அறிந்துகொள்கிறார்கள். வீண் விதண்டாவாதக்காரர்கள் விளக்கங்களைவிட்டும் வெகு தொலைவில் கிடக்கின்றனர். இவர்கள் ஞான குருநாதர்களின் உட்பொருள் விளக்கத்தைக் கொண்டு ஒருபோதும் உபதேசம் பெற்றுப் பயனடையவே மாட்டார்கள்.

**சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 14**

( இறைவனைக் காட்டித் தருபவரே காமிலான வழிகாட்டி (முர்ஷித்)

- மௌலவீ Seyed Abu Thahir ஹஜரத் அவர்களின் வீடியோ உரையிலிருந்து...



"யா அல்லாஹ் ! உன்னை அறிந்தே பின்னேதான் நான் மரணிப்பேன்' என்று ஜலாலுதீன் ரூமி அவர்கள் சொன்னார்கள். அதற்கு அல்லாஹ் சொன்னான் : "என்னை அறிந்தவர்களுக்கு மரணமே கிடையாது".

எனவே மரணத்தை வென்றவர்கள் மகான்கள். எப்போது ஒருவர் தன்னைத் தானே வெல்கிறாரோ, அப்போது அவர் மரணத்தை வென்று விடுவார்.

தன்னை வெல்வது எப்படி ? மரணத்தை வெல்வது எப்படி ?

மரணத்தை வெல்வது என்றால், " மரணம் அடைவதுதான் "

அந்த மரணம் எது ? எனக் கேட்டதற்கு, நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் "மரணிப்பதற்கு முன்னால் மரணித்து விடுங்கள்"

அது எப்படி ? மரணத்திற்கு முன்னால் மரணிப்பது ?

அந்தக் கலையை கற்றவர்கள்தான் ஞானிகள், சூபியாக்கள். அந்த கலையைக் கற்று தருவது தான் சூஃபிஸம். அதே போதிப்பவர்கள் தான் தர்காவின் காமிலான செய்குமார்கள்.

"இறை ஆலயத்தை நீங்கள் புனரமைப்பு செய்யுங்கள். அதனை தூய்மைப்படுத்துங்கள். யாருக்காக ? யார் ருக்ஹு , சுஜூதும் செய்ய வருகிறார்களோ, அவர்களுக்காக வேண்டி இறை ஆலயத்தை புனரமைப்பு செய்யுங்கள் "என்று நபி இப்ராஹீம் (அலை ) அவர்களிடம் இறைவன் கூறினான் (குர்ஆன் 2 : 127)

இதே வார்த்தையைத்தான் நபி தாவூத் ( அலை ) அவர்களுக்கும் இறைவன் சொன்னான்: " இறை ஆலயத்தை நீங்கள் புனரமைப்பு செய்யுங்கள்"

நபி தாவூத் (அலை), " இறைவா ! உன் ஆலயம் எங்கே இருக்கிறது ? இறை ஆலயம் என்றால் அங்கே இறைவன் இருக்க வேண்டும் அல்லவா? இறைவா! நீ இருக்கிற அளவுக்குரிய பெரிய இடம் இந்த உலகத்தில் எங்கே இருக்கிறது?

நாம் நாற்காலியில் உட்காருவதாக இருந்தால், நம்மை விட பெரியதாக நாற்காலி இருக்க வேண்டும். நாம் அமர்வோம். அது தாங்கியிருக்கும் நம்மை விட சிறியதாக அந்த நாற்காலி இருந்தால், நாம் அந்த நாற்காலியில் உட்கார முடியாது.

எனவே, "இறைவா நீ அமர வேண்டுமானால் உன்னை விட பெரியதாக அல்லவா அந்த இடம் இருக்க வேண்டும். எனவே இறைவா ! நீ இருக்கும் ஆலயத்தை எது என்று எனக்கு காண்பி ! என்றார்கள்.

இறைவன் சொன்னான்: " ஒரு மூமினுடைய இதயம்தான் கல்புதான் இறைவனுடைய சிம்மாசனம் .

நபி (ஸல்) சொன்னார்கள்: "மனிதனுடைய உடலிலே ஒரு சதை துண்டு இருக்கிறது. அந்த சதையை துண்டியில் ஒரு இதயம் இருக்கிறது. அந்த இதயத்தில் கல்பு இருக்கிறது. அந்த கல்ப்பில் ரூஹ் என்ற ஆன்மா இருக்கிறது. அந்த ஆன்மாவில் ஒளி இருக்கிறது. அந்த ஒளிக்குள் ஓர் இரகசியம் (சிர்ரு) இருக்கிறது. அந்த சிர்ருக்குள்ளே நான் இருக்கிறேன்" என்றான் இறைவன்.

எனவே மனிதனுக்குள்ளே இறைவன் இருக்கிறான். உங்களுக்குள் நான் இருக்கிறேன். நான் இருப்பதை நீங்கள் பார்க்கவில்லையா ?என்று மனிதர்களிடம் இறைவன் கேட்கிறான்.

அறிந்து கொள்ளுங்கள் : "அல்லாஹ்வும், அல்லாஹ்வின் ரசூலும் உங்களில்தான் இருக்கிறார்கள். எனவேதான் அல்லாஹ்வும் நம்மில் தான் இருக்கிறான். அல்லாஹ்வுடைய ரசூலும் நம்மில் தான் இருக்கிறார்கள். அப்படி என்றால், அவன் இருப்பு என்கிற அந்த சூட்சும கயிறை யார் அவிழ்த்து விடுகிறார்கள்? சற்குருவாகிய செய்குமார்கள்தான்.

தன்னில் இறைவனை தரிசிப்பது எப்படி ? அதை காட்டுவதற்காக காண்பதற்காக வழிகாட்டியவர்கள்தான் வலிமார்கள்.

"ஹக்கை கல்கில் ஹக்காக காணாத வானாள்

துக்க மாமென்றதால் துனக்கீனி பில்ஹால்

பர்கை ஜம்ஆக்கி பண்பிலாகாமல் காலை

ஷர்கி போகாமல் கார்த்து தஹ்ஹிர் என் பாலை

என்னை ஆளும் வல்லோனே யாகாந்த நாதா

தன்னையறியும் தவத்தை தந்தாய்குவாய் நீ "

இந்த பைத்தை ராத்திபு ஜலாலிய்யாவில் ஓதுகிறோமே, அல்லாமா அரூஷி செய்யது முஹம்மது மாப்பிள்ளை லெப்பை சொல்கிறார்களே, "ஹக்கை கல்கில் காணாது வானாள் "- அதாவது படைத்தவனை படைப்பிலேயே பார்ப்பது. அப்படி பார்க்காத வாழ்நாள் வீணான நாள் என்கிறார்கள்.இறைவனை தரிசிப்பதற்கான நஸிபை அல்லாஹ் நமக்கு தந்தருள வேண்டும்.

ஆகையால் செய்குமார்கள் இப்படி ஒரு துஆவையும் நமக்கு கற்றுத் தருகிறார்கள்.

" யா அல்லாஹ் ஒருவரை நீ எனக்கு காட்டு ;

அவர் உன்னை எனக்கு காட்டுவார்"

முர்ஷீத் என்றால் திக்ரு சொல்லி கொடுப்பவர் மட்டுமல்ல,தவறுகளை செய்யாதே! என்று போதிப்பவர் மட்டுமல்ல, அத்தனைக்கும் மேலாக சிர்ரு- இறைவனைக் காட்டு தருபவர் யாரோ அவர்தான் காமிலானா முர்ஷீத்.

اللهِ مَنْ يَّهْدِ اللهُ فَهُوَ الْمُهْتَدِ  وَمَنْ يُّضْلِلْ فَلَنْ تَجِدَ لَهٗ وَلِيًّا مُّرْشِدًا

எவரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துகிறானோ, அவரே நேர் வழிப்பட்டவராவார்; இன்னும், எவனை அவன் வழிகேட்டில் விடுகிறானோ, அவனுக்கு நேர் வழிகாட்டும் உதவியாளர் எவரையும் நீர் காணவே மாட்டீர்.(குர்ஆன் : 18:17)

அத்தகைய காமிலான முர்ஷித்களிடம் நம்மை சேர்த்து வைப்பானாக ! இணைத்து வைப்பானாக ! அந்த இணைப்பை, பிணைப்பை இறுக்கமாக வைப்பானாக ! அந்த இணைப்பிலேயே நம்மை நிலைத்து வைப்பானாக ! அந்த பிணைப்பிலே இறைவன் நம்மை மரணித்தும் வைப்பானாக !

அஷ்ஷெய்கு உமர் வலியுல்லாஹ் கத்தஸல்லாஹூ ஸிர்ஹூல் அஜீஸ் இப்படி பாடியுள்ளார்கள்

" காணும் சொரூபமெல்லாம் கத்தன் மழ்ஹறென்றே

பேணி ஷுஹூது செய்து பெலப்படுவதுதென் நாளோ ? "

இறைவனை எங்கே தேடுவேன் ? அவனை எங்கே பார்ப்பேன் ?அவனுள் அல்லாஹ்வை பார்ப்பது. தன்னுள் தானே பார்ப்பது, காணும் பொருட்களிளெல்லாம் பார்ப்பது என்று உமர் வலியுல்லாஹ் ஞானப் புலம்பல் என்கிற தன் கிதாபில் சொல்கிறார்கள்.

எல்லோரும் கூடியிருக்கிறார்கள். வானம் இருக்கிறது. சூரியன் இருக்கிறது. நட்சத்திரங்கள் இருக்கிறது. படைப்பினங்களில் மிருக இனங்கள் இருக்கின்றது. மீனினம் இருக்கிறது,மானினம் இருக்கிறது உலகில் எத்தனையோ ஜீவராசிகள் இருக்கிறது. அத்தனை படைப்புகளில் மத்தியில் படைத்த உன்னை நான் காண்பது எந்நாளோ என்று கேட்கிறார்.

அப்படி இறைவனை காண்பதற்கான தளம் எங்கே இருக்கிறது ? அது தன்னுள் இருக்கிறது. மனிதனுடைய நப்ஷில், ஆத்மாவில் இருக்கிறது.

இதைத்தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் :

"யார் ஒருவன் தன்னை அறிந்து கொண்டானோ, அவன் தன் ரப்பை திட்டமாக அறிந்து கொண்டான்" என்கிறார்கள்.

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 15

( மார்க்க அறிஞர்களும், ஆன்மீக அறிஞர்களும் )



''என் உம்மத்திலே உள்ள அறிஞர்கள் பனீ இஸ்ராயீல்களிடையே தோன்றிய நபிமார்களுக்கு இணையானவர்கள்" என்று அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

நபியவர்கள் திருவாய் மலர்ந்த செய்தியை உறுதிப்படுத்தும் வண்ணம் உலகில் அவ்வக்காலத்தில் தோன்றும் இஸ்லாமிய அறிஞர்கள் பெருமானார் (ஸல்) அவர்களின் வாரிசு போன்று துலங்கி இஸ்லாத்தை, இறை நெறியை இவ்வுலகில் பரப்பும் பணியில் ஈடுபட்டுச் சென்றனர்.

அந்த அறிஞர்கள் மார்க்க அறிஞர்கள் என்றும் ஆன்மீக அறிஞர்கள் என்றும் இரு வகைப்பட்டார்கள். அவர்களில் ஆன்மீக அறிஞர்களின் பரம்பரை அலீ (ரலி) அவர்கள் முதல் துவங்குகிறது.

அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்கள் தாயிஃப் போரிலிருந்து திரும்புங்கால் அலீ (ரலி) அவர்களை மட்டும் தனியே அழைத்து ஆன்மீக இரகசியங்களை எடுத்தோதினர்.

அப்பொழுது உமர் (ரலி) அவர்கள் அண்ணல் அவர்களை அணுகி, 'நாயகமே! தாங்கள் அலீக்கு மட்டும் ஏதோ இரகசியத்தைக் கூறுகின்றீர்களா?" என்று வினவியபொழுது,

"நான் அவருக்கு யாதொரு இரகசியத்தையும் போதிக்கவில்லை. அல்லாஹ் தான் போதித்தான்" என்று இயம்பினர் அண்ணல்.

அதன் பொருள், "அல்லாஹ்வின் ஆணை மீதுதான் நான் அதனை அவருக்குப் போதித்தேனே யன்றி நானாகவே அதனைப் போதிக்கவில்லை" என்பதேயாகும்.

இவ்வாறு ஆன்மீக இரகசியத்தை அண்ணல் நபியவர்கள் அலீ (ரலி) அவர்களுக்கு மட்டும் போதித்ததன் காரணமாகவே 'அனமதீனத்துல் இல்ம் வஅலிய் யுன் பாபுஹா' (நான் அறிவென்னும் பட்டணம், அலீ அதன் வாயல்) என்று கூறினர் அண்ணல்.

அந்த அலீ என்ற வாயலின் வழியாக இறைவன் அண்ணல் 'அவர்களுக்கு 'வஹீ' மூலம் போதித்த அந்த ஆன்மீக அறிவு ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் மூலமாக உலகில் தோன்றிய, தோன்றிக் கொண்டிருக்கும் பல்லாயிரக்கணக்கான வலிமார்களுக்கும் வந்து கொண்டிருக்கின்றது.

இஃதன்றி எவ்வாறு நபிமார்கள் 'வஹீ' மூலம் இறைவனிடமிருந்து ஆன்மீக அறிவைப் பெற்றனரோ, அதேபோன்று இவர்கள் 'இல்ஹாம், மூலம் இறைவனிடமிருந்து ஆன்மீக அறிவைப் பெற்றார்கள்.

"இறையுதிப்பு (இல்ஹாம்) அனுபவத்தை அறிந்த ஒருவருக்குத்தான் இறைவெளிப்பாட்டின் (வஹீ) அனுபவம் எத்தகையதாக இருக்கும் என்பதை விளங்க முடியும்." அதாவது, இல்ஹாம் என்பதை அனுபவித்த இறைநேசருக்கு வஹீ என்பதன் தாற்பரியத்தை விளங்கிக்கொள்வது எளிது.

ஆனால் சிந்திப்பதே சிரமமாய் இருக்கும் சராசரி மனிதனுக்கு வஹீ என்பது நம்பிக்கை என்னும் அளவில் ஒரு கருத்துருவமாய் இருக்குமே அன்றி, அதை விளங்குவது என்பதெல்லாம் சாத்தியமே இல்லை. எனவேதான் அகவிழிப்புணர்வு நிலைகளில் முன்னேறுவதற்கான பயிற்சிகளில் கவனம் செலுத்தி முயலுமாறு சூஃபித்துவம் கூறுகிறது.

இதனையே பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களும், " நீங்களெல்லாம் இறக்கக் கூடிய மனிதர்களிடமிருந்து அறிவைப் பெறுகின்றீர்கள். நாங்களோ பிறப்பு இறப்பில்லா இறைவனிடமிருந்து அறிவைப் பெறுகின்றோம்" என்று கூறினர்.

இதன் காரணமாகவே பள்ளி சென்று ஒழுங்காகப் பயிலாத பலர் இறைவனால் 'இல்ஹாம் மூலம் அறிவு போதிக்கப்பட்டு ஆன்மீகப் பேரரசர்களாக விளங்கினர்; விளங்குகின்றார்கள்.

ஆன்மீகப் பெருங்கடலில் மூழ்கி அவர்கள் கொண்டு வந்த மணிமணியான கருத்துக்கள் சிலபொழுது மார்க்கத்திற்கு முரண் போன்று தோன்றிய தன் காரணமாக, அவர்கள் இறைவனளவில் தங்களை அழித்துக் கொண்ட ஃபனா நிலையில் கூறிய சொற்கள் ஷரீ அத்திற்கு மாறுபட்டதாகத் தோன்றியதன் காரணமாக, மார்க்க விற்பன்னர்கள் அவர்களைக் காஃபிர் என்றும் ஸிந்தீக் - (மார்க்கத்தை விட்டு வெளியேறியவர் - நிரீஸ்வான்) என்றும் கூறினார்கள்.

மார்க்க அறிவும், ஆன்மீக அறிவும் அறியின் இரு வேறுபிரிவுகளாகும். மார்க்க அறிவு மோர் என்றால் ஆன்மீக அறிவு வெண்ணெய்யாகும். இரண்டும் வெவ்வேறு தன்மை பெற்றதாகும்.

இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் நிஜாமிய்ய மதரஸாவின் முதல்வராக இருந்து பணியாற்றிய பல்லாண்டுகளுக்குப்பின் தான் இந்த உண்மையைக் கண்டறிந்தார்கள். மாபெரும் மார்க்க விற்பன்னராகிய அவர்கள் ஆன்மிக கடலில் கணுக்கால் அளவு தண்ணீரிலேயே நிற்கும்பொழுது, ஆன்மீக அறிஞர்கள் அதில் மூழ்கிக் குளித்துக் கொண்டிருப்பதைக் கண்டு அவர்கள் தம் வாழ்விலேயே வெறுப்புற்று பதவி துறந்து, நாடு துறந்து, ஆன்மீகத் துறையில் ஈடுபட்டனர்.

இதுபற்றிய தங்களின் அனுபவங்களை, அவர்கள் "பிழையிலிருந்து விடுதலை' என்ற தம் நூலில் எடுத்தியம்புகின்றார்கள்.இதன் பின் தான் அவர்கள் மன அமைதியுற்றனர். இதன்பின் தான் அவர்கள் தான் உண்மையான அறிவைப் பெற்றதாகவும் உணர்ந்தார்கள்.

## சூ:.பி ஞானப் பொக்கிஷங்கள் 16

( உமக்கு ஒன்றும் தெரியாது சும்மா இரும் )



ஒரு நாள் ஜலாலுதீன் ரூமி (ரஹ் ) அவர்கள் பள்ளியில் மாணவர்களுக்கு கல்வி போதித்துக் கொண்டிருந்தார்கள்

அங்கு காட்டு வாழ் மனிதரைப் போன்று ஒருவர் வந்து," இஃது என்ன ? " என்று வினவினார்.

"இதைப் பற்றியெல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது சும்மா இரும்" என்றார் மௌலானா ரூமி சற்று வெறுப்போடு

அவ்வளவுதான் ,வந்த மனிதர் அங்கிருந்த நூல்களெல்லாம் அள்ளி பக்கத்திலுள்ள தண்ணீர் தொட்டியில் போட்டு தண்ணீரில் முழ்கடித்து விட்டார்கள்.

அது கண்ட ரூமி அவர்களும் அவர்களின் மாணவர்களும் அலறி துடித்துவிட்டனர். அந்த நூல்களெல்லாம் பல வருடம் ரூமி ஆய்வு செய்து எழுதிய கிதாபுகள்

அப்பொழுது அந்த மனிதர் அமைதியாக அந்த தண்ணீர் தொட்டிக்குள் கையை விட்டு அத்தனை நூல்களையும் வெளியே எடுத்தார்

என்ன வியப்பு "அந் நூல்களெல்லாம் தண்ணீரில் நனையாது எப்படி இருந்தோ அப்படியே இருந்தன அதைப் பார்த்த ரூமி அவர்கள் அவரிடம் "இது என்ன? என்று வினவ,

"இதைப் பற்றியெல்லாம் உமக்கு ஒன்றும் தெரியாது சும்மா இரும்" என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு வெருண்டோடினார் அந்த மனிதர்.

இப்பொழுதுதான் " வந்த மனிதர் சாமான்யரல்லர் .தாம் கற்ற கல்வி வேறு, அவர்கள் கற்ற கல்வி வேறு " என்ற உண்மையை மௌலானா ரூமி ( ரஹ்) அவர்கள் உணர்ந்து வந்த மனிதர் ஷம்சுத் தப்ரேஸ் (ரஹ்) அவர்கள் என்பதை தெரிந்து கொண்டு,

அவரை பின் தொடர்ந்து ரூமி அவர்கள் ஓடிக் கண்டு பிடித்து அவர்களிடம் பிழை பொறுத்தருளுமாறு வேண்டி அவர்களின் ஆன்மீக மாணவராகி அதற்குப் பிறகே ரூமி அவர்கள் உலகப் பிரசித்துப் பெற்ற மாபெரும் கருத்துப் பெட்டகமான "மஸ்னவி " யை உலகுக்கு தந்தார்கள்

**சூ:ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 17**

( இரு அப்பாக்கள் )



சூ:ஃபி ஞானி பீர்முஹம்மது அப்பாவை சதக்கத்துல்லா அப்பா அவர்கள் தக்கலைக்கு வந்து சந்தித்து இருக்கிறார்களென்பதை செவிவழிச் செய்திகள், மற்றும் பல பதிவு செய்யப்பட்ட தொன்மமும் கலந்து எழுதப்பட்டிருக்கிற ஆய்வுகள் மற்றும் ஆவணப்படுத்தப்பட்ட பற்பல கட்டுரைகளிலிருந்து அறிய முடிகிறது.

இவற்றுள் முக்கியமான பதிவு என்பது தக்கலை அஞ்சுவன்னம் பீர்முஹம்மதிய்யா முஸ்லிம் அசோசியேஷன் மூலமாக வெளிவந்த ஞானப்புகழ்ச்சியின் 1955, 1977 மற்றும் 2013 வருடங்களில் வெளிவந்த பதிப்புகளில் குறிப்பிடப்பட்டிருக்கும் செய்திகளாகும்.

"அந்த நாளில் சன்மார்க்கப் பணியில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருந்த ஹஸரத் சதக்கத்துல்லா அப்பா (ரலி) அவர்களும் பீர்முஹம்மது அப்பா (ரலி) அவர்களின் பெருமையினைக் கேள்விப்பட்டார்கள்.

கோட்டாறிலே வாழ்ந்திருந்த சிலருக்கு அப்பா அவர்களைப் பற்றிக் கேட்டெழுதியிருந்தார்கள். அவர்கள் எழுதிய பதிலிலிருந்து அப்பா அவர்களைப் பற்றிய முழு விவரத்தையும் அறிந்து கொள்ள முடியாததால் சதக்கத்துல்லா ( ரலி ) அவர்கள் தக்கலைக்குப் புறப்பட்டார்கள்.

ஒரு காட்டின் நடுவில் அவர்கள் வந்தபோது நேரம் இருட்டிவிட்டது. தூறிக் கொண்டிருந்த மழையும் சீறியது. தூரத்தில் பார்த்தார்கள். அங்கு ஒரு சிறு விளக்கொளி தெரிந்தது. மறவர்கள் யாரும் அதில் வசிப்பார்களோ என்று எண்ணினார்கள். உறுமும் மிருகங்கள் ஊறு விளைவிக்கும் காட்டிலே இப்படி ஒரு குடிலா? என்று வியந்த வண்ணம் அதன் அருகே சென்றார்கள்.

வீட்டினுள் ஒளி தெரிந்தது. உள்ளே எட்டிப் பார்க்குமுன் அவர்கள் காதுகளில் ஓர் ஒலி பாய்ந்தது. அந்த ஒலி, நடுக்காட்டில் எழுந்த அந்த நாத ஒலி, அவர்களைப் பிரமிக்க வைத்து விட்டது. ஏனென்றால் அது இஸ்லாத்தின் இதய ஒலியாக, அல்லாஹு அக்பர் என்ற அமுத ஒலியாக இருந்தது. உள்ளே பார்த்தார்கள். ஒரு பெண்மணி தொழுது கொண்டிருந்தார்கள். பக்கத்தில் ஆறு வயதில் ஒரு பெண் பிள்ளையும் அமர்ந்திருந்தது. என்ன நடக்கிறது என்று வியப்போடு அமர்ந்து பார்த்தார்கள்.

இஷா தொழுகையை முடித்து விட்டு அந்தப் பெண்மணி சிறுமியைப் பார்த்து, "மகளே, வீட்டின்முன் சென்று பார். சந்தேகத்தோடு வந்து வியப்பு மேலிட நின்று கொண்டிருக்கிறார், சதக் என்ற ஒரு பெரியார். அவரை உள்ளே அழைத்து வந்து உட்கார வை" என்று சொன்னார்கள்.

வியப்பு என்ற விரிகதையின் பக்கங்கள் புரண்டு கொண்டிருந்தன. உட்கார்ந்து அளவளாவிய சிறிது நேரத்திலேயே அவர்கள் உணர்ந்து கொண்டார்கள். அந்தப் பெண்மணி 'வலி' பதவியைப் பெற்றவர்கள் என்று. அங்கிருந்து புறப்படும் நேரம் வந்தது.

அவர்கள் அந்தப் பெண்மணியைப் பார்த்து, "நான் வந்து கொண்டிருப்பதை நீங்கள் அறிந்து கொண்டீர்கள்; எனது வியப்பையும் புரிந்து கொண்டீர்கள். என் பெயர் சதக் என்றும் சரியாகச் சொன்னீர்கள்ளர்கள். அளவுக்குப் பாக்கியம் பெற்றவர்களாக உகந்த ஆக்கிவிட்டவர்கள் யார் என்று நான் அறியலாமா?" என்று கேட்டார்கள்.

அந்தப் பெண்மணி கூறினார்கள் "சொல்கிறேன் சதக் அவர்களே, இந்தச் சிறுதுளியை உருவாக்கியது ஒரு பெருங்கடல், அறிந்து கொள்ளுங்கள்; அவர்கள்தான் பீர்முஹம்மது (ரலி) என்னும் ஞானக்கடல்" என்று. சதக்கத்துல்லா அப்பா அவர்கள் வியப்பின் உருவானார்கள். அந்தத் தடவை அவர்கள் தக்கலைக்கு வராமலே திரும்பிச் சென்றார்கள்.

பின்னால் அவர்கள் முஹைதீன் பிள்ளை புலவருக்கு, தாம் அப்பா அவர்களைப் பார்க்க விரும்புவதாகவும் அதற்கு அவர்களின் அனுமதி பெற்றுப் பதிலிறுக்குமாறும் மடல் எழுதினார்கள்.

அப்பா அவர்கள் இசைவு தெரிவிக்க அவர்கள் புறப்பட்டு வந்தார்கள். பக்கத்திலே அமர வைத்தார்கள், பரிமாறிய வார்த்தைகளில் உள்ளம் மலர வைத்தார்கள். சமயம் சக்கரத்தின்மேல் சுழன்றது. அசர் நேரம் வந்தது. பாங்காக வந்த பாங்கின் ஒலி கேட்டு, ஹஸரத் அவர்கள் எழுந்து கொண்டார்கள். "நீங்கள் முன்னால் செல்லுங்கள், நான் வருகிறேன்" என்று அப்பா அவர்கள் சொல்ல...,

ஹஸரத் அவர்கள் தங்கள் ஜின் அஞ்சலில் ஏறி மக்கா சென்றார்கள். அப்போது கஃபாவின் வாசலில் ஓர் அரபி நின்றுகொண்டு, "பீர்முஹம்மது ஒலியுல்லா (ரலி) அவர்களின் தலைமையில் ஜமாஅத் நடக்கிறது; பேறு பெற்றோர்களெல்லாம் சேர்ந்து கொள்ளுங்கள்" என்று கூறிக் கொண்டிருந்தார்.

அதிசயித்துப்போன சதக்கத்துல்லா (ரலி) அவர்கள், காலம் தாழ்த்தாது ஒலு செய்துகொண்டு, ஜமாஅத்தில் கலந்து கொண்டார்கள். தொழுகை முடிந்தது. இமாமாக இருந்த அப்பா அவர்கள் எழுந்திருக்கவில்லை. சிறிது நேரம் பார்த்து விட்டு ஹஸரத் அவர்கள் தங்கள் ஜின் அஞ்சலில் ஏறி தக்கலையில் அப்பா அவர்கள் வசித்திருந்த வீட்டிற்கு வந்து சேர்ந்தார்கள்.

அங்கு பேரதிசயம் ஒன்று அவர்களுக்குக் காத்திருந்தது. ஆம். அப்பா அவர்கள் காக்குழியில் நின்று நெய்து கொண்டிருந்தார்கள். இதனைப் பார்த்து ஹஸரத் அவர்கள் கத்தனையே புகழ்ந்து கொண்டார்கள். தங்களையே மறந்து நின்றார்கள்.

பிரமிப்பு உலகைவிட்டு அவர்களை பீர்முஹம்மது அப்பா (ரலி) அவர்கள் அழைத்தார்கள். "இன்னும் பாருங்கள் என்று கூறிக் காக்குழியின் உள்ளே அவர்களைக் குனிந்து பார்க்கச் சொன்னார்கள். பார்த்தார்கள், சதக்கத்துல்லா (ரலி) அவர்கள் அங்கே காக்குழியின் உள்ளே மக்கா தெரிந்தது; மாண்புறும் கஃபா தெரிந்தது.

"தக்காரைக் காணத்தான் தக்கலைக்கு வந்தோமோ; சீமானின் குத்பைத் தான் சந்திக்க வந்தோமோ" என்றெல்லாம் எண்ணி அவர்கள் பூரித்தார்கள். அன்று இரவு முழுவதும் அப்பாவோடு கழிந்தது. (ஞானம் முழ்கிக்குளித்த நதி - **Thuckalay Haleema** )

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 18

( இறைவனை அறியும் ஞானம்)\



قَالَتِ الْاَعْرَابُ اٰمَنَّا قُلْ لَّمْ تُؤْمِنُوْا وَلٰـكِنْ قُوْلُوْۤا اَسْلَمْنَا وَلَمَّا يَدْخُلِ الْاِيْمَانُ فِىْ قُلُوْبِكُمْ وَاِنْ تُطِيْعُوا اللّٰهَ وَرَسُوْلَهٗ لَا يَلِتْكُمْ مِّنْ اَعْمَالِكُمْ شَيْــًٔـــا اِنَّ اللّٰهَ غَفُوْرٌ رَّحِيْمٌ

“நாங்களும் ஈமான் கொண்டோம்” என்று (நபியே! உம்மிடம்) நாட்டுப் புறத்து அரபிகள் கூறுகிறார்கள், “நீங்கள் ஈமான் கொள்ளவில்லை. எனினும் “நாங்கள் வழிபட்டோம்” (இஸ்லாத்தைத் தழுவினோம்) என்று (வேண்டுமானால்) கூறுங்கள் (என நபியே! அவர்களிடம்) கூறுவீராக.

“ஏனெனில் உங்களுடைய இதயங்களில் (உண்மையான) ஈமான் நுழையவில்லை; மேலும், நீங்கள் அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் வழிப்பட்டு நடப்பீர்களாயின் அவன் உங்களுடைய நற்செய்கைகளில், எதையும் உங்களுக்குக் குறைக்க மாட்டான்” நிச்சயமாக அல்லாஹ் மிக மன்னிப்பவன்; மிக்க கிருபையுடையவன்.

(குர்ஆன் : 49:14)

الْمُوْءُ مِنْ أَفْضَلُ مِنَ الْكَعْبَةِ

(மூமினானவன் கஃபாவைவிடச் சங்கை பொருந்தியவன்) அந்த ஈமான் (விசுவாசம்) "லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹி" என்பதேயாகும்.

கருத்தாவது: "ஜனங்களே, உங்கள் நப்ஸு அல்லாஹ் அல்ல. நானே அல்லாஹ்." இலாஹு என்பதன் கருத்து நப்ஸு என்பதாகும். எனவே, பொடுபோக்காளர்கள் தங்கள் நப்ஸுக்கு வழிபட்டு இரவும் பகலும் அதற்குக் கீழ்படிந்து நடக்கிறார்கள்; அல்லாஹ்குக் கீழ்படிந்து நடக்கவில்லை".

أَفَرَأَيْتَ مَنِ اتَّخَذَ إِلَهَهُ هَوَاهُ

"தன்,(மனம் போன போக்கில்) ஆசாபாசங்களை (தான் வணங்கும் ) விக்கிரஹமாக ஆக்கிக்கொண்டவனை நீ பார்க்கவில்லையா?" என அல்லாஹுத் தஆலா திருவுளமாயிருக்கிறான்.

ஜனங்களில் பலர் நப்ஸே அம்மாராவின் அடிமைகளாயுள்ளனர். அல்லும் பகலும் அதன் வழிபாட்டிலேயே கிடந்து உழலுகின்றர். இதுவே எல்லா விக்ரகங்களுக்கும் அடிமூடாயுள்ளது. அதனை இல்லாமலாக்க வேண்டும் என்றுதான் ஆண்டவன் கட்டளை இட்டுள்ளான். இறை வணக்கத்துக்குத் தடையாய் இருப்பதே - அல்லாஹ் அல்லாததே - விக்கிரகம் என்று கூறப்பட்டிருக்கிறது என்பதை அறிந்து கொள்ளுங்கள். (குர்ஆன் : 45:23)

விக்கிரகம் என்பதன் அசல் கருத்து

"இறைவன் ஒருவனே அல்லாது வேறாக நாம் காண்பதே விக்கிரகம்" எனப் பெரியார் ஒருவர் தமது கவியில் கூறியுள்ளார்.

இறைவன் "லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹி" என்பதை முதல் கடமையாக ஆக்கியுள்ளான். அதாவது, மனிதன் எல்லா உள்ளமைத் தோற்றங்களையும் இல்லாமையாக்கிவிடும்படி கட்டளை இட்டிருக்கிறான். இந்தக் கலிமாவை (மூலமொழியை)விட மேன்மையான வேறொரு மொழி இறங்கவே இல்லை.

இக்கலிமாவின் தத்துவமானது எழுபது வருஷம் ஒருவன் காபிராய் இருந்தாலும் (ஏக நாயன் உண்டென்னும் உண்மையை நம்பாத அஞ்ஞான இருட்டில் இருந்திருந்தாலும்), ஒரு தடவை முழு மனத்துடன் கலப்பறுதலாக இக்கலிமாவை விண்ணப்பம் செய்வானாகி ல் அவன் சொர்க்கவாதியாகி விடுவான் என்பது நபி மொழி.

இந்த ஓர்மையான கலிமாவை வாயால் விண்ணப்பஞ் செய்து மனத்தில் உண்மை என்று ஒப்புக்கொள்ளாதவரையில் ஒருவன் முஸ்லிமாக முடியாது.

கலிமாவின் உட்கருத்து

இந்த மணமான கலிமாவின் கருத்து (இறைவனின் ஏகத்துவத்தை) அறிவதாகும். மஃரிபத்தென்னும் இந்த ஞானத்தைச் சுமந்த இவ்வடியானின் அமல்கள் சாலிஹானவையாய் இருக்கும். முதலாவதாக, உலக ஆசாபாசங்களை விட்டும் அகச்சுத்தி பெறுவதற்கு வணக்கம், நற்குணங்கள் முதலிய சகல அனுஷ்டானங்களும் அவசியமானவையாய் இருக்கின்றன.

அதன் பின்னர் இப்பரிசுத்தத் தன்மையை நிலைநிறுத்துவது மிகவும் முக்கியமாகும். ஆனதால் "காமில் ஈமான்" (சம்பூரண விசுவாசம்), "இல்மே மஃரிபத்" (ஞானத் தெளிவு)தின்மீது நிலைத்ததாய் இருக்கிறது. ஞானமின்றி சம்பூரண விசுவாசமில்லை. (அதாவது ஈமான் சம்பூரணமாகாது).

ஹதீதில் சொல்லப்பட்டுள்ளது: (ஒரு நாள்) சஹாபாக்கள், "நாயகமே. அமலில் (நடத்தையில்) மேலானது எது?" என்று வினவினார்கள்.

அதற்கு நாயகம்(ஸல்) அவர்கள், "மஃரிபத்துல்லாஹ்வென்னும் இறைவனை அறியும் ஞானக் கல்வி என்று பதிலளித்தார்கள்.

இதற்குச் சஹாபாக்கள், "நாங்கள் நடத்தையைப்பற்றி கேட்கிறோம்" என்றார்கள்.

நாயகம் (ஸல்) அவர்கள் மறுபடியும் அதே பதிலைக் கூறினார்கள்.

மூன்றாம் தடவையும் சஹாபாக்கள், "நாங்கள் நடத்தையைப் பற்றிக் கேட்கிறோம் நாயகமே! தாங்கள் அறிவைப்பற்றிக் கூறுகிறீர்கள்" என்று வினவினர்.

நாயகம் (ஸல்) அவர்கள், "அறிந்து நடக்கும் நடத்தை பயன் தரும். அறியாமல் செய்யும் அமல்கள் பயனற்றுப்போகும்" என்று திருவுளமானார்கள்.

கருத்தாவது : உங்களை நீங்கள் கலிமாவைக் கொண்டு நன்கறிந்து சொற்ப நேரம் வணங்கும் வணக்கமாவது நீங்கள் உங்களை அறியாமல் வெளிப்படையாய் செய்யும் வணக்கத்தைவிட பிரயோஜனமானதாய் இருக்கும். ஞான அறிவின்றி நடைபெறும் நடத்தை பயனற்றுப் போகிறது. இக்கருத்தையொட்டியே,

أَوَّلُ الدِّينِ مَعْرِفَةُ اللهِ

"மார்க்கத்தில் முதன்மையானது இறைவனை அறியும் ஞானம்" எனக் கூறப்பட்டிருக்கிறது.

இதையே தக்கலை பீர்முகம்மது அப்பா அவர்கள் "ஞான இரத்தினக் குறவஞ்சி"

தன்னை அறியுந் தலமேது சொல்லடி சிங்கி! - அது

கண்ணிடை யான நடுநிலை யல்லவோ சிங்கா!

என்ன விதமாகத் தன்னை யறிவது சிங்கி! -அது

தன்னவன் தாய்தந்தை யாகிநா மானது சிங்கா!

இறையை அறிவது மெப்படிச் சொல்லடி சிங்கி! -

அது இறையெங்கு நின்றிடுந் தன்நினை வாகுமே சிங்கா!

தன்னுள் விளங்கும் தவமென்ன சொல்லடி சிங்கி! - அது

தன்னை மறந்து தவத்தி லிருப்பது சிங்கா!

என்ன விதமாகத் தன்னை மறப்பது சிங்கி! -அது

ஒன்றைப் பொருந்தி ஓடுங்கி யிருப்பது சிங்கா!

என்ன விதமாக ஒன்றைப் பொருந்தலாம் சிங்கி! -அது

எல்லா மறந்து மிருளா யிருப்பது சிங்கா!

## சூ்பி ஞானப் பொக்கிஷங்கள் 19

( வஹ்ததுல் வுஜூத் - இருப்பின் ஒன்று) பகுதி - 1



"வஹ்தா என்றால் ஒன்று, வுஜூத் என்றால் இருப்பு. எனவே, வஹ்ததுல் வுஜூத் என்றால் இருப்பின் ஒன்று என்று பொருள்.

இஸ்லாமிய சிந்தனையில் சூபித்துவம் தோன்றி வளர்ச்சியடைந்தில் இருந்து சமய அறிஞர்களுக்கும் (உலமாக்களுக்கும்), சூ்பி ஞானியர்களுக்குமிடையே ஒரு அமைதியான முரண்பாடு ஆரம்பித்திருந்தது.

பின்னைய காலப்பகுதியில் இம்முரண்பாடு பாரதூரமான பரிணாமங்களை அடைந்தது. இப்பின்புலத்தில் சூபித்துவ சிந்தனையில் பாரிய செல்வாக்கைச் செலுத்திய மாபெரும் பேறிஞர் என அழைக்கப்படும் இப்னு அறபி (ரஹ்) அவர்களின் 'வஹ்ததுல் வுஜூத்' (இருப்புண்மை ஒன்றே), எனும் கோட்பாட்டை மெய்யியல் ரீதியாக மொழிப்பகுப்பாய்வு செய்வதை பிரதான நோக்கமாக இது கொண்டுள்ளது.

இப்னு அரபி (ரஹ்) அவர்களின் கோட்பாடு "உள்ளமை" பற்றிய ஒருமை வாதமாக அடையாளப்படுத்தப்படுகிறது. அதாவது ஒரு இருத்தல் மட்டுமே உண்டு. மற்ற இருத்தல்கள் அந்த ஒரு இருத்தலின் வெளிப்பாடுகளாகும்.

எனினும் பலருக்கு இக்கோட்பாட்டின் நுட்பமும், யதார்த்தமும் புரிவதில்லை. அப்படித்தான் சொல்ல வேண்டும். சாதாரண மக்களின் அறிவிற்கும் நம்பிக்கைக்கும் சவாலாகவும் இது அமைந்துள்ளது. இந்த விஷயத்தில் நடந்த தவறுகளைக் கண்டறியும் முயற்சியில் மொழிப்பகுப்பாய்வானது தெளிவினை ஏற்படுத்தும் என நினைக்கிறேன்

அனைத்து சிருஷ்டிகளும் அல்லாஹ்வால் படைக்கப்பட்டவையாகும். அவன் அவற்றை தன்னிலிருந்தே படைத்தான். தோற்றச் செய்தான். அவற்றுக்கு அவனே கரு - மூலப்பொருள் அவனே ஆவான்.

ஒரு வஸ்துவை அல்லாஹ் படைப்பதாயினும் அல்லது ஒரு வஸ்துவை ஒரு மனிதன் செய்வதாயினும் அதற்கு ஒரு மூலம் -கரு (ஆரம்பம்) அவசியமாகும். எதுவாயினும் அது அதன் மூலத்திலிருந்தே ஆரம்பமாகி வரவேண்டும். ஏனெனில், "அதம்" - இல்லாமை என்பது உண்டாக முடியாது.

எனவே அந்த மூலப்பொருளே அந்த வஸ்த்துவுக்கு 'வுஜூத்" ஆகும். அந்த வுஜூதுதான் "வுஜூதே ஹகீகீ" எதார்த்தத்தில் வுஜூத் ஆகும். சிருஷ்டிக்கு எதார்த்தத்தில் "வுஜூத்" இல்லை. ஆயினும், அதனை "வுஜூதே இழாபீ" ஒன்றுடன் சேர்த்துப்பார்க்கும் வகையிலுள்ள 'வுஜூத்" எனப்படுகிறது.

சிருஷ்டிக்கு அல்லாஹ்வுடைய வுஜூது-உள்ளமைதான் கருவாகவும் மூலமாகவுமிருப்பதால் ஒரு வஸ்து அதன் மூலத்தை விட்டும் பிரியமாட்டாதென்ற தத்துவப்படி சிருஷ்டி அதன் மூலமான அல்லாஹ்வின் உள்ளமையை விட்டும் ஒருபோதும் பிரியமாட்டாது.

மேலும் ஒரு வஸ்து அதன் மூலத்துக்கு வேறாகாமல் அது தானானதாயிருப்பது போல் சிருஷ்டி அல்லாஹ்வின் உள்ளமைக்கு வேறாகவுமாட்டாது. இது அதுதான். அது இதுதான். மெய்ப்பொருள் என்ற அடிப்படையில் இரண்டும் வெவ்வேறல்ல. ஒன்றே ஒன்றுதான்.

புரிய வைக்க எளிய உதாரணம் சொல்றேன் 'தங்கமோதிரம்'

மோதிரத்துக்கு மூலம் தங்கம். மோதிரம் என்பது தங்கத்திலிருந்து வந்துள்ளது. அந்த மூலம்தான் இந்த மோதிரத்தின் "வுஜூத்" ஆகும். அதுவே "வுஜூத் ஹகீகீ" எதார்த்தமான வுஜூத் ஆகும். மோதிரத்துக்கு எதார்த்தத்தில் வுஜூத் இல்லை. இருப்பதுபோல் தெரிவது "வுஜூது இழாபி" ஒன்றுடன் சேர்த்துப்பார்ப்பது கொண்டுள்ள வுஜூத் மட்டும்தான். இது பொய் "வுஜூத்" ஆகும்.

மோதிரத்துக்கு எதார்த்தமான வுஜூத் உண்டென்று யாராவது சொன்னால் மோதிரமென்று ஒரு வஸ்து எதார்த்தத்தில் தங்கத்தை விட்டும் வேறாகி தனியாக இருப்பதை அவர் காட்ட வேண்டும். அவ்வாறு காட்ட முடியாது. அவர் காட்டுவதாயின் மோதிரத்தின் வடிவத்தை காட்டலாம். அது ஏற்றுக் கொள்ள முடியாததாகும்.

ஏனெனில், அது தங்கத்தின் வடிவமேயாகும். அந்த வடிவம் மோதிரம் என்ற பெயரைப் பெற்றதேயன்றி எதார்தத்தில் தங்கத்துக்கு வேறான தங்கத்தை விட்டும் பிரிந்த தனியான வடிவமல்ல அதாவது தங்கத்தை விட்டும் பிரிந்த தனியான மோதிரமல்ல. இப்போது உங்களுக்கு புரிந்திருக்கும் என நினைக்கிறேன்.

இவ்வாறுதான் அல்லாஹ்வும் அவனுடைய சிருஷ்டிகளுமாகும்.

தங்கத்தை அல்லாஹ்வுக்கும் மோதிரத்தை சிருஷ்டிக்கும் உதாரணமாகக் கொண்டு ஆராய்ந்தால் இந்த உண்மை விளங்கும்.

மோதிரத்தின் மூலம் தங்கம்தான் என்றும், மோதிரம் தங்கத்தை விட்டும் பிரியவில்லை என்றும் மோதிரம் தங்கத்துக்கு வேறான தனியான ஒரு பொருள் அல்லவென்றும் சொல்வது தவறா? எதார்த்தத்துக்கு முரணா? அவ்வாறு சொன்னவனை பைத்தியக்காரனென்று சொல்வது புத்திசாலித்தனமா?

அல்லாஹ்வுக்கு அவனின் சிருஷ்டிக்குமுள்ள தொடர்பு தங்கத்துக்கும் மோதிரத்துக்கும் உள்ள தொடர்பு போன்றதேயன்றி மோதிரத்துக்கும் பொற்கொல்லனுக்கும் உள்ள தொடர்பு போன்றதல்ல. தங்கத்துக்கும் மோதிரத்துக்குமுள்ள தொடர்பு நிலையானதும் முடிவற்றதுமாகும்.

ஆனால் மோதிரத்துக்கும் பொற்கொல்லனுக்குமுள்ளதொடர்பு நிலையானதல்ல. மோதிர வேலை முடிந்ததோடு அவனின் தொடர்பு அந்த மோதிரத்திலிருந்து துண்டிக்கப்படுகிறது.

எனவே அல்லாஹ்வுக்கும் சிருஷ்டிக்குமுள்ள தொடர்பு; மோதிரத்துக்கும் தங்கத்துக்குமுள்ளதொடர்பு போன்று, கடல் அலைக்கும், நீருக்குமுள்ள தொடர்பு போன்று, கானல் நீருக்கும் வெப்பக் காற்றுக்குமுள்ள தொடர்பு போன்று என்றறிதல் அவசியம்,

அல்லாஹ் அனைத்து சிருஷ்டிகளையும் தன்னிலிருந்து படைத்தான்; வெளிப்படுத்தினான்; தோற்றச் செய்தான் என்றால் ஒரு பெட்டிக்குள்ளிருந்த பொருட்களை அப்பெட்டியிலிருந்து வெளிப்படுத்தியதுபோல் என்று விளங்கிக் கொள்ளக்கூடாது. இது இரண்டு உள்ளமையைக் குறிக்கும்.

ஒன்று: பெட்டி, மற்றது அதிலுள்ள பொருட்கள்.

இரண்டு உள்ளமைகள் இல்லை என்பதே இஸ்லாத்தின் முடிவு. துவிதம் இஸ்லாம் அல்ல. மேலும், தங்கம்-மோதிரம் என்ற உவமானம் இரண்டுக்குமிடையேயான ஒரு குறிப்பிட்ட மூலப்பொருள் ரீதியான ஒற்றுமையை விளக்க கூறப்பட்டதே தவிர, வேறு பல அம்சங்களில் அவ்வுதாரணத்தை பொருத்திப் பார்க்கக் கூடாது.

உதாரணமாக தங்கத்தை தட்டி, கொட்டி, வளைத்து விகாரப்பட்டுத்தான் மோதிரமாக வந்துள்ளது. அதனால் அல்லாஹ்வுடைய தாத்-உள்ளமை விகாரப்பட்டு சிருஷ்டியாக வந்துள்ளது என்று எண்ணிவிடக்கூடாது. "ஹுவல் ஆன கமா கான" படைப்புகளை படைக்க முன்னர் அவன் எவ்வாறிருந்தானோ அவ்வாறே படைத்த பின்னரும் இருக்கின்றான்.

ஸூபிகளும் இறைஞானிகளும் வஹ்ததுல் வுஜூத் என்ற இறையியல் தத்துவத்தை கற்பனை செய்தோ அல்லது தமது சொந்த கருத்துக்களாகவோ சொல்லவில்லை. ஆயினும் அவர்கள் தமது இந்த வாதத்துக்கு ஆதாரமாக திருக்குர்ஆன் வாசகங்களையும் நபிமொழிகளையுமே கூறுகிறார்கள்,

குறிப்பாக "லா இலாஹ இல்லல்லாஹு " என்ற இஸ்லாமிய மூலப் பிரமாணமான திருக்கலிமாவை - திருவசனத்தை ஆதாரமாக கூறுகின்றார்கள். "லா இலாஹ இல்லல்லாஹு" என்ற மூலமந்திரமும், 'தஸவ்வுப்' என்ற ஸூபிஸமும், அல்குர்ஆனில் குறிப்பிடப்படும் "ஹிக்மத்" என்ற இறைஞானமும் அல்லாஹ் அல்லாத ஒன்றுமில்லை; அவனுக்கு வேறான ஒன்றுமில்லை;

எல்லாமாய் உள்ளவன் அவனே; உள்ளது ஒன்று, மற்றது என்று என்ற "வஹ்தததுல் வுஜூத்" (Oneness of being) தத்துவத்தையே கூறுகின்றன

## ஸூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 20

(வஹ்தததுல் வுஜூத் குறித்து குர்ஆன் மற்றும் ஹதீஸ் ஆதாரங்கள்) - பகுதி – 2



உங்கள் ஞாபகத்திற்காக வஹ்தததுல் வுஜூத் குறித்து முந்தைய பதிலிருந்து ....

சிருஷ்டிக்கு அல்லாஹ்வுடைய வுஜூது-உள்ளமைதான் கருவாகவும் மூலமாகவுமிருப்பதால் ஒரு வஸ்து அதன் மூலத்தை விட்டும் பிரியமாட்டாதென்ற தத்துவப்படி சிருஷ்டி அதன் மூலமான அல்லாஹ்வின் உள்ளமையை விட்டும் ஒருபோதும் பிரியமாட்டாது.

மேலும் ஒரு வஸ்து அதன் மூலத்துக்கு வேறாகாமல் அது தானானதாயிருப்பது போல் சிருஷ்டி அல்லாஹ்வின் உள்ளமைக்கு வேறாகவுமாட்டாது. இது அதுதான். அது இதுதான். மெய்ப்பொருள் என்ற அடிப்படையில் இரண்டும் வெவ்வேறல்ல. ஒன்றே ஒன்றுதான்.

அல்லாஹ் அனைத்து சிருஷ்டிகளையும் தன்னிலிருந்து படைத்தான்; வெளிப்படுத்தினான்; தோற்றச் செய்தான் என்றால் ஒரு பெட்டிக்குள்ளிருந்த பொருட்களை அப்பெட்டியிலிருந்து வெளிப்படுத்தியதுபோல் என்று விளங்கிக் கொள்ளக் கூடாது. இது இரண்டு உள்ளமையைக் குறிக்கும்.

ஒன்று: பெட்டி, மற்றது அதிலுள்ள பொருட்கள். ஆக இரண்டு உள்ளமைகள். இதுவல்ல இஸ்லாம் கூறுவது இதுவல்ல ஒரே ஒரு உள்ளமைதான்.

என் அன்பிற்குரிய நண்பர் **Mujeeb Rahman** ( 8248884935 ) வஹ்தத்துல் உஜூத் பற்றி நாள் கணக்காகப் பேசக் கூடியவர் அவருடைய தளத்திலிருந்து...

வஹ்தத்துல் உஜூத் குறித்த குர்ஆன் மற்றும் ஹதீஸ் ஆதாரங்கள்

ولله المشرق والمغرب فاينما تولّوا فثمّ وجه الله

கிழக்கும், மேற்கும் அல்லாஹ்வுக்குரியது. எப்பக்கம் (புலனால் அல்லது புத்தியால்) முன்னோக்கினாலும் அங்கு அல்லாஹ்வின் முகம் (தத்சொரூபத்தின் வெளிப்பாடு) இருக்கிறது (2:115)

ونحن اقرب اليه من حبا الوريد

நாம் அவனளவில் (அவனுடைய சக்திகளின் அந்தரங்கமாக இருக்கிற விதத்தில்) அவனுடைய பிடரி நரம்பை விட மிக நெருக்கமாக இருக்கிறோம். (50:16)

وهو معكم اينما كنتم

நீங்கள் எங்கிருந்தாலம் (சகலத்திலும் அவனது உஜூது ஊடுறுவி இருக்கிற விதத்தில்) அவன் உங்களுடன் இருக்கிறான். (57:4)

ونحن اقرب اليه منكم ولاكن لا تبصرون

(மரண தருவாயிலிருக்கிற) அவன் அளவில் (அவனுடைய உறுப்புகளாகவும், சக்திகளாகவும் வெளிப்பாடாக இருக்கிற விதத்தில்) உங்களை விட நாம் மிக நெருக்கமாக இருக்கிறோம். என்றாலும் நீங்கள் (அதன் அந்தரங்கத்தை) பார்த்தறிய மாட்டீர்கள். (56:85)

انّ الّذين يبا يعونك انّما يبايعون الله يد الله فوق ايديهم

(நபி நாயகமே!) உங்களிடத்தில் (வெளிரங்கத்தில் கை கொடுத்து) பைஅத்து செய்கிறவர்கள் (எதார்த்தத்தில்) அல்லாஹ்விடத்தில்தான் பைஅத்து செய்கிறார்கள். (குறிப்புகளை விட்டும் பொதுவான) அல்லாஹ்வின் கை (வெளிப்பாடுகளில் நின்றுமுள்ள குறிப்பான) அவர்களது கைகளின் மீது இருக்கிறது.(48:10)

هو الاوّل والآخر والضاهر والباطن وهو بكلّ شيي عليم

அவனே (சகல சிருஷ்டிகளைக் காண) முந்தியவன்,(மள்ஹறு-வெளிப்பாடு ஸ்தானங்களில் வெளிப்படுவதில்) பிந்தியவன், (சிருஷ்டிகளின் கோலங்களைக் கொண்டு) வெளியானவன், (சிருஷ்டிகளின் வெளிப்பாடுகளை விட்டும்) உள்ளானவன். அவன் சர்வ பொருள்களைக் கொண்டும் அறிந்தவன். அவன் சர்வ பொருள்களைக் கொண்டும் அறிந்தவன். (57:3)

وفي انفسكم افلا تبصرون

உங்களது நப்ஸுகளிலேயே (வஹ்தத்துல் உஜூதுடைய அத்தாட்சிகள்) இருக்கிறது. நீங்கள் பார்க்க வேண்டாமா? (51:21)

واذا سئلك عبادي عنّي فانّي قريب

(நபியே!) என்னைப் பற்றி என்னுடைய அடியார்கள் உங்களிடம் கேட்டால் நான் (ஹகீகத்தை-எதார்த்தத்தைக் கொண்டு) சமீபமாக இருக்கிறேன் (என்று சொல்வீராக!) (2:186)

وما رميت اذ رميت ولاكنّ الله رمي

(நபியே! காபிர்கள் மீது மண்ணை) நீங்கள் வீசியபோது(வெளியில் உங்களில் நின்றும் வீசும் கோலம் உண்டானாலும்) நீங்கள் வீசவில்லை. எனினும் (உள்ளாகவும், அந்தரங்கமாகவும் இருக்கிற) அல்லாஹ் வீசினான். (8:17)

وكان الله بكلّ شيي محيطا அல்லாஹு தஆலா (ஒரு அணுவும் கூட விடாத சகலத்திலும் ஊடுருவிருக்கிற விதத்தில்) சகல பொருள்களையும் சூழ்ந்தவனாகிவிட்டான். (4:126)

الا انّه بكلّ شيي محيطஅறிந்து கொள்! நிச்சயமாக அவன் ஒவ்வொரு பொருளைக் கொண்டு சூழ்ந்திருக்கிறான். (41:54)

வஹ்தத்துல் உஜூதின் பேரில் அறிவிக்கின்ற அல்ஹதீது ஆதாரங்கள்.

—اصدق كلمة قالها الشاعر كلمة لبيد

(الا كلّ شيئ ما خلا الله باطل. (متفق عليه

(அறபி) கவிஞர் சொன்ன வார்த்தைகளில் உண்மையான வார்த்தை லுபைது கவிஞரின் 'அறிந்து கொள்! அல்லாஹ் அல்லாத அனைத்து பொருள்களும் பாதிலாகும் – தரிபாடாகாத இல்லாமையாகும்' என்று சொன்னதாகும்.

-புகாரி, முஸ்லிம், மிஷ்காத் ஹதீது எண் 4778

فماذا بعدالحقّي الاّ الضّلال

மெய்ப்பொருளுக்கு (அல்லாஹு தஆலாவின் உஜூதுக்கு) பின்னால் (வழிகேடான) பொய்யே அல்லாதில்லை (10:32) என்ற திருக்குர்ஆன் வசனத்தில் இருப்பது போன்று சிருஷ்டிகளுக்கு ஹக்கு சுபுஹானஹுவதஆலாவின் உஜூது பைழான் - உலிப்பதினால் அன்றி அறவே உஜூது இல்லை.

انّ احدكم اذا قام الي الصّلوة فانّما يناجي ربّه بينه وبين القبلة

உங்களில் ஒருவன் தொழுகைக்கு நின்றால் அவன் தன் ரப்பு-போசகனோடு வசனிக்கிறான். ஆகவே அவனுடைய ரப்பு (தஜல்லியின் புறத்தினால்) அவனுக்கும் கிப்லாவுக்குமிடையில் இருக்கிறான். (அல்ஹதீது)

لا يزال عبدي يبقرّب اليّ لا لنّوافل حتي أُحبّه فاذا احببته كنت سمعه الّذي يسمع له ولصره الّذي يبصر به ويده الّتي يبطش بها ورجله الّتي يكسي بها رواهالبخاري

'என்னுடைய அடியான் நபிலான வணக்கங்களைக் கொண்டு என்னளவில் நெருங்கிக் கொண்டே இருக்கிறான். நான் அவனை உகக்கிற வரையிலும் நான் அவனை உகந்து விட்டால் (بالقوّةபில்குவ்வத்தி-அமைப்பில் இருந்ததைப் போல் بالفعلபில் பி॰॰லி-

வெளியிலும்) அவன் கேட்கின்ற கேள்வியாகவும், அவன் பார்க்கின்ற பார்வையாகவும், அவன் பிடிக்கின்ற கையாகவும் அவன் நடக்கின்ற காலாகவும் நான் ஆகிவிடுகின்றேன்.'

நூல்: புகாரி, மிஷ்காத் ஹதீது எண் 2260

عن ابي هريرة رضي الله عنه قال قال رسوالله صلّي الله عليه وسلّم انّ الله يقول يوم القيامة يا ابن آدم مرضت فلم تعدني......استطعمتك فلم تطعمني...........استسقيتك فلم تسقني...........رواع مسلم

நிச்சயமாக அல்லாஹுதஆலா கியாமத் நாளில் சொல்வான்:-

ஆதமின் மகனே! (மனிதனே!) நான் (சிருஷ்டியான மறதபாவில்-படித்தரத்தில் இறங்கின புறத்தில்) வியாதியஸ்தனாக இருந்தேன். என்னை சுகம் விசாரிக்க வரவில்லை. உணவளிக்க தேடினேன். எனக்கு உணவளிக்க வில்லை. தண்ணீர் புகட்டத் தேடினேன். எனக்கு தண்ணீர் புகட்டவில்லை...(நீண்டதொரு ஹதீதின் சுருக்கம்) -மிஷ்காத் ஹதீது எண்:1523

والّذي نفس محمّد بيده لو انّكم تدلّيتم بحبل الي الاض لهبط علي الله ثمّ قرأعليه الصّلاوة والسلام هو الاوّل والآخر والباطن وهو بكلّ شيي عليم

முஹம்மதுடைய ஆன்மா எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக தண்ணீர் மொள்வதற்கு கயிற்றுடன் வாளியை பூமியில் இறக்குவீர்களேயானால் அது அல்லாஹ்வின் மேல் விழும். பின்பு நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவனே முன்னவன், அவனே பின்னவன், அவனே வெளியானவன், அவனே உள்ளானவன், அவன் சகல பொருள்களையும் அறிந்தவன் என்ற (57:3) திருவசனத்தை ஓதினார்கள். (நூல்: திர்மிதி)

இறைவா! எங்களது அகத்தையும் புறத்தையும் மஃரிபத் எனும் ஞான ஜோதியைக் கொண்டு பிரகாசிக்கச் செய்வாயாக! எங்கள் ஷெய்குமார்களின் அத்தஸவ்வுப்-ஸூபிஸம் மெஞ்ஞான நூற்களைப் படித்து விளங்கி அதன்படி செயல்படுத்தி, சித்தி, முக்தியடைந்து,..,

அவர்களுக்கு கிடைத்த பைளு-அருள் கடாட்சியத்தை போன்று எங்களுக்கும் கிடைத்து இம்மையிலும், மறுமையிலும் திரு லிகா-தரிசனத்தை பெற்று அவர்களுடன் உயர் சுவனபதியில் ஒன்று சேர்ந்து வாழ எல்லாம் வல்ல பரம்பொருளான அல்லாஹு தஆலா நம்மனைவர்கட்கும் நல்லருள் புரிவானாக! ஆமீன்.

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 21

( தாத் , ஸிபாத் ) வஹ்ததுல் வுஜூத் - பகுதி- 3



வஹ்ததுல் வுஜூத் பற்றி பேசும்பொழுதெல்லாம் தாத் , ஸிபாத், லாஹிர், மலாஹிர் (பாத்தின்) , அவ்வல், ஆகிர் போன்ற அழகான அழகான வார்த்தைகள் நமக்கு மயக்கமூட்டுவதாக இருக்கும். இதெல்லாம் எந்த அர்த்தத்தில் பயன்படுத்தப்படுகிறது என்பதைப் பற்றி அடுத்தடுத்த பதிவுகளில் பார்ப்போம்.

"அல்லாஹ்" என்ற பெயர் மட்டும் “தாத்”தின் பெயரென்றும், ஏனைய பெயர்கள் யாவும் “ஸிபாத்” அவனின் தன்மைகளைக் குறிக்கும் பெயர்கள்

தன்மைகளுக்குரிய பெயர்களை எந்த மொழியிலும் மொழியாக்கம் செய்யலாம். உதாரணமாக “றஸ்ஸாக்”- உணவளிப்பவன், “ஹாதீ”- நேர்வழி காட்டுபவன் என்பது போன்று. ஆயினும் “தாத்”தின் திருப்பெயரான “அல்லாஹ்” என்ற பெயரை எந்த மொழியிலும் மொழியாக்கம் செய்ய முடியாது. கடவுள், இறைவன் என்று சொன்னாலும் கூட அது “அல்லாஹ்” என்ற திருப்பெயரின் மொழியாக்கம் என்று கொள்ள முடியாது. கொள்ளவும் கூடாது

இத் திரு நாமம் மட்டுமே உலகிலுள்ள முஸ்லிம்கள் அனைவருக்கும் தெரிந்த ஓர் அற்புத திருநாமமாகும். முஸ்லிம்களுக்கு மட்டுமன்றி அனைத்து மக்களுக்கும் தெரிந்த ஒன்றாகும். அவனின் “ஸிபாத்” தன்மைகளுக்கான அறபு மொழியிலான திரு நாமங்களிற் சில திரு நாமங்கள் மட்டுமே முஸ்லிம்களுக்குத் தெரியும். அது கூட மற்றவர்களுக்குத் தெரியாது.

“அல்லாஹ்” என்று அவனுக்குப் பெயர் சொன்னவர் யார்? அவனேதான் தனக்கு பெயர் வைத்துக் கொண்டானா? அல்லது யாராவது சொன்னார்களா?

இது தொடர்பாக குத்புல் வாஸிலீன் அப்துல் அஸீஸ் அத்தப்பாஙீ றழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியது

“அல்லாஹ்” என்று இறைவனின் “தாத்”திற்கு முதலில் பெயர் சொன்னவர்கள் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களாவர்கள்.

ஆதம் நபி அவர்களை அல்லாஹ் படைத்து அவர்களில் “றூஹ்” உயிரை ஊதியபோது அவர்கள் எழுந்து ஒரு காலின் முழங்காலை – முட்டுக்காலை தரையில் குத்தியவர்களாக ஒரு காலில் நின்றார்கள்.

அவ்வேளை அவர்களுக்கு ஹக்கு தஆலாவின் வலுப்பமிகு காட்சியொன்று கிடைத்தது. அந்தக் காட்சிக்கு என்ன பெயர் வைக்க வேண்டுமென்று அல்லாஹ் விரும்பினானோ அந்தப் பெயரை நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் நாவின் மூலம் வெளியாக்கினான். அந்த நாவு "அல்லாஹ்" என்று மொழிந்தது.

அவர்கள்தான் இறைவனின் “தாத்”திற்கு அல்லாஹ் என்று பெயர் சொன்னார்கள்.

அல்லாஹ்வின் திருநாமங்கள் தொடர்பாக குத்புல் வாஸிலீன் அப்துல் அஸீஸ் அத்தப்பாஙி றழியல்லாஹு அன்ஹு அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள். நபிமார்களிற் பலர் இறைவனுக்கு பெயர் சொல்லியுள்ளார். அவர்கள் கற்பனை செய்து அப்பெயர்கள் சொல்லவில்லை. அவர்களுக்கு ஆன்மீக அடிப்படையில் கிடைத்த “முஷாஹதா” காட்சிகளைப் பொறுத்து அவற்றுக் கேற்ப பெயர்கள் சொன்னார்கள்.

அவர்களில் ஒருவருக்கு ஒரு பொருள் – கருத்து காட்சியாகக் கிடைக்குமாயின் அந்தப் பொருளுக்குப் பொருத்தமான பெயரைச் சொன்னார்கள். அவர்களின் காட்சிக் கேற்றவாறே கருத்துக்கள் வெளியாகின. அதற்கேற்றவாறே பெயர்களும் வைத்தார்கள். பொதுவாக அவனின் திருநாமங்கள் யாவும் அவர்களுக்கு கிடைத்த காட்சி அடிப்படையில் வைக்கப்பட்டவையேயாகும்

இறைவனுக்கு عَلِيْمٌ ، قَوِيٌّ ، عَظِيْمٌ ، مَنَّانٌ)) அலீமுன், கவிய்யுன், அளீமுன், மன்னானுன் என்று முதலில் பெயர் வைத்தவர்கள் நபி இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களேயாவர். இவ்வாறுதான் ஏனைய நபிமார்களும் பெயர்கள் வைத்தார்கள்.

எனினும் அக்காலங்களில் வாழ்ந்த நபிமார்கள் தமது மொழியிலேயே பெயர்கள் வைத்தார்கள். எனினும் திருக்குர்ஆனின் சிறப்பு அவற்றை அறபு மொழியில் ஆக்கியுள்ளதாகும். முன் வாழ்ந்த நபிமார்களின் மொழிகளில் அல்ல.

அல்லாஹ்வின் அறிவில் அவன் “அஸ்மாஉல் ஹுஸ்னா” அழகிய திருநாமங்கள் கொண்டு தனக்கு பெயர் வைக்க வேண்டுமென்று விரும்பி நபிமார்களின் நாவுகளின் மூலம் அப்பெயர்களை வெளியாக்கினான்.

قُلِ ادْعُوا اللّٰهَ اَوِ ادْعُوا الرَّحْمٰنَ اَ يًّا مَّا تَدْعُوْا فَلَهُ الْاَسْمَآءُ الْحُسْنٰى  وَلَا تَجْهَرْ بِصَلَاتِكَ وَلَا تُخَافِتْ بِهَا وَابْتَغِ بَيْنَ ذٰ لِكَ سَبِيْلًا

(நபியே! இவர்களிடம்) கூறும்: ‘நீங்கள் அல்லாஹ் என்று அழைத்தாலும் சரி; ரஹ்மான் என்று அழைத்தாலும் சரி; நீங்கள் எந்தப் பெயரைக் கூறியும் அழையுங்கள். அவனுக்குரிய பெயர்கள் அனைத்தும் நல்லவைதாம்’. மேலும், உமது தொழுகையில் உமது குரலை மிகவும் உயர்த்த வேண்டாம்; மிகத் தாழ்த்தவும் வேண்டாம். இவ்விரண்டுக்கும் இடையில் மிதமான தொனியைக் கடைப்பிடியும். (குர்ஆன் : 17:110)

அந்த அல்லாஹ்தான் படைப்புக்கான திட்டம் வகுப்பவனும் அதனைச் செயல்படுத்துபவனும் அதற்கேற்ப வடிவம் அமைப்பவனுமாவான். அவனுக்கு மிக அழகிய பெயர்கள் இருக்கின்றன. வானங்களிலும் பூமியிலும் உள்ள ஒவ்வொன்றும் அவனைத் துதித்துக் கொண்டிருக்கிறது. மேலும், அவன் யாவற்றையும் மிகைத்தவனும் நுண்ணறிவுடையவனுமாய் இருக்கின்றான்.(குர்ஆன் : 59:24)

அல்லாஹ்வின் 99 பெயர்களை மனனம் செய்பவருக்கு சொர்க்கம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:

நிச்சயமாக அல்லாஹ்விற்கு தொண்ணூற்று ஒன்பது – நூற்றுக்கு ஒன்று குறைவான – பெயர்கள் உள்ளன. அவற்றை (நம்பிக்கை கொண்டு) மனனமிட்டவர் சொர்க்கத்தில் நுழைவார் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 7392.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

"அல்லாஹ்வுக்குத் தொண்ணூற்று ஒன்பது பெயர்கள் உள்ளன. அவற்றை (நம்பிக்கை கொண்டு) மனனமிட்டவர் சொர்க்கம் செல்வார். மேலும், அல்லாஹ் ஒற்றையானவன். ஒற்றைப்படையையே அவன் விரும்புகிறான்". ஸஹீஹ் முஸ்லிம் : 5198.

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 22

( லாஹிர் - தோற்றமாய் வெளியே வியாபித்துள்ளவன் )

"நான்" - என்றுணரும் எனக்குச் சொந்தமான பல நாமங்கள் இருக்கின்றன. "மனிதன்" என்பது என் நாமங்களில் ஒன்று. கை, கால், முகம், வயிறு முதலிய உறுப்புக்கள் யாவும் எனது நாமங்களின் தோற்றங்களாய் இருக்கின்றன. இவையெல்லாம் ஒன்று சேர்ந்த நாமமே "மனிதன்" என்பது. இதுவே எனது முழுத்தோற்றமாகும்.

எனது கை, எனது கால், எனது முகம் என்று என்னுடைய குறிப்பட்ட உறுப்புக்களுக்கு குறிப்பிட்ட ஒவ்வொரு நாமத்தின் தோற்றங்களாகும்.

இதைப்போல, இறைவனுடைய நாமங்கள் தான் அவற்றின் ஸூறத்தோடு தனித்தனிச் சிருஷ்டிகளாய் காட்சியளிக்கின்றன. இவையெல்லாம் சேர்ந்த முழுத் தோற்றமோ றப்பின் "வெளிப்பாடு" ("லாஹிர்", "தஸ்பீஹ்") என்பது,

இந்த வெளிப்பாடுதான் அர்ஷு, குர்ஷி, லவ்ஹு, கலம், சொர்க்கம், நரகம் மற்றும் எல்லா ஆலங்களையும் (உலகங்களையும்), சிருஷ்டியுலகம் அல்லது பிரபஞ்சம் என்று தன்னில் கொண்ட இறைவனின் "லாஹிர்" என்ற முழு ஸூறத்தாயிருக்கிறது. இதற்கு எல்கை எமக்குத் தெரியாது. எனவே, அவனுடைய முழுத் தோற்றத்தை எவராலும், எந்த சிருஷ்டியாலும் காண, அறிய முடியாது.

இந்த ஸூறத்தான பிரபஞ்சத்துக்கு உயிராய் இருப்பவனும் இந்த றப்புத்தான், பிரபஞ்சத்தை எமது புலன்களுக்கமைவாய் காணுகிறோம். பிரபஞ்சத்துக்கு உயிராய் இருக்கும் றப்பை நாம் காண்பதில்லை. பிரபஞ்சம் தோன்ற முன்பும், தோன்றியிருக்கும் போதும், அழிந்த பின்பும் இருப்பது அல்லாஹ் என்ற உயிர் (வுஜூது) மட்டுந்தான்.

எப்போது அப்து என்ற பிரபஞ்சமில்லையோ அப்போதே றப்புமில்லை. அல்லாஹ் மட்டுமே மிஞ்சுவான். எனவே, "அப்து", "றப்பு" என்ற சொற்கள் அல்லாஹ்வின் (ஹக்கின்) இரு நிலமைகளை (மர்த்தபாக்களை)க் குறிப்பிடும் இரு சொற்களேயன்றி, வெவ்வேறான தனித்தனியான இரு பொருட்களே அல்ல.

என் இயக்கத்திற்கு என் உடலின் இயக்கம் முற்றும் முரணானது. என் உடலின் இயக்கத்தை எல்லோரும் அறியமுடியும். ஆனால், உயிரான என் இயக்கத்தை எவரும் அறிய, எடைபோட முடியாது.

இவ்வுண்மையை நோக்கினால், என் உடல் எவ்வித இயக்கமும் உடையதேயல்ல. நான் என்னுடலை எப்படி வேண்டுமானாலும் இயக்குகிறேன். இயக்கும் ஆற்றல் என்னுடையதேயன்றி உடலுக்குரிய தனியான சக்தியல்ல.

நான் என்னுடலில் சர்வசக்தியும் உடையவனாய் இருப்பதுபோல இறைவன் சர்வ ஆலங்களிலும் சர்வ சக்தியுடையவனாய் இருக்கிறான். அவனையன்றி வேறில்லாதிருப்பதால், என்னில் நான் கண்ட சக்தி கூட அவனுடைய சக்திதான்.

## சூ:.பி ஞானப் பொக்கிஷங்கள் 23

1வது - "அவ்வல்"

هُوَ الْأَوَّلُ وَالْآخِرُ وَالظَّاهِرُ وَالْبَاطِنُ وَهُوَ بِكُلِّ شَيْءٍ عَلِيْمٌ

(யாவற்றுக்கும்) முந்திய ஆதியும் அவனே; பிந்திய அந்தமும் அவனே; பகிரங்கமாக தோற்றுவதும் அவனே; அந்தரங்கமாக மறைத்திருப்பதும் அவனே; மேலும், அவன் சகல அனைத்துப் பொருள்களையும் நன்கறிந்தவன். (குர்ஆன் : 57:3)

இவ்வாயத்தும், கலிமாவின் தலீல் (ஆதாரம்)களில் ஒன்றாகும். கலிமாவைக் கூறி அதை

விளக்க இந்த ஆயத்தையே ரஸூலுல்லாஹ் ஆதாரங்காட்டியிருக்கிறார்கள். இவ்வாயத்து ஐந்து விஷயங்களை வலியுறுத்துகிறது.

1வது - "அவ்வல்"

"அவ்வல்" (தொடக்கம், ஆரம்பம், ஆதி) என்பதாகும். ஆதி என்பது தன்னில் தானே ஆதியாகாது, இன்னொன்றுக்குத்தான் அது ஆதியாயிருக்க முடியும்.

எனவே, 'ஆதி' என்ற சொல் காலத்தால் வரையறுக்கப்பட்டிருப்பதால், அல்லாஹ்வுக்கு ஆதி உண்டென்று கொள்ள முடியாது. படைக்கப்பட்ட சிருஷ்டிக்குத்தான் அதாவது, அழிந்து மறையும் பொருளுக்குத்தான் ஆதி இருக்கமுடியும்.

ஆகவே இந்த 'அவ்வல் ' என்ற ஆதி சொல்லால் நாம் பெறும் அர்த்தம் சிருஷ்டிக்கு (படைப்புக்கு) ஆதியானவன் என்பதே. ஆனால் எவ்வளவு காலத்துக்கு முந்தியவன் என்பதே இதில் கவனிக்கலாகாது.

ஏனெனில் எத்தனை வருடத்தை குறிப்பிட்டாலும் அத்தனை வருடங்களுக்கு முன்னர் அவன் இல்லாமல் இருந்தான் என்ற பொருள் ஏற்படும். ஆதலின் எத்தனை வருடங்களுக்கும் முந்தியவன் என்ற பிரச்சனை உண்டாவதற்கு இடம் இல்லை.

மேலும் வருடம், காலம் ஆகியவைகளெல்லாம் வானம், பூமி, சந்திரன் சூரியன் முதலியவற்றை படைத்தப் பிறகு உண்டானவை. ஆகவே அவன்தான் காலத்தையும் கூட சிருஷ்டித்தவனாக இருக்கிறான்.

ஆதலின் அவன் காலம் கடந்தவன். எப்பொருளுக்கும் முதலில் அவன் இருந்தான் என்று அர்த்தம் கொள்ளவேண்டுமே தவிர காலத்தின் அளவை கருத்தில் கொள்ளக் கூடாது.

"அவ்வல்" என்பது இறைவனின் இலாஹியான திருநாமங்களில் ஒன்றுதான். இது படைக்கப்பட்ட சிருஷ்டிக்கும் எப்படி பொருந்துவது ஏன் ?

படைக்கப்பட்ட சிருஷ்டி என்ற சூரத்தில் அவனேதான் இருந்து கொண்டிருப்பதால்தான் பொருந்துகிறது.உடலுக்கு ஆதியும், அந்தமும் உண்டேயன்றி உயிருக்கு ஆதியும், அந்தமும் கிடையாது.எனவே சிருஷ்டி ( படைப்பு) என்பது அவனுடைய ஸூறத்துதான் என்பதை மறுக்க முடியாது.

இதைத்தான் வஹ்ததுல் வுஜூத் சித்தாந்தம் வலியுறுத்துகிறது !

**சூ:.பி ஞானப் பொக்கிஷங்கள் 24**

( 2வது - "ஆகிர் ")

هُوَ الْأَوَّلُ وَالْآخِرُ وَالظَّاهِرُ وَالْبَاطِنُ وَهُوَ بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ

(யாவற்றுக்கும்) முந்திய ஆதியும் அவனே; பிந்திய அந்தமும் அவனே; பகிரங்கமாக தோற்றுவதும் அவனே; அந்தரங்கமாக மறைத்திருப்பதும் அவனே; மேலும், அவன் சகல அனைத்துப் பொருள்களையும் நன்கறிந்தவன். (குர்ஆன் : 57:3)

இவ்வாயத்தும், கலிமாவின் தலீல் (ஆதாரம்)களில் ஒன்றாகும். கலிமாவைக்கூறி அதை விளக்க இந்த ஆயத்தையே ரஸூலுல்லாஹ் ஆதாரங்காட்டியிருக்கிறார்கள். இவ்வாயத்து ஐந்து விஷயங்களை வலியுறுத்துகிறது.

2வது - "ஆகிர் "

ஆகிர்( முடிவு , இறுதி, கடை, அந்தம் ) என்பதாகும். ஆகிர் என்பது தன்னில் தானே ஆகிராக (இறுதியாக ) முடியாது. இன்னொன்றுக்குத்தான் அது ஆகிராக இருக்க முடியும்.

எனவே, 'ஆகிர்' என்ற சொல் காலத்தால் வரையறுக்கப்பட்டிருப்பதால், அல்லாஹ்வுக்கு ஆகிர் உண்டென்று கொள்ள முடியாது. படைக்கப்பட்ட சிருஷ்டிக்குத்தான் அதாவது, அழிந்து மறையும் பொருளுக்குத்தான் ஆகிர் இருக்கமுடியும்.

ஆகவே இந்த 'ஆகிர் ' என்ற சொல்லால் நாம் பெறும் அர்த்தம் சிருஷ்டிக்கு (படைப்புக்கு) அந்தமானவன் என்பதே. ஆனால் எவ்வளவு காலத்துக்கு பிந்தியவன் என்பதே இதில் கவனிக்கலாகாது.

ஏனெனில் எத்தனை வருடத்தை குறிப்பிட்டாலும் அத்தனை வருடங்களுக்கு பின்னர் அவன் இல்லாமல் இருந்தான் என்ற பொருள் ஏற்படும். ஆதலின் எத்தனை வருடங்களுக்கும் பிந்தியவன் என்ற பிரச்சனை உண்டாவதற்கு இடம் இல்லை.

மேலும் வருடம், காலம் ஆகியவைகளெல்லாம் வானம், பூமி, சந்திரன் சூரியன் முதலியவற்றை படைத்தப் பிறகு உண்டானவை. ஆகவே அவன்தான் காலத்தையும் கூட சிருஷ்டித்தவனாக இருக்கிறான்.

ஆதலின் அவன் காலம் கடந்தவன். எப்பொருளுக்கும் இறுதியாக அவன் இருந்தான் என்று அர்த்தம் கொள்ளவேண்டுமே தவிர காலத்தின் அளவை கருத்தில் கொள்ளக் கூடாது.

" ஆகிர்" என்பது இறைவனின் இலாஹியான திருநாமங்களில் ஒன்றுதான். இது படைக்கப்பட்ட சிருஷ்டிக்கும் எப்படி பொருந்துவது ஏன் ?

படைக்கப்பட்ட சிருஷ்டி என்ற சூரத்தில் அவனேதான் இருந்து கொண்டிருப்பதால்தான் பொருந்துகிறது.உடலுக்கு ஆதியும், அந்தமும் உண்டேயன்றி உயிருக்கு ஆதியும், அந்தமும் கிடையாது. எனவே சிருஷ்டி ( படைப்பு) என்பது அவனுடைய ஸூறத்துதான் என்பதை மறுக்க முடியாது.

அல் ஆகிர் (கடைசியாவன்) என்பதன் கருத்து இப்பொழுது இருக்கிறதும் இனி உண்டாகப் போவதும் ஆகிய யாவும் ஒரு காலத்தில் இல்லாததொழிந்து விடும். சந்திரன், சூரியன், வானம், பூமி ஆகியவைகளும் கூட இருக்காது அப்பொழுதும் அவன் மட்டும் இருந்து கொண்டு தான் இருப்பான்

இதைத்தான் வஹ்ததுல் வுஜூத் சித்தாந்தம் வலியுறுத்துகிறது !

**ஸூ:பி ஞானப் பொக்கிஷங்கள் 25**

3 வது:- “லாஹிர்" - 4வது :- "பாத்தின் "

هُوَ الْاَوَّلُ وَالْاٰخِرُ وَالظَّاهِرُ وَالْبَاطِنُ وَهُوَ بِكُلِّ شَىْءٍ عَلِيْمٌ

(யாவற்றுக்கும்) முந்திய ஆதியும் அவனே; பிந்திய அந்தமும் அவனே; பகிரங்கமாக தோற்றுவதும் அவனே; அந்தரங்கமாக மறைத்திருப்பதும் அவனே; மேலும், அவன் சகல அனைத்துப் பொருள்களையும் நன்கறிந்தவன். (குர்ஆன் : 57:3)

“லாஹிர்"(தோன்றுவது, வெளிப்படையாய்க் காட்சியளிப்பது, சிருஷ்டியின் அறிவால் அறியப்படக்கூடியதுதான் 'லாஹிர் ' ) என்பதாகும். அதாவது இவ்வுலகில் உள்ள எப்பொருளும் அவற்றை சிருஷ்டித்தவனை அறிவிக்கின்றன. மல்ஹர் என்ற முறையில் இவ்வுலகில் எவராலும் அறியப்படாமல் அவன் மறைந்து இருக்கவில்லை. யாவரும் உணரத்தக்க விதத்தில் அவன் பகிரங்கமாகத்தான் இருக்கிறான். ஆனால், அவனது ஸி:பத்துக்கள் என்னும் தன்மைகள் மூலமாகத்தான் அவன் பகிரங்கமானதாக இருக்கிறான்

4வது :- "பாத்தின் "

"பாத்தின் "( மனித புலன்களுக்கெட்டாமல் மறைந்திருப்பவன் சிருஷ்டியின் அறிவால் அறியப்படாதுதான் 'பாத்தின் 'அந்தரங்கமானவன் ) என்பதாகும். அதாவது அவனது குன்ஹு தாத்தை அறிய எவராலும் முடியாது. அந்தரங்கமான அவனை அவன் தான் அறிந்துள்ளான்.

இது சிருஷ்டிகளை சர்வபிரபஞ்சங்களை நோக்கியதொரு விஷயமாகவே தென்படுகிறது. நாம் காண்பது நமக்குத் தோன்றுவது சிருஷ்டிதான்(படைப்புதான்) , இதில் எவருக்கும் சந்தேகமேயில்லை. பெறுவதும், பெறப்படுவதும், புதிது புதிதாய் தோன்றுவதும், இருந்து கொண்டு காட்சியளிப்பதும், முடிவில் இல்லாமல் அழிந்து மறைந்து விடுவதும் சிருஷ்டிகளே (படைப்புகளே) இதை நம்மறிவு மறுக்க முடியுமா?

தோன்றுவது கண்டப் பொருளாய் முப்பரிமாணத்தில் (நீளம் + அகலம் + உயரம்) கட்டுண்டதாய் பௌதிகமாக இருப்பதால், தோன்றுவதாய் இருக்கும் சிருஷ்டி இறைவனே அல்ல என்ற முடிவுக்கு வருவது பிழை என்பதை வலியுறுத்தவே லாஹிர் (வெளிப்படையாய்த் தோற்றுபவன்) கூறப்பட்டிருக்கிறது .

கண்டப் பொருளாய் இருந்து தோற்றமளிப்பது இறைவன் அல்ல என்ற வாதம், கண்டப் பொருளான என் உடல் என்னை விட்டு வேறானதென்று கூறுவது போன்று வெறும் மருட்சியாகும்

தோன்றாதவனே அல்லாஹ் என்றும், தோன்றுவது(சிருஷ்டி) அல்லாஹ் அல்லவென்றும் கூறியவர்கள் நம்ரூது, :பிர்அவுன். அபூஜஹீல் போன்ற முஷ்ரிக்கீன்கள் என்பதை விளக்கிக் கொள்ளுங்கள்.

"ஆகிர்", "அவ்வல்", "பாத்தின் "லாஹிர்" என்ற இச்சொற்கள் யாவும் இறைவனின் இலாஹியான திருநாமங்கள்தான் என்பதை எவரும் மறுக்கமுடியாது. எல்லோருமே இதை ஏற்றிருக்கின்றனர்.

அப்படியாயின், "லாஹிர் என்ற சொல்லில் மட்டும் சந்தேகங்கொள்ள வேண்டிய காரணந்தான் என்ன? தெளிவில்லாத சிந்தனையற்ற அறிவும் கண்மூடித்தனமான பின்பற்றலுந்தான் இதற்குக் காரணமாகும்.

"லாஹிர்" (வெளிப்படையாய்க் காட்சியளிப்பது) என்பது, இறைவனின் திருநாமங்களில் ஒன்று என்றால் அந்த லாஹிருக்கு நேர் முரணாகவுள்ள பாத்தின் (மறைந்திருப்பதும்) என்பதும் அவனுடைய நாமந்தான் என்றால், வெளிப்படையாய்த் தோன்றும் சிருஷ்டி(பிரபஞ்சம்) அவனல்லாதது என்று எப்படிக்கூற முடியும்?

"அவ்வல்", "ஆகிர்", "லாஹிர்", "பாத்தின்" ஆகிய இத்திருநாமங்கள் முஸ்கமுவான ஒரே கருத்துடையவை என்பதை நாம் குர்ஆனின் விதிப்படி ஏற்றிருக்கிறோம். எனவே, இச்சொற்களை நாம் எவ்வகையிலும் வலிந்துரை கொள்ளவே கூடாது.

"லாஹிர் என்ற சொல்லுக்கு "தெளிவானவன்" என்று சில தப்ஸீர்கள் கூறுகின்றன. இந்தத் தப்ஸீர்கள் கூறுகின்ற "தெளிவு" என்பதில் ஒரு மயக்கம் உண்டு. எனவே, தோன்றுபவன் என்பதே “லாஹிர்” என்பதன் சரியான அர்த்தமாகும் என்பதை கருத்தில் கொள்க.



வெளிப்படையாக தோன்றும் "லாஹிர் " மற்றும் மறைந்திருப்பதாக தோன்றும் "பாத்தின்" க்கும் ஒரு விஞ்ஞான விளக்கத்தோடு ஆன்மிக ரகசியம் ஒன்றைச் சொல்கிறேன்.

நாம் காணும் சூரிய வெள்ளோளியில் பார்க்கக் கூடிய ஏழு வர்ணக் கதிர்கள் உள்ளன .

இக்கதிர்கள் அலை நீளங்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை. சிவப்புக் கதிரின் நீளம் 0.00007 செ மீ இருந்து ஊதாக் கதிரின் அலை நீளம் 0.00004செ மீ வரைதான் நம் கண்களால் காண முடியும் .

சிவப்புக் கதிருக்கு மேலயுள்ள இன்ஃபரா சிவப்பு கதிரின் நீளம் 0.00008 செ மீ அதைப் போல் ஊதாக் கதிருக்கு கீழேயுள்ள அல்ட்ரா வயலட் அலை நீளம் 0.00003 செ மீ இக்கதிர்களை நம் கண்களால் காண முடியாது .

இதே ஒளியில்தான் ரேடியத்திலிருந்து வீசும் காமா கதிர்கள், எக்ஸ்ரே கதிர்கள் காஸ்மிக் கதிர்கள் மற்றும் அறியப்படாத கதிர்கள் இவைகளையும் நம் கண்களால் காண முடியாது.

அதேப்போல இன்ஃபரா சிவப்புக் கதிருக்கு மேலே உள்ள கதிர்களான

வெப்பக் கதிர்கள் , மின்பொறி கதிர்கள் , ராடார் கதிர்கள் . டெலிவிஷன் கதிர்கள் , குட்டையான ரேடியோ அலைக்கதிர்கள் , நீளமான ரேடியோ அலைக்கதிர்கள் மற்றும் அறியப்படாத கதிர்கள் இவைகளையும் நம் கண்களால் காண முடியாது .

இந்த வெள்வொளி கதிர்களில் நாம் பார்க்கக் கூடிய , பார்க்க முடியாத கதிர்களான ஒளிகள் , ஒலிகள் கதிர்வீச்சுகள் எல்லாவற்றிற்கும் மூலம் அந்த வெள்ளொளிதான் .

மலக்குமார்கள் , ஜின்கள், ஜின்களின் மூலமான ஷைத்தான்கள் நம் கண்களுக்கு புலப்படாதற்கு காரணம் நம் பார்க்கக் கூடிய ஒளியின் அலை நீளத்திற்குள் அவர்கள் வருவதில்லை. எனவே மலக்குமார்களோ ஜின்களோ நம் கண்களுக்கு தெரிவதில்லை.

ஆனாலும் அவர்கள் விரும்பும் போது நம் கண்கள் பார்க்கக் கூடிய ஒளி அலை நீளத்திற்குள்ளும் வருகிறார்கள் .

பத்ரு யுத்த களத்தில் மக்கத்து குறைஷிகள் 1300 பேர்கள் நிறைய ஆயுதங்களுடன் நின்றனர் .

முஸ்லிம்கள் 313 பேர் குறைவான அயுதங்களுடன் இருந்தனர் .இதற்கு முன்னர் நபிகளார் இறைவனிடம் மன்றாடி தங்கள் படைக்கு உதவி செய்யக் கோரி மன்றாடினர் . இறைவனும் வெற்றியைத் தருவதாக வாக்களித்தான் .

எதிர்த்துத் தாக்க வேண்டுமென நபி (ஸல்) கட்டளைப் பிறப்பித்தவுடன் எதிரிகளின் மீது முஸ்லிம்கள் பாய்ந்தனர். அணிகளைப் பிளந்தனர். தலைகளைக் கொய்தனர். அல்லாஹ்வின் பாதையில் போர் புரிய வேண்டும் என்ற தீராத தாகத்தில் இருந்த அவர்கள், எதிரிகளை நிலை தடுமாறச் செய்தனர். இதனால் எதிரிகளின் தாக்கும் வேகமும் குறைந்தது வீரமும் சோர்வுற்றது. எதிரிகளால் முஸ்லிம்களின் வேகத்திற்கு ஈடுகொடுக்க முடியவில்லை.

அதுமட்டுமல்ல! அன்று நபி (ஸல்) கவச ஆடை அணிந்து, யாரும் நெருங்க முடியாத அளவு எதிரிகளுக்கருகில் நெருங்கி நின்று,

அதிசீக்கிரத்தில் இந்த கூட்டம் சிதறடிக்கப்படும். மேலும் (இவர்கள்) புறங்காட்டி ஓடுவார்கள். (அல்குர்ஆன் 54:45)என்று உறுதியுடன் மிகத் தெளிவாக சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் இக்காட்சியைப் பார்த்த முஸ்லிம்களுக்கு உற்சாகமும் ஆவேசமும் பன்மடங்கு பெருகின. (ஸஹீஹுல் புகாரி)

ஆகவே, முஸ்லிம்கள் மிகத் துணிவுடன் சண்டையிட்டார்கள். வானவர்களும் அவர்களுக்கு உதவி செய்தார்கள்.

اِذْ تَسْتَغِيْثُوْنَ رَبَّكُمْ فَاسْتَجَابَ لَـكُمْ اَنِّىْ مُمِدُّكُمْ بِاَلْفٍ مِّنَ الْمَلٰٓـئِكَةِ مُرْدِفِيْنَ

(நினைவு கூறுங்கள்:) உங்களை இரட்சிக்குமாறு உங்கள் இறைவனின் உதவியை நாடியபோது: “(அணி அணியாக உங்களைப்) பின்பற்றி வரக்கூடிய ஓராயிரம் மலக்குகளைக் கொண்டு நிச்சயமாக உங்களுக்கு உதவி புரிவேன்” என்று இறைவன் உங்களுக்கு பதிலளித்தான்

(குர்ஆன் : 8:9)

அபூஜஹ்லின் மகன் இக்மா கூறுகிறார்: "அன்றைய தினத்தில் ஒருவன் தலை துண்டிக்கப்பட்டு கீழே விழும் ஆனால், அவரை வெட்டியவர் யாரென்று தெரியாது". (இப்னு ஸஅது)

இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகின்றார்கள்: "ஒரு முஸ்லிம் எதிரியைத் தாக்க பின்தொடர்ந்து செல்லும் போது மேலிருந்து ஒரு சாட்டையின் ஒலியையும் 'ஹைஸூமே! முன்னேறு"என்று கூறும் ஒரு குதிரை வீரன் அதட்டலையும் கேட்டார்.

அதன் பிறகு அந்த முஸ்லிம், எதிரியை பார்க்கும் போது அந்த எதிரி மூக்கு அறுக்கப்பட்டு, முகம் பிளக்கப்பட்டு மல்லாந்துக் கிடந்தான். அவனது உயிர் முற்றிலும் பிந்திருந்தது.

அந்த அன்சாரி நபி (ஸல்) அவர்களிடம் இச்செய்தியைக் கூறினார். "ஆம்! நீர் உண்மைதான் கூறுகிறீர். அது மூன்றாவது வானத்திலிருந்து அல்லாஹ் இறக்கிய உதவியாகும்" என்று நபி (ஸல்) விளக்கமளித்தார்கள்.(ஸஹீஹ் முஸ்லிம்)

அபூதாவூது அல் மாஸினி (ரழி) கூறுகிறார்கள்: "நான் ஒரு எதிரியை வெட்டுவதற்காக அவனை பின்தொடர்ந்தபோது எனது வாள் அவன் மீது படுவதற்கு முன்னதாகவே அவனது தலை கீழே விழுந்தது. எனவே, வேறு யாரோ அவனை வெட்டினார்கள் என்று நான் அறிந்து கொண்டேன்".

அன்சாரிகளில் ஒருவர் அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிபை கைது செய்து நபி (ஸல்) அவர்களிடம் அழைத்து வந்தார். அப்பாஸ் "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இவர் என்னை கைது செய்யவில்லை. என்னை கைது செய்தது சிறந்த குதிரையின் மீது அமர்ந்து வந்த மிக அழகிய முகமுடைய ஒருவர்தான். ஆனால், இப்போது அவரை நான் இந்தக் கூட்டத்தில் பார்க்கவில்லையே?" என்று கூறினார்.

அதற்கு அன்சாரி "அல்லாஹ்வின் தூதரே! நான்தான் அவரைக் கைது செய்தேன்" என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) "நீங்கள் அமைதியாக இருங்கள்! அல்லாஹ்தான் சங்கைமிக்க ஒரு வானவரின் மூலம் உங்களுக்கு உதவி செய்தான்" என்று கூறினார்கள்.

அலீ (ரழி) கூறினார்கள்: "பத்ர் போரில் என்னையும் அபூபக்ர் (ரழி) அவர்களையும் பார்த்து நபி (ஸல்), "உங்கள் இருவரில் ஒருவருடன் ஜிப்ரீலும், மற்றொருவருடன் மீக்காயிலும் இருக்கிறார். பெரிய வானவரான இஸ்ராஃபீலும் போரில் கலந்திருக்கிறார்" என்று கூறினார்கள். (முஸ்னது அஹ்மது, பஜ்ஜார், முஸ்தத்ரகுல் ஹாகிம்)

சுராகா இப்னு மாலிகின் உருவத்தில் போருக்கு வந்திருந்த இப்லீஸ் இணைவைப்பவர்களை வானவர்கள் வெட்டுவதைப் பார்த்தவுடன் போர் களத்திலிருந்து நழுவினான்.

அவனை உண்மையிலேயே சுராகா என்று எண்ணியிருந்த ஹாரிஸ் இப்னு ஹிஷாம் அவனைத் தப்பவிடாமல் இருக்க பிடித்துக் கொண்டார். ஹாரிஸின் நெஞ்சில் அடித்து அவரைக் கீழே தள்ளி விட்டு இப்லீஸ் ஓடினான்.

மற்றவர்கள் "சுராகாவே! எங்கே ஓடுகிறீர்? எங்களை விட்டுப் பிரியாமல் கடைசி வரை எங்களுடன் துணையாக இருப்பேன் என்று கூறியிருந்தீரே?" என்றனர். அதற்கு ஷைத்தான்,

"நிச்சயமாக நான் உங்களைவிட்டு விலகிக் கொண்டேன். நீங்கள் பார்க்க முடியாத ஒன்றை நான் பார்க்கின்றேன் நிச்சயமாக நான் அல்லாஹ்வுக்குப் பயப்படுகின்றேன் வேதனை செய்வதில் அல்லாஹ் மிகக் கடுமையானவன்" (குர்ஆன் 8 : 48) என்று கூறிக் கொண்டே, வெருண்டோடி கடலில் குதித்தான்.

எதிரிகளின் அணியில் சலசலப்பும், தோல்வியின் அடையாளங்களும் வெளிப்பட்டன. முஸ்லிம்களின் கடுமையானத் தாக்குதலுக்கு முன் இணைவைப்போரின் அணி சின்னா பின்னமாகியது.

போர் முடிவை நெருங்கியது. எதிரிகள் நாலா பக்கங்களிலும் விரைந்தோடித் தப்பிக்க முயன்றனர். முஸ்லிம்கள் அவர்களைப் பின்தொடர்ந்து பணிந்தவரை கைது செய்து பணியாதவரை வெட்டி வீழ்த்தினர். இவ்வாறு இணைவைக்கும் எதிரிகள் போரில் பெரும் தோல்வியடைந்தனர்.

இதில்தான் லாஹிர் இருக்கிறது. இதில்தான் பாத்தின் இருக்கிறது. இதைத்தான் வஹ்ததுல் வுஜூத் சித்தாந்தமும் வலியுறுத்துகிறது !

**சூ.:.பி ஞானப் பொக்கிஷங்கள் 26**

( அலீமுன் عَلِيْمٌ (மிக அறிந்தவன்)




هُوَ الْاَوَّلُ وَالْاٰخِرُ وَالظَّاهِرُ وَالْبَاطِنُ وَهُوَ بِكُلِّ شَىْءٍ عَلِيْمٌ

(யாவற்றுக்கும்) முந்திய ஆதியும் அவனே; பிந்திய அந்தமும் அவனே; பகிரங்கமாக தோற்றுவதும் அவனே; அந்தரங்கமாக மறைத்திருப்பதும் அவனே; மேலும், அவன் சகல அனைத்துப் பொருள்களையும் நன்கறிந்தவன். (குர்ஆன் : 57:3)

அலீமுன் عَلِيْمٌ (மிக அறிந்தவன்) என்பது அரபி இலக்கணச் சட்டப்படி இப்பதம் முற்றும் அறிந்தவன் என்ற கருத்து இங்கு கூறப்பட்டிருக்கிறது

இறைவனின்

"முற்றும் அறிந்தவன்" என்பதை இப்போது தெளிந்த அறிவோடு நோக்குங்கள். சிருஷ்டிக்கு ஆதியாயிருந்தவனை நாம் கண்டதில்லை. சிருஷ்டிக்கு அந்தமாய் இருக்கப் போகிறவனையும் நாம் காணப் போவதில்லை. ஏன்? சிருஷ்டிதான் ஆதியிலும் அந்தத்திலும் இல்லை என்றால், சிருஷ்டியாக இருக்கின்ற நம்மால் அதை எப்படி அறியமுடியும்? அறியவே முடியாது.

நாம் சிருஷ்டியாயிருக்கும் போதாவது காண்கிறோமா? இல்லை. சிருஷ்டியாகிய நம்மிடத்தில் இறைவன் இன்றும், இப்போதும் மறைந்தவனாய்த்தானே இருக்கிறான்! அப்படியானால், இறைவனின் வெளிப்பாடு, தோற்றம், ஸூறத் என்பது எது?

நாம் காணும் அத்தனைதோற்றங்களும், ஸூறத்துக்களும் அவனுடைய தோற்றங்களாய், ஸூறத்துக்களாய்த்தான் இருக்க வேண்டும்.

சிருஷ்டி அவனல்லாதது என்று கொண்டால் மிகப்பெரும் பிழைகள் ஏற்படுகின்றன. அரூபியான அல்லாஹ்வுடன் வெளிப்படையாய்த் தோன்றும் சிருஷ்டி அவனல்லாதாய், வேறானதாய் இருப்பதென்று கொண்டால், இணையுண்டு என்ற ஷிர்க்குண் டாகும்.

அரூபியான இறைவன் இருக்க ஓரிடமும், அவனல்லாத ரூபியான சிருஷ்டி இருக்க வேறிடமும் அவசியமாகும். இரண்டும் ஒன்றாய் இருக்கிறதென்றால் அதுவும் ஒத்துவராது. இருபொருட்கள் ஏககாலத்தில் ஒன்றென்றாகாது. இது ஒரு தத்துவம்.

எனவே லாஹிரும் பாத்தினும் பெயரளவில் வேறுபடினும் இரண்டும் வெவ்வேறில்லாத ஏகந்தான். சூட்சுமமான பாதினான நானும், லாஹிரான என் உடலும் ஏகமாய்த்தான் இருக்கின்றது. என்னுயிரைவிட உடல் வேறானதென்றால், நானிருக்கும் இடத்தில் உடலும் உடலிருக்குமிடத்தில் உயிரும் இருக்கமுடியாது. இருபொருள் ஏக்காலத்தில் ஒன்றாயிருக்க முடியாது.

எனவே, பாதினென்ற உயிராயும் லாஹிறென்ற உடலாயும் ஏகமாய் இருப்பவன் நான்தான் லாஹிரும் பாதினும் இருதனிப் பொருட்களல்ல. ஏகமாயுள்ள எனது இரு நிலமைகளின் அதாவது, எனது இருமர்த்தபாக்களைக் குறிப்பிடும் இரு பெயர்களே லாஹிர், பாதின் என்பவை.

ஒன்று மறைவதானால் அதை மறைக்கும் பொருளும் அவசியம். இல்லையானால், பாத்தின் (மறைவு) என்றசொல் பொருந்தாது. சிருஷ்டிதான் மறைக்குதென்றால், அதுவும் ஒத்துவராது, மறைக்கும் பொருள் மறைபடும் பொருளின் அளவாய் அல்லது அதிலும் பெரிதாய் இருக்கவேண்டும். அப்படியாயின் சிருஷ்டியும் இறைவனும் ஒன்றைப்போல் மற்றொன்று சமமாய் அல்லது சிருஷ்டி இறைவனை விடவும் பெரிதாய் இருந்தாலேயன்றி மறைக்க முடியாது.

சிருஷ்டி தனித்தபொருள்தான் என்றால் ஏகவியாபகமாய் அஹதாயிருக்கிற அல்லாஹ்வில் இருக்கமுடியாது. ஏன்?

சிருஷ்டியுள்ள இடத்தில் இறைவனும், இறைவன் உள்ள இடத்தில் சிருஷ்டியும் அதாவது, ஒன்றுள்ள இடத்தில் மற்றொன்று இருக்கமுடியாதென்று தத்துவங்கூறுவது உண்மையானால், ஏகமான இறைவனில் சிருஷ்டி இருக்கும் இடமெல்லாம் துவாரங்கள் ஏற்பட்டுவிடும்! ஆகவே, ஏகமான இறைவனை துவாரங்களுள்ள இறைவன் என்று சொல்ல நேரிடுமே !

வெளிப்பாடு, தோற்றம், உருவம், ஸூறத் என்ற பொருளுடைய "லாஹிர்" என்ற சொல்லையும் இதற்கெதிரிடையான "பாத்தின்" என்ற சொல்லையும் மிக கவனமாய் நாம் ஆராய வேண்டியவர்களாய் இருக்கிறோம்.

அல்அவ்வலு, அல்ஆகிரு, அல்ளாஹிரு, அல்பாத்தினு, அல்அலீமு என்ற இவ்வைந்து பதங்களும் இறைவனது அழகிய திருநாமங்களான அஸ்மாஉல் ஹுஸ்னாவைச் சேர்ந்தவை. இவற்றிற்கு ஞானவான்களும் மார்க்கச் சட்ட அறிஞர்களும் பல பொருள்களையும் கருத்துக்களையும் கூறி, சன்மார்க்கக்கொள்கை சம்பந்தமான பல விதிகளையும் இயற்றியுள்ளார்கள்.

இப்பிரபஞ்சத்தில் தோன்றியுள்ள பொருள்களின் அமைப்பையும் அவைகள் அமைவதற்குரிய காரணங்களையும் படிப்படியாக ஆராய்ந்து கொண்டே போனால், இறுதியாக இவையாவற்றுக்கும் மூல காரணமாகவும் அஸ்திபாரமாகவும் இருக்கும் முதற் பொருள் அவ்வல்லோன்தான் என்பதும், இனிமேல் அழிந்து போகின்றவற்றைக் குறித்து ஆராய்ந்து கொண்டே போனாலும் இறுதியாக எஞ்சுவது அவ்வல்லோன் ஒருவன்தான் என்பதும் விளங்கும். இதனைத்தான் அல்அவ்வல், அல்ஆகிர் என்ற பதங்கள் அறிவிக்கின்றன

அல்லாஹிர் என்பதற்கு எல்லாவற்றையும் மிகைப்பவன் வெற்றிகொள்பவன் என்றும், அல்பாத்தின் என்பதற்கு எல்லாவற்றையும் உள்ளார உணர்ந்தவன் என்றும் கருத்துரைக்கப்படுகிறது. ஒருவன் ஒரு காரியத்திலுள்ள சகல உள்வயணங்களையும் சூட்சுமங்களையும் உணர்ந்திருப்பானாயின் அக்காரியத்தில் அவனை ஒருவரும் மிகைக்க முடியாது என்பது தெளிவு. இது போன்று, இறைவன் இவ்வையகத்திலுள்ள யாவற்றின் சூட்சுமங்களையும் உணர்ந்திருப்பதால், அவனை எதுவும் மிகைக்க முடியாது. இவ்வுண்மையை இவ்விரு பதங்களும் உணர்த்துகின்றன.

ஆரிஃபு றப்பானி அபூஸயீதினில் ஹர்ராஸ் குத்திஸ ஸிர்ருஹு அவர்களிடம் "அல்லாஹுதஆலாவைத் தாங்கள் எதனால் அறிந்தீர்கள்" என்று வினவப்பட்டது.

"ஒன்றுக்கொன்று நேர் முரணானவைகள் அவனில் அமைந்திருப்பதைக் கொண்டுதான் அவனை அறிந்தேன் " என்று கூறி "அவன் தான் முந்தியவனும். கடைசியானவனும், பகிரங்கமானவனும், அந்தரங்க மானவனுமாவான்" என்ற ஆயத்தை ஓதிக் காட்டினார்கள்.

"அல்லாஹ் இருந்து கொண்டிருந்தான். அவனுடன் எதுவுமில்லாதிருந்தது" என்று நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறி இருப்பதற்கேற்ப இவ் அகிலத்தின் ஆதி உருவமே இல்லாத காலத்திலும் அவன் இருந்தான் என்பதை "அல்அவ்வலு" என்ற பதம் குறிக்கிறது. அவன்தான் அகிலத்துக்கு முன்னதாக இருந்தான். இவ் அகிலம் வெளியாகும் பொழுது அவன் இவ் அகிலத்தின் உருவமாகவே இருந்தான். இதுதான் "அல்ஆகிரு" என்பதன் கருத்து.

என்றாலும், இவ்வாயத்தின் மூலமாகத்தான் அவன் வெளியாகி இருக்கிறான். ஆதலால், இவ் அகிலம் முதலிலும், அதற்கப்புறம் அதனைக் கொண்டு அவன் பிந்தியும் வெளியாக இருக்கிறான்.

எனவே ளுஹூர் என்ற முறையில் அவன் பிந்தியும், உஜுது என்ற முறையில் முந்தியும் உள்ளான் இதன் படி "ஆகிர்"என்பதுதான் லாஹிர் ( பகிரங்கமானவன்) என்றும் அவ்வல் என்பதுதான் அல்பாத்தின் (அகமானவன் ) என்றும் இருக்கின்றன.

இது ஹக்கிலிருந்து ( இறைவனிலிருந்து) கல்கின் ( சிருஷ்டிகளின்) பால் நோக்குவதை பற்றியது. இனி, கல்கில் (சிருஷ்டியில்) இருக்கும் ஹக்கின் (இறைவன், பால் நோக்கினால், " ஆகிர் " என்பதுதான் பாத்தினாகவும், லாஹிர்தான் அவ்வாலாகவும் இருக்கின்றன" என்று அஹ்லுல் கஷ்ஃபுகளாகிய ஞானோதயமுள்ள பெரியோர்கள் கூறுகிறார்கள். இதைத்தான் வஹ்தததுல் வுஜூத் சித்தாந்தமும் வலியுறுத்துகிறது !

**சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 27**

(அல்லாஹ்வின் முகம் )

وَلِلّٰهِ الْمَشْرِقُ وَالْمَغْرِبُ فَاَيْنَمَا تُوَلُّوْا فَثَمَّ وَجْهُ اللّٰهِ اِنَّ اللّٰهَ وَاسِعٌ عَلِيْمٌ

கிழக்கும், மேற்கும் அல்லாஹ்வுக்கே (சொந்தம்); நீங்கள் எந்தப் பக்கம் திரும்பினாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இருக்கிறது. நிச்சயமாக அல்லாஹ் விசாலமானவன்; எல்லாம் அறிந்தவன். (குர்ஆன் : 2:115)

சிருஷ்டி (படைப்பு) என்ற வகையில், அணுப்போன்ற ஓர் அற்ப வஸ்துவானாலும் பேரண்டம் போன்ற மிகப்பிரமாண்டமான வஸ்துவானாலும் அது தரிப்பட்டிருந்து காட்சியளிக்க இடமுங் காலமும் அவசியமாகும். இவை இல்லையானால், சிருஷ்டி என்பது இருப்பதாக மனிதன் காணவும், அறியவும் முடியாது.

இடத்திற் கட்டுண்ட ஒவ்வோர் அணுவுக்கும், அணுவின் கருவுக்கும் கூட மேல்,கீழ், முன், பின், வலம், இடம் என்ற ஆறு திசைகள் அல்லது பக்கங்கள் அல்லது முகங்கள் இருக்கின்றன. நமது வசதிக் கேற்றபடி முகங்களைப் பெருக்கியும் கொள்ளலாம். நாம் ஆறு முகங்களை (பக்கங்களை, திசைகளை) மட்டுமே எடுத்துக்கொள்வோம்.

ஆனால், மஃகூல்,மன்கூல் என்ற பிரமாணங்களின்படி ஆராய்வு செய்தால் உண்மையில் இடமும் திசையும் இல்லவே இல்லை! இதைக் கலிமாவும் அதன் தலீல்களான (ஆதாரங்களான) குர்ஆன், ஹதீஸுகளும் உறுதிப்படுத்துகின்றன; இன்றைய விஞ்ஞானமும் இவ்வுண்மையை ஏற்றுக்கொண்டிருக்கிறது. உதாரணமாக ,

சூரியன் கிழக்கில் உதித்து மேற்கில் மறைவது இந்த பூமியில் நீங்கள் வாழ்கிற பூமியின் மத்திய பகுதியில் மட்டும்தான் .இதே பூமி அது அச்சு சுழலும் மேல் கீழ் இரு உச்சியில் கிழக்கில் மட்டும் இல்லை எல்லா திசையிலும் சூரியன் உதிக்கும் .

நீங்கள் ஒரு உச்சியான அண்டார்டிகாவில் தென் துருவ பகுதியில் நவம்பர், டிசம்பர் மாதங்களில் இருக்க நேர்ந்தால் ஒரே நாளில் சூரியனை தெற்கு , வடக்குத் திசை உட்பட நான்கு திசைகளிலும் உதிக்கக் காணலாம் .

ஆல்பர்ட் ஐன்ஸ்டைனின் பொது சார்பியல் தத்துவத்தை சொல்றேன்.

"எங்க வீட்டிலிருந்து மார்க்கெட் போகும் வழியில் எனக்கு இடது புறத்தில் உஸ்மானிய்யா மதரஸா உள்ளது. சரிதான். மார்க்கெட்டிலிருந்து எங்க வீட்டிற்கு வரும் வழியில் எனக்கு வலது புறத்தில் உஸ்மானிய்யா மதரஸா உள்ளது. சரிதான்.

என்ன சரிதான் இதில் எது உண்மை ? இரண்டுமே உண்மைதான். காரணம் திசையை சார்ந்து பேசும் போது இந்த முரண் ஏற்படுகிறது!

இந்த பூமி உருண்டையில் இந்தியாவில் நாம் நேராக நிற்கும் போது , அமெரிக்கர்கள் தலைகீழாகவா நடக்கிறார்கள் ? அங்குள்ள அட்லாண்டிக் கடல் தலை குப்புறவா கவிழ்ந்து விட்டது ? இல்லையே இது எப்படி ?

விண்வெளியில் மேல்-கீழ் , இடது, வலது, முன், பின் என்ற பாகுபாடு இல்லைவே இல்லை. உள்ளபடியே " செங்குத்து " ( Vertical ) சித்தாந்தம் அண்ட வெளிக்கு அறவே பொருந்தாது. அங்கே ஒவ்வொரு கோளகத்தில் ஒவ்வொரு எதிரெதிர் விட்டப்புள்ளிகளும் ஒன்றுக்கொன்று செங்குத்தானவை.

பூமியில் நம் தலை உச்சிக்கு நேர்மேலே தெரியும் சந்திரன். நீங்கள் சந்திரனுக்குப் போய் அங்கு நின்று அண்ணாந்து நோக்கினால்தான் வானத்தில் நம் பூமி தெரியும்.

பூமியும் சந்திரனும் மற்ற கோள்களும் மேசை மாதிரியோ அல்லது தோசை மாதிரியோ தட்டையான பரப்பு உடையவை அல்ல. மேல் பாகம் , கீழ் பாகம் இடது, வலது, முன், பின் என்ற பாகு பேதம் அவற்றுக்குக் கிடையவே கிடையாது. அதனால்தான் குர்ஆனில்,

رَبُّ الْمَشْرِقَيْنِ وَ رَبُّ الْمَغْرِبَيْنِ

(சூரியன், சந்திரன் இரண்டும்) உதிக்கும் இரு திசைகளுக்கும் அவனே சொந்தக்காரன். மேலும், (அவைகள்) மறையும் இரு திசைகளுக்கும் அவனே சொந்தக்காரன். (குர்ஆன் : 55:17)

நாம் திரையிடப்பட்ட அறிவோடுள்ளவர்களாய் இருப்பதால்,எமது அறிவுக்கு ஏற்ற மாதிரி ஒவ்வொரு பொருளுக்கும் ஆறு பக்கங்கள் அல்லது திசைகள் அல்லது முகங்கள் இருப்பதாகக் கொண்டு நாம் எடுத்துக்கொண்ட விஷயத்தை நோக்குவோம்.

நாம் குறிப்பிட்டபடி, ஒவ்வொரு பொருளுக்கும் ஆறு திசைகள் அல்லது ஆறு பக்கங்கள் அல்லது ஆறு முகங்கள் இருந்து கொண்டிருக்கின்றன. இந்தப் பக்கங்கள், திசைகள், முகங்களைத்தான் "வஜ்ஹு" என்ற சொல்லால் குறிப்படப்பட்டதேயன்றி கண், செவி, மூக்கு, வாயுள்ள முகம் என்ற கருத்தோடு அச்சொல் பாவிக்கப்படவேயில்லை.

நமக்கு எதிரில் இருந்து கொண்டிருக்கும் ஒரு பொருளுக்கு ஆறு திசைகள், பக்கங்கள், முகங்கள் இருந்தாலும் நாம் காண்பது அப்பொருளின் ஒரு திசையை, ஒரு பக்கத்தை. ஒரு முகத்தை மட்டுந்தான். நாம் பார்க்கும் சிருஷ்டிப் பொருள் நீளம்,குறுகல், வட்டம், முக்கோணம், ஐங்கோணம், அறுங்கோணம், உருண்டை, தட்டை போன்ற எந்த வடிவத்தில் (ஸூறத்தில்) இருந்தாலும் அச்சிருஷ்டியான வடிவத்தின்(ஸூறத்தின்) ஒரு முகத்தை மட்டுந்தான் பார்க்கிறோம். ஒரு பொருளின் எல்லா முகங்களையும் ஏக காலத்தில் நாம் காணமுடியாது.

அப்படிக் காண்பதானால், ஆறு முகங்களையும் ஒருமுகப்படுத்திக் காட்டக்கூடிய ஒரு கருவியை எடுத்துக் கொண்டால்தான் முடியும்! ஆயினும், நாம் காணும் பொருளின் உதாரணத்திற்கு ஓர் அணுவை எடுத்துக்கொள்ளுங்கள். ஒரு நீர்த்துளியைப் பெரிதாக்கி நம்முடைய உலகத்தின் அளவுக்கு எடுத்துக் கொண்டால் அணு என்பது ஓர் எலுமிச்சப் பழத்தின் அளவு என்று கொள்ளலாம்.

இந்த அணுவுக்கும், இந்த அணுவின் மையத்திலிருக்கும் அதன் கருவுக்கும், அந்த கருவைச் சுற்றிக் கொண்டிருக்கும் எலக்ட்ரான் போன்ற மிகமிக நுண்ணிய மின்துகளுக்கும் கூட இடமும் ஆறு முகங்களுமுண்டு! ஆனால், அந்த ஆறு முகங்களையும் எம்மால் பார்க்க முடிவதில்லை. ஏதோவொரு வகையில் பார்த்தோமென்றாலும் அந்த முகங்களின் ஒரு புறத்தை (பக்கத்தை) மட்டுமே நாம் பார்க்க முடியும்.

உயிருள்ளதாயும் உயிரற்றதாயும் இருக்கும் சிருஷ்டிகளின் (சராசரங்களின்) ஒவ்வொரு புறங்கொண்ட தொகுப்புக் காட்சியையேயன்றி நாம் பார்ப்பதில்லை. நாம் எங்கு எத்திசையை நோக்கினாலும்,சிருஷ்டிகளின் ஒவ்வொரு புறங்கொண்ட தொகுப்பான ஒரு முகத்தையே பார்க்கின்றோம். இதில் சர்வபிரபஞ்சமுமே அடங்கும்.

நாம் பூமியிலிருந்து சந்திரனைப் பார்க்கும்போது, சந்திரன் ஒரு புறத்தை மட்டும்தான் பார்க்க முடியுமே தவிர சந்திரனின் மறுபுறத்தை நாம் பார்க்கவே முடியாது. (படம்)

எனவே, ஆயத்தில் குறிப்பிடப்பட்ட "முகம் "(வஜ்ஹு) என்பது லாஹிறான சிருஷ்டிகளின் புறம் அல்லது பக்கம் என்பதை விளக்கப் பாவிக்கப்பட்டதேயன்றி, உயிரினங்களின் முகம்போன்ற கண், மூக்கு, செவி, வாயுள்ள முகம் என்று கூறுவதற்காக அல்ல.

"வஜ்ஹு" என்ற சொல்லால் குறிப்பிடப்பட்ட "முகம் " என்பது "பக்கம்", "புறம்" என்ற பொருளுடையது. திரும்புந் திசைகள் தோறும் தென்படுகிற முகம் (புறம், பக்கம்) அல்லாஹ்வுடையதுதான் என்றால், சர்வ பிரபஞ்சத்திலுமுள்ள சர்வ சிருஷ்டியும் அவனுடைய தோற்றமாகவே (ஸூறத்தாகவே) இருக்க வேண்டும்.

அப்படியானால், எங்கேயும், எவரும், எப்போதும் அல்லாஹ்வின் லாஹிறான சூரத் என்ற முகத்தையே யன்றிப் பிறபொருள் எதனையும் பார்க்கவே முடியாது. இவ்வுண்மையை வஹ்மு என்ற மூடபுத்தி மறுத்தாலும் விஷயம் பரிபூரணமான உண்மையேதான். எனவே, ஆயத்துக் கூறுவது பொய்யேயல்ல.

ஒரு தடவை நாங்கள் அண்ணல் நபி(ஸல்) அவர்களுடன் காரிருளில் பிரயாணம் செய்தோம். கிப்லா எத்திசையில் இருக்கிறதென்பதை எங்களால் அறிந்து கொள்ள முடியவில்லை. எனவே, எங்களிலிருந்த ஒவ்வொருவரும் அவரவர் இருந்த திசையிலேயே தொழுது கொண்டோம்.

விடிந்த பின் இச்செய்தியை நபி (ஸல்) அவர்களிடம் கூறினோம் அப்போது நீங்கள் எத்திசையே நோக்கினும் அத்திசை அல்லாஹ்வுடைய முகமே (வஜ்ஹுவே) என்ற (குர்ஆன் 2: 115) வது வசனம் அருளப்பட்டது அறிவிப்பவர் : ஆமிர் இப்னு ரபீஆ (ரலி) - திர்மிதி

## **சூ:.பி ஞானப் பொக்கிஷங்கள் 28**

( அல்லாஹ் எல்லா வஸ்துகளையும் சூழ்ந்தறிபவனாக இருக்கிறான்)



وَلِلّٰهِ مَا فِى السَّمٰوٰتِ وَمَا فِى الْاَرْضِ وَكَانَ اللّٰهُ بِكُلِّ شَىْءٍ مُّحِيْطًا

வானங்களில் உள்ளவையும், பூமியில் உள்ளவையும் எல்லாம் அல்லாஹ்வுக்கே சொந்தம்; மேலும் அல்லாஹ் எல்லாப் பொருட்களையும் சூழ்ந்தறிபவனாக இருக்கிறான். (குர்ஆன் : 4:126)

இவ்வாயத்தில் "சூழ்தல்” என்பதற்கு “முஹீத்" என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. எல்லா வஸ்துக்களையும் சூழ்ந்தறிபவனாக இருக்கிறான் என்றால், அவனிருக்கும் இடத்தில் வஸ்துக்களும், வஸ்துக்கள் இருக்கும் இடத்தில் அவனும் இல்லை என்றாவதால், சிருஷ்டி வேறுதான் அல்லாஹ் வேறுதான் என்று நம் பேத புத்தி முடிவு கட்டிவிடுகிறது.

இம்முடிவு சுத்தமான இணைகற்பித்தல் (ஷிர்க்) என்பதை அந்த பேத புத்தி அறிவதில்லை. "சூழ்தல்” என்றால், தீவு நிலத்தைக் கடல் சூழ்ந்தது போல, குளத்தை அதன் கரை சூழ்ந்தது போல என்று பேத புத்தி நம்பிவிடுகிறது.

பக்கம்,புறம் என்ற முகத்தை கண், மூக்கு, வாய் உடைய முகமாக கற்பனை பண்ணிக் கொண்டதுபோல இந்த சூழ்தல் என்ற சொல்லுக்கும் பேத புத்தி தவறான பொருள் கொண்டுவிடுகிறது. வேத வசனம் கூறும் சூழ்தல் என்பது மூட புத்தி கற்பனை பண்ணிய சூழ்தலைப் போன்றது அல்ல.

என்னை நான் சூழ்ந்திருக்கிறேன் என்பதை அல்லது கத்தியை இரும்பு சூழ்ந்திருக்கிறது என்பதை நகையைத் தங்கம் சூழ்ந்திருக்கிறது என்பதைச் சிந்தனை செய்யுங்கள். என்னை நான் சூழ்ந்துள்ளேன் என்றால் என்னுடலை உயிர் சூழ்ந்ததுபோல, நானே உடலாயிருக்கிறேன் என்பதே அர்த்தம்.

கத்தியை இரும்பு சூழ்ந்துள்ளது என்றால், கத்தி இரும்பின் சூரத்து என்பதே அர்த்தம். நகையைத் தங்கம் சூழ்ந்துள்ளது என்றால் நகை தங்கத்தின் சூரத்து என்பதே அர்த்தம். எனவே, இச்சூழ்தல் உள்ளேயுள்ளதை வெளியேயுள்ளதை வேறொன்று சூழ்ந்துள்ளது போன்ற சூழ்தல் அல்ல.

தங்கத்தின் ஒரு சூரத்தை "மாலை" என்றும் இன்னுமொரு சூரத்தை மோதிரம் என்றும் கூறுகின்றோம். ஆனால் மாலையும், மோதிரமும் தங்கத்தின் வேறானவையேயல்ல. பெயர்களும் சட்டத்திற்குட்பட்ட சூரத்துகளும் ஒன்றுக்கு மற்றொன்று நேர்முரணானவைதான். ஆயினும் தங்கத்தை விட்டும் மாலையும், மோதிரமும் வேறுவேறான தனித்தனிப் பொருட்களேயல்ல. மாலையை, மோதிரத்தைத் தங்கம் சூழ்ந்ததாக இருக்கிறது.

இருந்து கொண்டிருக்கும் உண்மை பொருள் தங்கம் மட்டும் தான். மாலையும், மோதிரமும் தங்கத்தின் சூரத்துகளை அன்றி, தங்கம் அல்லாத அல்லது தங்கத்தை விட்டும் வேறான தனித்தனியான உண்மை பொருள் அல்ல.

மாலையையும், மோதிரத்தையும் தங்கம் சூழ்ந்து இருப்பது போல அல்லாஹ் எல்லா பொருட்களையும் வஸ்துக்களையும் சூழ்ந்து அறிபவனாக இருக்கிறான்

## சூ:ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 29

உலக வாழ்க்கை ஒரு மயக்கக்கூடிய இன்பத்தைத் தவிர வேறு இல்லை.

**குர்ஆன்** (3:185 ) (7:22) (17:64 )

(ஹுரூர் (மாயை) என்பது என்ன ?)

**காலம் என்னும் மாயை : 1**



اَوْ كَالَّذِىْ مَرَّ عَلٰى قَرْيَةٍ وَّ هِىَ خَاوِيَةٌ عَلٰى عُرُوْشِهَا قَالَ اَنّٰى يُحْىٖ هٰذِهِ اللّٰهُ بَعْدَ مَوْتِهَا فَاَمَاتَهُ اللّٰهُ مِائَةَ عَامٍ ثُمَّ بَعَثَهٗ قَالَ كَمْ لَبِثْتَ قَالَ لَبِثْتُ يَوْمًا اَوْ بَعْضَ يَوْمٍ قَالَ بَلْ لَّبِثْتَ مِائَةَ عَامٍ فَانْظُرْ اِلٰى طَعَامِكَ وَشَرَابِكَ لَمْ يَتَسَنَّهْ وَانْظُرْ اِلٰى حِمَارِكَ وَلِنَجْعَلَكَ اٰيَةً لِّلنَّاسِ وَانْظُرْ اِلَى الْعِظَامِ كَيْفَ نُنْشِزُهَا ثُمَّ نَكْسُوْهَا لَحْمًا فَلَمَّا تَبَيَّنَ لَهٗ ۙ قَالَ اَعْلَمُ اَنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ

ஒரு கிராமத்தின் பக்கமாகச் சென்றவரைப் போல் - (அந்த கிராமத்திலுள்ள வீடுகளின்) உச்சிகளெல்லாம் (இடிந்து, விழுந்து) பாழடைந்து கிடந்தன; (இதைப் பார்த்த அவர்) “இவ்வூர் (இவ்வாறு அழிந்து) மரித்தபின் இதனை அல்லாஹ் எப்படி உயிர்ப்பிப்பான்?” என்று (வியந்து) கூறினார்;

ஆகவே, அல்லாஹ் அவரை நூறாண்டுகள் வரை இறந்து போகும்படிச் செய்தான்; பின்னர் அவரை உயிர்பெற்றெழும்படிச் செய்து, “எவ்வளவு காலம் (இந்நிலையில்) இருந்தீர்?” என்று அவரைக் கேட்டான்;

அதற்கவர், “ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறு பகுதியில் (இவ்வாறு) இருந்தேன்” என்று கூறினார்;

“இல்லை நீர் (இந்நிலையில்) நூறாண்டுகள் இருந்தீர்! இதோ பாரும் உம்முடைய உணவையும், உம்முடைய பானத்தையும்; (கெட்டுப் போகாமையினால்) அவை எந்த விதத்திலும் மாறுதலடையவில்லை; ஆனால் உம்முடைய கழுதையைப் பாரும்; உம்மை மனிதர்களுக்கு ஓர் அத்தாட்சியாக்குவதற்காக (இவ்வாறு மரணிக்கச் செய்து உயிர் பெறச் செய்கிறோம்; இன்னும் (அக்கழுதையின்) எலும்புகளைப் பாரும்; அவற்றை நாம் எப்படிச் சேர்க்கிறோம்; பின்னர் அவற்றின்மேல் சதையைப் போர்த்துகிறோம்” எனக்கூறி

(அதனை உயிர் பெறச் செய்தான்- இதுவெல்லாம்) அவருக்குத் தெளிவான போது: அவர், “நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருள்களின் மீதும் வல்லமையுடையவன் என்பதை நான் அறிந்து கொண்டேன்” என்று கூறினார். (குர்ஆன் : 2:259)

ஆகவே, (விஷயம்) அவருக்குத் தெளிவான போது "நிச்சயமாக அல்லாஹ் எல்லா பொருட்களின் மீதும் மிகச் சக்தி பெற்றவன் என்பதை நான் அறிவேன்" என்று அவர் கூறினார்.

ஒரு ஊர் என்று இந்த ஆயத்தில் கூறப்பட்டிருப்பது பைத்துல் முகத்தஸ் (எருசலேம்) என்னும் நகரைக் குறிக்கிறது. அந்த ஊரின் பக்கமாக நடந்து சென்றவர் ஹளரத் உஜைர் இப்னு ஷர்க்கியா (அலை) அவர்களாவார்கள். இந்த ஆயத்து முற்காலத்தில் நிகழ்ந்த

ஒரு சம்பவத்தைச் சுட்டிக் காட்டுவதுடன் அல்லாஹு தஆலா சர்வ வல்லமையுள்ளவன் என்ற விஷயத்தையும் ஊர்ஜிதப் படுத்துகிறது. இச்சம்பவம் வருமாறு.

இஸ்ராயீலின் சந்ததியினருக்கு இறைவன் அநேகம் அருட்கொடைகளை கொடுத்தான். அவர்கள் இறைவனுக்கு நன்றி செலுத்தி அவனது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடக்காமல் அடிக்கடி மீறிக் கொண்டு வந்ததும், இவர்களது மீறுகை அளவிற்கதிகமாகி விட்டதால், இறைவன் அவர்களைத் தண்டித்துப் புத்தி புகட்டியதும் இதே சூரத்தில் இதற்கு முன் பல இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்தச் சம்பவமும் இஸ்ராயீலின் சந்ததியினர் செய்த அக்கிரமங் களுக்குத் தண்டனையாகவே நிகழ்ந்தது.

அதாவது இஸ்ராயீலின் சந்ததியினர் அளவுக்கு மீறி அநியாய அட்டூழியங்களைச் செய்து கொண்டிருந்த ஒரு சமயத்தில் பாபில் என்னுமிடத்தை ஆட்சி புரிந்து கொண்டிருந்த புக்து நஸர் என்னும் ஒரு அரசன் ஷாம் தேசத்தை நோக்கிப் படை யெடுத்து வந்தான்,

இஸ்ராயீலின் சந்ததியினர் அவ்வரசனை எதிர்த்து வெல்ல முடியாமற் தோல்வி யடைந்தனர். இவர்கள் தம்மை எதிர்த்துச் சங்கடம் விளைவித்ததற்காக அவ்வரசன் கோபமடைந்து இவர்களைப் பழிவாங்கும்படி தமது வீரர்களுக்குக் கட்டளையிட்டு விட்டான்.

ஆதலின், இஸ்ராயீலின் சந்ததியினரில் மூன்றிலொரு பாகத்தினர் வாளுக்கிரையாகி மடிந்தனர். மற்றொரு பாகத்தினர் கைதிகளாகப் பிடிக்கப்பட்டனர். மற்றவர்கள் தப்பிப் பிழைத்தனர். கைதிகளாகச் சென்றவர்களில் மட்டும் ஒரு லட்சம் ஆடவர்கள் அடிமைகளாக்கப் பட்டார்களாம். இவர்களை அவ்வரசன் தனது துணைவர்களான சிற்றரசர்களுக்கு, தலைக்கு நான்கு அடிமைகள் விகிதம் பகிர்ந்து கொடுத்ததாகச் சொல்லப்படுகிறது.

இப்படிக் கைதிகளாகச் சென்றவர்களில் ஹளரத் உஜைர் இப்னு ஷர்க்கியா ( அலை) அவர்களும் ஒருவராவார்கள். சில காலத்திற்குப்பின் ஹளரத் உஜைர் (அலை) அவர்கள் விடுதலை யடைந்து தமது கழுதையில் ஏறி பைத்துல் முகத்தஸ் நகருக்கு வந்தார்கள். அந்த நகரம் அப்போது மனித நடமாட்டம் இல்லாமலும், கட்டிடங்கள் இடிந்தும், பைத்துல் முகத்தஸ் என்ற மஸ்ஜிது பாழ்படுத்தப்பட்டும் கிடந்தது.

இதனைப் பார்த்து ஹளரத் உஜைர் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஆச்சரியமுற்று “இந்த ஊர் அழிந்து போனபின் இதனை அல்லாஹ் எவ்விதம் செழிக்கச் செய்வான்?" என்பதாகக் கூறினார்கள்.

ஹளரத் உஜைர் நபி (அலை) அவர்கள் இவ்வாறு கூறியது அல்லாஹு தஆலாவுடைய ஆற்றலை நம்பாமற் சொன்னதன்று. இவ்வாறு அழிந்து போன இடங்கள் நீண்ட காலத்திற்குப் பிறகுதான் ஒருவாறு செம்மை அடைவது வழக்கமாக இருந்து வருவதை யொட்டிக் கூறியதாகும்.

ஆகவே, இறைவன் இவரை மற்றவர்களிடம் தனது வல்லமையை அறிவிக்கும் படியான அத்தாட்சியாகக் காண்பித்து அவர்களுக்கு மறுமையின் மீது நம்பிக்கை உண்டாகும்படி செய்வதற்காக அவரை நூறு வருட காலம் இறந்தவராகவே கிடக்கும்படி செய்தான்.

எவ்வாறெனில், அவர் அவ்வூருக்குள் சென்று மரத்தினடியில் இறங்கி, அங்கு தமது கழுதையைக் கட்டி வைத்து விட்டு, ஊர் முழுவதையும் சுற்றிப் பார்த்து ஒருவரையும் காணாததால் மேற்கண்டவாறு அவ்வூரைப் பற்றிக் கூறிவிட்டுப் பக்கத்திலிருந்த மரங்களில் அத்திப் பழங்களைப் பறித்துப் புசித்து, திராட்சைப் பழத்திலிருந்து ரசமெடுத்து அருந்தி விட்டு தூங்கி விட்டார்கள். அப்பொழுது இறைவன் அவரை மரணிக்கச் செய்து விட்டான்.

அப்போது அவர் நல்ல பிராயமுள்ளவராகவும் இருந்தார் அவரது உணவும் பானமுமாகிய அத்திப் பழம், திராட்சைப் பழம், திராட்சை ரசம் ஆகியவற்றில் எஞ்சியவைகளும் அவர் அருகிலேயே இருந்தன. அவர் மரத்தில் கட்டிவைத்திருந்த கழுதையும் அப்படியே இறந்து விட்டது. இறைவன் இவையனைத்தையும் மனிதர்கள், பறவைகள், மிருகங்களது கண்ணுக்குத் தென்படாமல் மறைத்து வைத்திருந்தான்.

இது நிகழ்ந்த எழுபது வருடங்களுக்குப் பிறகு ஈரான் நாட்டு அரசர்களிலொருவர் பைத்துல் முகத்தஸ் வந்து அதனைப் புதுப்பித்துக் கட்டினார். அக்காலத்தில் புக்து நஸர் என்ற அரசன் இறந்து விட்டதால் இஸ்ராயீலின் சந்ததியினருக்கு விடுதலை கிடைத்து அவர்களும் வந்து குடியேறி அதனை வளஞ் செய்து வாழ்ந்து வந்தனர்.

இவ்விதமாக முப்பது வருட காலம் சென்றபின் இறைவன் ஹளரத் உஜைர் நபி (அலை) அவர்களை மறுபடியும் எழும்பச் செய்து மேற்கண்ட ஆயத்தில் கூறியபடி அவரிடம் வினவினான். அவர் எழும்பிப் பார்க்கும்போது விரைவில் கெட்டுப் போகக் கூடிய உணவுப் பதார்த்தமும், பானகமும் முன்பு வைத்ததுபோல புதிதாகவே இருப்பதையும், அவரது கழுதையின் எலும்புகள் மக்கிப்போயிருப் பதையும் கண்டார். பின்னர் அக்கழுதை உயிர்ப்பிக்கப்பட்டதை அவர் பிரத்தியட்சமாகப் பார்த்தார். இவ்விஷயம் ஆயத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.

இவ்வாறு உயிர்ப்பித் தெழும்பிய ஹளரத் உஜைர் (அலை) அவர்கள் தமது வீடு இருக்கும் தெருவிற்குச் சென்றார். ஆனால், அவரை அறிந்தவர் ஒருவருமில்லை. பின்னர், தமது இல்லம் சென்று, அங்கிருந்த ஓர் கண் பார்வையிழந்த மூதாட்டியிடம் ''இவ்வீடு உஜைர் நபியின் வீடல்லவா?" என்று வினவினார். அம்மூதாட்டி "மெய்தான், அவர் சென்று வெகு காலமாயிற்று, இங்கு உஜைர் நபியின் பெயரைச் சொல்பவர் எவருமில்லையே, தாங்கள் யார்?" என்பதாக வினவினாள்.

அதற்கந்த நபியவர்கள் "நானே உஜைர் நபி" என்றார். இதனைக் கேட்ட அம்மூதாட்டி அவரை நோக்கி "உஜைர் நபி (அலை) அவர்கள் இறைவனிடம் கேட்கும் பிரார்த்தனை உடனே அங்கீகரிக்கப்பட்டு நிறைவேறுவது வழக்கம். நீர் உண்மையாகவே அவராக இருப்பின் எனது கண் பார்வை எனக்கு மறுபடியும் கிடைக்க வேண்டும்'' என்று இறைவனைப் பிரார்த்திக்க வேண்டும். எனது கண் பார்வை திரும்ப வரும்பட்சத்தில் உமது முகத்தைப் பார்த்து நான் உம்மைப் பற்றி சாட்சியம் சொல்லக்கூடும்" என்றாள்.

இவளது வேண்டுகோளின் படி ஹளரத் உஜைர் (அலை) அவர்கள் இறைவனைப் பிரார்த்திக்கவே அவளுக்குக் கண் பார்வை திரும்பவும் வந்தது. அவள் அவரை அடையாளங் கண்டு ஒப்புக் கொண்டது மட்டுமில்லாமல், இஸ்ரவேலர்களது சபை கூடி இருந்த இடம் சென்று உஜைர் நபி (அலை)வந்து விட்டார் என்பதாக அறிவித்தாள்.

அங்கு குழுமி இருந்தவர்கள் அனைவரும் "இது பண்டைப் பேச்சாகும், அவர் இப்பொழுது எங்கே வரப்போகிறார்" என்று கூறி அவளைப் பொய்ப்பித்தனர். அதற்கவள் தனக்கு கண்பார்வை வந்ததையும், முதுமையால் ஏற்பட்டிருந்த மெலிவும் சோர்வும் நீங்கி உடலில் பலம் வந்ததையும் குறித்து அவர்களிடம் கூறவே அவர்கள் அனைவரும் அவரை வந்து கண்டனர்.

அக்கூட்டத்தில் ஹளரத் உஜைர் (அலை) அவர்களது 108 வயதுள்ள புதல்வரும், முதுமையை அடைந்த பேரர்களும் இருந்தனர். ஆகவே, 108 வயதினையுடைய அவரது புதல்வர் என் தந்தைக்குத் தோள் புஜத்தில் பிறைவட்டம் போல் மருவு ஒன்றிருந்தது. அந்த அடையாளத்தைப் பார்க்க வேண்டுமென்று கூறினார். அவ்வண்ணமே மரு இருக்கக் கண்டு யாவரும் அவரை அங்கீகரித்துக் கொண்டனர்,

முன்னர் புக்து நஸர் செய்த கொள்ளையாலும் படுகொலையாலும் தவ்ராத் வேதம் தவறிப்போய்விட்டது. அதனை ஓதத் தெரிந்திருந்தவர்களும் கொல்லப்பட்டுப் போயினர். ஆதலின், இஸ்ராயீலின் சந்ததியினர் தங்களது வேதம் தவறிப் போனதைப் பற்றி வருந்திக் கொண்டிருந்தனர்.

தவ்ராத் வேதத்தை அவர்கள் திரும்பவும் எழுதிக் கொள்வதற்காகவே, ஹளரத் உஜைர் (அலை) அவர்கள் அதனை மனனமாக ஓதிக் காண்பித்தார். இதன் காரணமாக இஸ்ரவேலர்கள் ஹளரத் உஜைர் நபி (அலை) அவர்களை அளவுக்கதிகமாக கொண்டாடி அல்லாஹ்வின் புதல்வர் என்பதாகக் கூறலாயினர்.

இந்த சம்பவத்தை இங்கு இறைவன் சுட்டிக் காண்பித்ததில் இருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் பலவுள.

ஒருவர் இறைவனைப் பிரார்த்திக்க வேண்டிய முறைப்படி பிரார்த்தித்தால் அவரது பிரார்த்தனை உடனே ஒப்புக் கொள்ளப்பட்டு அது அவருக்கு கைகூடும். ஆனால், அவ்வொழுங்குகளைத் தவற விட்டு விட்டால் அப்பிரார்த்தனை அங்கீகரிக்கப்படுவதில் அநேகம் தடைகளேற்படுவது மட்டுமில்லாமல், அது நிறைவேறுவதும் தாமதத்திலேயே இருக்கும். இவ்விஷயம் இச்சம்பவத்திலும், இதற்கடுத்துள்ள ஆயத்தில் கண்ட விஷயத்திலும் நன்கு புலனாகும்.

தவிர, சில ஜனங்கள் மரணித்தோர் தங்களது பூத உடலுடன் உயிர்ப்பிக்கப்பட்டு எழும்புவதை மறுக்கின்றனர். மறுமையில் ஜனங்கள் கேள்வி கணக்குக் கேட்கப்பட்டு நரக சுவர்க்கங்களை அடைவதெல்லாம் ஆன்மாக்களே யன்றி ஸ்தூலமன்று என்பதாகப் பலர் விவாதம் செய்கின்றனர்.

இவர்களது இவ்விவாதம் இந்த சம்பவத்தால் மறுக்கப்படுகிறது. மறுமையில் இறந்தவர்களை உயிர்ப்பிப்பதும், அவர்களுக்கு நரக சுவர்க்கப் பலனை அளிப்பதும் இவ்வையகத்தில் அவர்களுக்கிருந்த பூத உடலுடன்தான் என்பதை ருஜுப் பிக்கிறது.

**சூ:.பி ஞானப் பொக்கிஷங்கள் 30**

உலக வாழ்க்கை ஒரு மயக்கக்கூடிய இன்பத்தைத் தவிர வேறு இல்லை.

குர்ஆன் (3:185 ) (7:22) (17:64 )

(ஹுரூர் (மாயை) என்பது என்ன ?)

**( காலம் என்னும் மாயை - 2 - எழுத்தாளர் சுஜாதா )**



வேதபுராண யோக வாசிஷ்டத்திலிருந்து ஒரு கதையை ராமகிருஷ்ணர் எளிய பாஷையில் சொல்கிறார் : "மாயையை அறிய முடியாது"

நாரதர் ஒரு சமயம் சர்வேசுவரனைப் பார்த்து, "சுவாமி,முடியாத காரியத்தை முடிக்கவல்ல தங்களுடைய மாயையை எனக்குச் சிறிது காட்டியருள வேண்டும்" என்று கேட்டார்.

சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் சர்வேசுவரன் நாரதரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு ஒரு பாலைவனத்தின் வழியாகப் பிரயாணம் செய்தார். இருவரும் சேர்ந்து சிறிது தூரம் சென்றார்கள். அப்போது வழியில் சர்வேசுவரனுக்குத் தாகம் எடுத்தது. பிரயாணக் களைப்பு மிகுந்த நிலையில் அவர் கீழே உட்கார்ந்துகொண்டு, "நாரதரே, எனக்கு மிகவும் தாகமாக இருக்கிறது. தயவுசெய்து எங்கிருந்தாவது எனக்கு குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கொண்டுவாருங்கள்" என்று கேட்டார்.

நாரதர் அந்த நிமிடமே தண்ணீரைத் தேடிக்கொண்டு ஓடினார். ஆனால் அருகில் எந்த இடத்திலும் நாரதருக்குத் தண்ணீர் கிடைக்கவில்லை. ஆகவே நீண்ட தூரம் அவர் சென்றார். அப்போது தூரத்தில் ஓர் ஆறு ஓடிக்கொண்டிருப்பது தென்பட்டது.

நாரதர் ஆற்றை நெருங்கியபோது, அங்கே கண்ணையும் கருத்தையும் கவரும் கட்டழகு பொருந்திய இளம் பெண் ஒருத்தி உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அவளைப் பார்த்த அந்தக் கணமே நாரதருக்கு அவள் மீது காதல் உண்டாயிற்று. தனது அருகில் நாரதர் வந்ததும் அந்தப் பெண் இனிய குரலில் அவருடன் பேச ஆரம்பித்தாள். இருவரும் நேரம் போவதே தெரியாமல் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். முடிவில் ஒருவர் மீது ஒருவர் காதல் கொண்டனர்.

பிறகு நாரதர் அவளைத் திருமணம் செய்துகொண்டு, இல்லற வாழ்க்கையை நடத்த ஆரம்பித்தார். நாளடைவில் அந்தப் பெண் மூலமாக நாரதருக்குப் பல குழந்தைகள் பிறந்தார்கள். இவ்விதம் நாரதர் தமது மனைவி மக்களுடன் மிக மிக இன்பமாக வாழ்ந்து வந்தார்.

அப்படி அவர் வாழ்ந்து வந்தபோது நாட்டில் கொள்ளை நோய் பரவியது. அதன் விளைவாக நாட்டில் பல ஆயிரம் பேர் மரண தேவதைக்குப் பலியானார்கள். தேசத்தின் எல்லாப் பாகங் களிலும் மூலைமுடுக்குகள் எல்லாம் கொள்ளை நோய் பரவி, தன் கைவரிசையைக் காட்ட ஆரம்பித்தது.

இந்த நிலையில் நாரதர் தாம் வாழ்ந்துவந்த ஊரை விட்டு மனைவி மக்களுடன் வேறு எங்காவது தூர தேசத்துக்குச் சென்றுவிட முடிவு செய்தார். அவருடைய மனைவியும் அந்த யோசனைக்குச் சம்மதித்தாள். அதன்படி கணவனும் மனைவியும் குழந்தைகளைக் கையில் பிடித்துக்கொண்டு வீட்டை விட்டுக் கிளம்பினார்கள்.

வழியில் ஓர் ஆற்றுப்பாலம் குறுக்கிட்டது. பாலத்தின் மீது அவர்கள் அனைவரும் நடந்துகொண்டிருந்தார்கள். அப்போது ஆற்றில் கடுமையான காட்டாற்று வெள்ளம் கரைபுரண்டு வந்து கொண்டிருந்தது. விரைவில் ஆற்று வெள்ளம் பாலத்தை உடைத்தது.

அந்த வெள்ளத்தில் நாரதருடைய குழந்தைகள் ஒருவர் பின் ஒருவராக அனைவருமே அடித்துக்கொண்டு போகப் போகப்பட்டனர். கடைசியில் அவருடைய மனைவியையும் ஆறு அடித்துக்கொண்டு போய்விட்டது.

நாரதருக்கோ துன்பம் தாங்க முடியவில்லை. ஆற்று வெள்ளம் அவரைக் கரையில் ஒதுக்கியது. அவருடைய உள்ளமே இடிந்து போய்விட்டது. ஆற்றங்கரையில் உட்கார்ந்துகொண்டு வெகுவாகக் கதறியழுது பிரலாபிக்க ஆரம்பித்தார்.

அப்போது சர்வேசுவரன் அவரது முன்னால் தோன்றி, 'நாரதரே! தண்ணீர் எங்கே? நீர் ஏன் அழுதுகொண்டிருக்கிறீர்?" என்று கேட்டார்.

பகவானைக் கண்டதும் நாரதர் தயங்கினார். அதோடு நடந்தவை எல்லாவற்றையும் அவர் புரிந்துகொண்டார். பகவானைப் பார்த்து அவர், "சர்வேசுவரா, உங்களுக்கும் ஒரு நமஸ்காரம்; உங்களுடைய மாயைக்கும் ஒரு நமஸ்காரம்" என்று சொல்லி வணங்கினார்.

*சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்களின் வடிவாகிய என் மாயை தெய்வீகச் சக்தி வாய்ந்தது. யார் என்னையே சரணடைகிறார்களோ அவர்களே அந்த மாயையைத் தாண்டுகிறார்கள்" (கீதை: 7-14.)

இக்கதையில் ஐன்ஸ்டைனின் ரிலேட்டி விட்டி தத்துவம் இருப்பதை நீங்கள் கவனித்திருக்கலாம். கால இடைவெளி என்பது பேருக்குப் பேர் மாறும். அது தனிப்பட்ட ஒன்றல்ல. அது பார்வையாளரின் வேகத்தைப் பொறுத்தது. குறிப்பாக, பார்வையாளரின் வேகத்தைப் பொறுத்தது.

பிரம்மலோகத்தில் ஒரு வருஷம் நமக்கு நானூறு வருஷம் என்று சொல்வதெல்லாம் 'ரிலேட்டிவிட்டி 'படி சாத்தியமே. பிரம்மலோகம் நம் பூமியைக் காட்டிலும் பன்மடங்கு வேகத்தில் சென்றுகொண்டிக்கிறது என்று கொண்டால், ரிலேட்டிவிட்டிபடி பிரம்மலோகத்தின் வேகத்தை சரியாகக் கணக்கெடுக்கக்கூட முடியும்.

இதனால் நான் ஸ்தாபிக்க விரும்புவது வேத காலத்துக்காரர்களுக்கு ரிலேட்டிவிட்டி சித்தாந்தம் தெரிந்திருந்தது என்றில்லை.ரிலேட்டிவிட்டி சித்தாந்தம் ஐன்ஸ்டைன் என்கிற இந்த நூற்றாண்டின் மேதை சொந்தமாக சிந்தித்து நிலைநாட்டியது. அதே போன்ற சிந்தனையாளர்கள் வேத காலத்திலும் இருந்திருக்கிறார்கள். இருவருக்கும் பொதுவான அம்சம் உண்மை அர்த்தங்களைத் தேடுவதே ..

**சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 31**

உலக வாழ்க்கை ஒரு மயக்கக்கூடிய இன்பத்தைத் தவிர வேறு இல்லை.

குர்ஆன் (3:185 ) (7:22) (17:64 )

(ஹுரூர் (மாயை) என்பது என்ன ?)

**( காலம் என்னும் மாயை - 3 )**




வயோதிகமான ஓர் இறைநேசரை வெள்ளிக்கிழமை சந்திக்க கிள்ரு (அலை) அவர்கள் வருவது அந்நாட்டு மன்னவருக்கு தெரிய வருகிறது மன்னருக்கு கிள்ரு (அலை) அவர்களை சந்திக்க ஆவல்

உத்தரவு கிடைக்கிறது !

மன்னர் கிள்ரு (அலை) அவர்களிடம், "அற்புதமான விஷயங்களைப் பற்றி சொல்லுங்கள்" என்று கேட்க,

ஒரு சமயம் இந்த ஊரிலிருந்து வெளியே ஒரு தோட்டத்தைப் பார்த்தேன் அங்கு ஒருவர், " யாத்ரிகரே இங்கே வாரும்! என்று கூறி ஒரு பெட்டி திராட்ச பழம் கொடுத்தார்

"என்ன விலை ?" என்று கேட்க,

"விலையேதும் இல்லை. இங்கு உள்ள பாதுஷா வழிப்போக்கருக்கு கொடுக்கச் சொன்னார்"

அதே தோட்டத்தின் மறுகோடியில் இனிப்பு வழங்கபபட்டது. விலையேதும் இல்லாமல், அவரும் இவர் சொன்ன மாதிரி பாதுஷா கொடுக்க சொன்னதாக சொன்னார்.

500 வருடங்களுக்குப் பிறகு இதே வழியே கிள்ரு (அலை) வரும்போது அந்த தோட்டம இல்லை. ஆனால் பெரிய நதி ஓடுகிறது. தோட்டம் பற்றி விசாரித்த போது, "அப்படி ஒரு தோட்டம் எங்களுடைய மூதாதையர்கள் கூட சொல்வே இல்லை !"

பின் 500 வருடங்களுக்குப் பிறகு அவ்வழியே கிள்று (அலை) அவர்கள் வரும் போது, அந்த நதி இல்லை! வெறும் காடுதான் இருந்தது. நதி பற்றி யாருக்கும் தெரியவில்லை !

பின் 500 வருடங்களுக்குப் பிறகு வந்த போது, அதே தோட்டம் அதே திராட்சை பழம் மற்றும் அதே தோட்டத்தின் மறு கோடி இனிப்பு

"என்ன விலை . ?" என்று கேட்க,

"போப்பா..நேற்றுதானே சொன்னேன் பாதுஷா வழிப்போக்கற்கு ஒரு பெட்டி பழம். விலை இல்லை"

அதே மாதிரி இனிப்பும் வழஙகப்பட்டது . .

கிள்ரு (அலை) அவர்கள் அந்த மன்னரிடம் எனக்கு 1500 வருடங்கள் ஆகியிருக்கிறது! ஆனால், அந்த தோட்டக்காரர்களுக்கு ஒரே ஒரு நாள்தான் ஆகி இருக்கிறது! (மீள்)

ஆதாரம்: மல் ஃபூழாத்தே ஃபகீஹுல் உம்மத் பாகம் 1 பக் 67



காலம் என்பது என்றும் இருக்கும் ஏகமான (ஒரேயொரு) காலமாகவே இருக்கிறது. எனவே, சிருஷ்டியின் ஆரம்பமும், வாழ்வும், முடிவும், காலத்திலேயே தரிப்பட்டிருப்பதை நாம் மறுக்கமுடியாது. இதை மிக இலகுவாக விளக்குவதே "கலிமத்துத் தையிபா" என்பது.

(“லா இலாஹ இல்லல்லாஹ்") லா இலாஹ என்னும் போது சிருஷ்டி இல்லை (அப்துமில்லை, றப்புமில்லை) என்றால், மிஞ்சியிருப்பது எது?

அதுதான் "அல்லாஹ்" என்பது. இதன் மறுபெயர்தான் "காலம்" என்பது.

(நீங்கள்) திராட்சைப்பழத்தைக் கண்ணியம் வாய்ந்ததென்று கூறாதீர்கள். ஐயையோ காலத்தின் கேடே என்றும் கூறாதீர்கள். ஏனெனில், நிச்சயமாக அல்லாஹ்வே காலமாகும் என்று றஸூல்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்:- அபூஹுறைறா (றலி) ஆதாரம்:- புஹாரி, முஸ்லிம், அபூதாவுத்

## **ஸூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 32**

உலக வாழ்க்கை ஒரு மயக்கக்கூடிய இன்பத்தைத் தவிர வேறு இல்லை.

குர்ஆன் (3:185 ) (7:22) (17:64 )

(ஹுரூர் (மாயை) என்பது என்ன ?)

**( காலம் என்னும் மாயை - 4 )**



ஸூஃபியிஸத்தின் தலைவர் ஹளரத் ஜுனைதுல் பாக்தாதி (ரஹ்) அவர்களின் சீடர் ஒருவர் குளிப்பதற்காக தஜ்லா நதிக்கு வருகிறார்

அந்நேரம் சுபுஹ் தொழுகைக்கு சற்று முந்தைய நேரம்

ஆடைகளை களைந்து ஆற்றின் ஓரத்தில் வைத்து விட்டு நதியில் இறங்கி ஓரே ஒரு முங்குதான் போட்டார்.

அவ்வளவுதான் அவர் கண்டம் விட்டு கண்டமோ அல்லது இந்த பிரபஞ்சத்தின் வேறு ஏதோ ஒரு கிரகத்தின் நதியிலோ குளித்தவாறு வெளியே வருகிறார்அங்கு ரொம்ப காலம் அங்குள்ள மக்களோடு மக்களாக வாழ்ந்து வருகிறார் !

பின்னர் சில காலத்திற்குப் பிறகு ஒரு நாள் அங்குள்ள நதியில் யதார்த்தமாக குளிக்கிறார் அந்த நதியில் ஒரே ஒரு முங்கு போட்டார்.

அவ்வளவுதான் மீண்டும் தஜ்லா நதியில் ஆற்றில் நின்று கொண்டு இருக்கிறார். ஆச்சரியம் ! அதே சுபுஹ் நேரம் இன்னும் சுபுஹ் தொழுகை நடைபெறவில்லை களைந்து வைத்த துணி கூட அங்கு அதே இடத்தில் அப்படியே இருக்கிறது ! துணியை உடுத்துக் கொண்டு சுபுஹ் தொழுகையில் கலந்து கொள்கிறார் !

இதைப்பற்றி தனது ஷைகான ஜுனைதுல் பக்தாதி ( ரஹ் ) அவர்களிடம் கூறிய போது, " சில சமயம் ரொம்ப அதிகமாக வணக்க வழிபாடுகளில் ஈடுபட நினைக்கும் சாதாரண சாதகருக்கு பல காலம் வணங்கும் பாக்கியத்தை இப்படியும் இறைவன் வழங்குகின்றான்" என்றார்கள். (மீள் )



இருப்பதாய்க் காட்சியளித்த யாவும் காலம் என்றும், தாத்து, வுஜூது, ஹக்கு என்றெல்லாம் கூறப்படுகிற அல்லாஹ்விலிருந்து தோன்றி, வாழ்ந்து, மறைகின்றன என்பது தெளிவாகிறது.

தோன்றி,இருந்து, அழிந்த சிருஷ்டிக்கு, ஆதியாயும், அந்தமாயும், மறைந்ததாயும் இருந்தது அல்லாஹ் என்ற காலமேயாகும்!

காலமாயிருக்கும் அல்லாஹ்வின் "லாஹிர்" (தோற்றப்பாடு) என்ற

தூரத்துத்தான் பிரபஞ்சம் (சிருஷ்டி) என்பது.

"முஹீத்", "லாஹிர்", "வஜ்ஹு" என்ற சொற்களால் உணர்த்தப்பட்ட உண்மை தோன்றுவதும், தோற்றாததுமாய் இருந்து கொண்டிருப்பவன் அல்லாஹ் மட்டுமே என்பதாகும்.

நாம் கூறிய அல்லாஹ் என்ற காலத்திற்கு ஆதி, அந்தம், தோற்றம்,மறைவு எதுவுமே இருக்கமுடியாது. அழிவும் கிடையாது. (வுஜூது என்பது இதுவே).

எனவே, தோன்றுவதும், தோற்றாமையும், ஆதியும், அந்தமும் “றுபூபிய்யத்” என்ற இரண்டாவது (மர்த்தபா) நிலைமையைப் பொறுத்ததாகும். தாத்து, வுஜூது என்றிருந்த நிலைமையின் இரண்டாவது மர்த்தபாதான் றப்பு, அப்து என்பது. இதை மனிதனின் தெளிந்த அறிவு ஏற்றுக்கொள்ளும்.

எனவேதான், சிந்திக்கக் கூடிய மனிதர்களின் அறிவுக்கேற்ற சொற்கள் பாவிக்கப்பட்டிருக்கின்றன. இதற்குமேல் அறிவதானால் மனிதனின் அறிவு வட்டத்தைக் கடந்ததாகும். ஆதலால், காலத்தை காலம்தான் அறிந்து கொண்டிருக்க முடியும்.

**ஸூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 33**

(கனவுலகின் காலம்)



( குறிப்பு : மிகவும் கவனமாக மெதுவாக உள்வாங்கி படிக்கவும்.இந்தப் பதிவின் நுட்பக் கருத்துக்களை காமிலான சற்குருமார்கள் மிக ரகசியமாக, படித்தரம் எய்தப்பெற்ற முரீதுக்கு மட்டுமே போதிக்கின்ற இறைஞான ரகசியம்.வஹ்ததுல் வுஜூத்தின் உச்சநிலை என்பதாக எனக்கு சொல்லப்பட்டது)

" நீங்கள் காலத்தைத் திட்டவேண்டாம். திடனாகக் காலமாகிறது. அல்லாஹ்தானாகவே இருக்கிறது - (ஹதீஸ் ஆதாரம்: தாவீலாத்துன் நஜ்மியா, கலிமத்துல் ஹக்கி)

நாம் எடுத்துக்கொண்ட குர்ஆன், ஹதீஸுகளின் படியும் நமது யூகம் என்ற (மஹ்கூல்) அனுமான அறிவின்படியும் "காலம்" என்று கூறப்பட்டது என்பது "அல்லாஹ்" என்ற சொல்லால் சூட்டப்பட்ட வுஜூதேயாகும்.

எனவே, அந்தக்காலம் என்ற வுஜூதைவிட வேறெதுவும் அதனுடன் எப்போதும் இருக்கவே முடியாது. நித்திய ஜீவன் (ஹய்யுல்கையூம்), ரூஹு என்பதெல்லாம் இதுவே.

இது பகுபடாத ஏகமானது. இருப்பது இந்த வுஜுது மட்டுந்தான். அதன் நாமங்களின் தொகுப்பு, பிரபஞ்சமாகவும், பிரபஞ்சத்தில் வெளியாகும் சக்தி வுஜுதுடைய சக்தியாகவுமே இருக்கிறது. இதில் இணை, துணை, ஷிர்க் என்பதெல்லாம் கிடையேவே கிடையாது.

சிருஷ்டியான (படைப்பான) பிரபஞ்சம் அவனை விட்டும் வேறான ஒன்று என்று எடுத்துக் கொண்டால், நாம் ஷிர்க்கிலேயே ஊறிவிட்ட மூடஜாஹில்கள் (அறிவிலிகள்) என்பதே அதன் அர்த்தமாகும்

பிரபஞ்சம் என்பது, அல்லது மனிதன் என்பவன் தான் தோன்றுவதற்கு முன்பு காலமாகவே இருந்திருக்கிறான்.

هَلْ اَتٰى عَلَى الْاِنْسَانِ حِيْنٌ مِّنَ الدَّهْرِ لَمْ يَكُنْ شَيْـــًٔـــا مَّذْكُوْرًا

ஒவ்வொரு மனிதனுக்கும் (அவன் வெளிவருவதற்கு) முன்னர் ஒரு காலம் செல்லவில்லையா? அதில் அவன், இன்ன பொருள் என்றும் கூறுவதற்கில்லாத நிலைமையிலிருந்தான்.(குர்ஆன் : 76:1)

இன்ன பொருள் என்று கூறுவதற்கில்லாத நிலையிலிருந்து வுஜுது என்ற காலம் தனக்கு (மனிதன்) இன்ஸான் என்ற நாமம் உண்டென்று எப்போது எடுத்துக் கொண்டதோ, அப்போது அந்த நாமத்தின் இயல்பான சூரத்துத்தான் 'மனிதன்' என்ற இன்ஸானாய் வெளியாயிருக்கிறது !

எந்த நாமமும் இல்லாதிருந்த நிலையை "அஹது" என்றும், மனித அறிவுக்கெட்டாமல் நாமத்தோடு சூட்சுமமாய் இருந்த நிலையை "உஹது" என்றும், சூரத்தாய் வெளியான நிலையை "வாஹித்" என்றும் கூறுகிறோம்.

இதை வேறோர் வகையாய்க் கூறினால், முதல் நிலையை (மர்த்தபாவை) வுஜுது அல்லது குன்ஹு அல்லது தாத்து என்றும்,

இரண்டாவது நிலையை "தஜயுனுல்ஊலா" அல்லது பொதுக் கற்பனை என்றும்.

மூன்றாவது நிலையை "தஜயுனுஸ்ஸானி" அல்லது விபரக் கற்பனை என்றும் கூறலாம்.

இந்த முப்பிரிவுகளும் காலத்தில் கட்டுண்ட நமது அறிவில் வெவ்வேறு போல் தென்பட்டாலும் உண்மையில் வேறுபடாத ஏகமாய் இருந்து கொண்டிருக்கும் வுஜுதுதான் காலமாகும். அவன்தான் அல்லாஹ் ! இதை விளக்கவே 112ம் சூரா இக்லாஸ் அருளப்பட்டிருக்கிறது!

قُلْ هُوَ اللّٰهُ اَحَدٌ

(நபியே?!) நீர் கூறுவீராக: அல்லாஹ் அவன் ஒருவனே.

اَللّٰهُ الصَّمَدُ

அல்லாஹ் (எவரிடத்தும்) தேவையற்றவன்.

لَمْ يَلِدْ ۙ وَلَمْ يُوْلَدْ ۙ

அவன் (எவரையும்) பெறவுமில்லை; (எவராலும்) பெறப்படவுமில்லை.

وَلَمْ يَكُنْ لَّهٗ كُفُوًا اَحَدٌ

அன்றியும், அவனுக்கு நிகராக எவரும் இல்லை.

இந்த சூராவில் பாவிக்கப்பட்ட "அஹதுன்" என்ற (ரகசிய) சொல்லை இப்போதாவது தனிமையில் சிந்தனைச் செய்து தெளிவுப் பெறுங்கள்.

நாம் காணும் கொஞ்சநேர கனவில் வெளியான சிருஷ்டிகள் நம்மில் இருந்து தோன்றி, வாழ்ந்து, முடிவில் நம்மிலேயே மறைந்து விடுவது போல, காலம் என்ற வுஜுதிலிருந்தே பிரபஞ்சம் தோன்றி, காலம் என்ற வுஜுதிலேயே மறைந்தும் விடுகிறது.( காலம்தான் அல்லாஹ் )

உடல் தோன்றி, வாழ்ந்து, மறைவதற்கு உயிர் காரணமாய் இருந்தது போல தோன்றி, இருந்து, மறையும் சர்வ பிரபஞ்சத்துக்கும் முழுமுதற் காரணமாய் இருப்பது வுஜுது என்ற ரூஹு மட்டுந்தான்.

கனவைக் கண்டுகொண்டது நான்தான், என் கனவில் வெளியான அத்தனை சிருஷ்டிக்கும் உயிராயிருந்து, அவற்றைத் தோற்றுவித்து, அவற்றின் வாயிலாகவே நான், ' நான் ' என்ற தனித்தனி உணர்வோடு (கனவில்) நான்தான் வாழ்ந்தேன். அந்த நிலமை மாற்றமடைந்து விழிப்பைப் பெற்றபோது நான் என்ற உணர்வைத் தவிர வேறோர் நான் இருப்பதாய்க் காண்பதில்லை !

கனவில் வெளியான ஜீவராசிகள் கொண்டிருந்த நான் என்ற உணர்வுக்குப் பெயர்தான் "அனாநிய்யத்" என்பது. இந்த அனாநிய்யத் எப்போது நீங்குமோ, அப்போதே விழிப்புநிலை ஏற்பட்டுவிடும்.

நீண்டதொரு கனவுலகில் வாழ்கிற மனிதனை விழிப்படையச் செய்து அவனுடைய சொந்தநிலையில் அவனைத் தரிப்படுத்துவதே கலிமாவின் நோக்கமாகும்.

எனவே வெளியானான் என்றால் அவனையல்லாத வேறோர் இடத்தில் வெளியானான் என்று கருத்துக் கொள்வது வெறும் மருட்சியாகும்.

இறைவனே சர்வ பிரபஞ்சம் என்ற லாஹிர் (தோற்றம் ) ஆக, அவனிடத்தில் அவனே அவனுக்காகக் காட்சியளிக்கிறான் என்பதை நாம் உறுதியாய் நம்ப வேண்டும்.

( முதலில் பொதுத் தளத்தில் இதை பதிய வேண்டாம் என்றுதான் எண்ணினேன். இருப்பினும் பதிகிறேன்.மாற்றுக் கருத்துடையவர்கள் யாராக இருந்தாலும் தாராளமாக உடனே கடந்து போகவும். அது உங்களின் பிறவிப் பயனுக்கு நலனாக இருக்கும் )

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 34

( வேதப் புராணமும், விஞ்ஞானமும்)



யூரேனியம் போன்ற கதிர் இயக்கப் பொருள்களிலிருந்து, நியூட்ரான் கலைவு ஏற்படும்போது-அந்தப் பொருட்களின் இயற்கை மாறுகிறது. எலக்ட்ரான் வெளிப்படும்போது, சக்திவாய்ந்த ரேடியேஷன் உண்டாகிறது. இதை உயிரியல் மருத்துவ சாஸ்திரங்களில் பயன் படுத்துகிறார்கள்.

நியூட்ரீனோவைப் பிடிப்பது ரொம்பக் கஷ்டம். அதற்கு எடையில்லை. மின்சக்தியும் இல்லை. இந்த ஒவ்வொரு துகளுக்கும் ஓர் எதிர்த்துகள் (anti particle) இருக்கிறது என்று கண்டுள்ளார்கள். ஃபோட்டானுக்கு எதிர்த்துக்கள் ஃபோட்டானேதான். எலக்ட்ரானுக்குப் பாஸிட்ரான், ப்ரோட்டானுக்கு ஆண்ட்டி ப்ரோட்டான். அதேபோல் நியூட்ரானுக்கும் நியூட்ரீனோவுக்கும் ஆண்ட்டிநியூட்ரான், ஆண்ட்டி நியூட்ரீனோ.

நியூட்ரானின் கலைவில் வெளிப்படுவது இந்த வகை ஆண்ட்டி நியூட்ரீனோதான் என்று விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். இந்தத் துகள்களைப் போல் நூற்றுக்கணக்கான துகள்களைக் கண்டுபிடித்துள்ளார்கள்.

ஆனால், அவையாவும் மிகவும் தற்காலிகமான துகள்களே. சிறிது காலம், மிகச் சிறிது காலம் வாழும் விட்டில் பூச்சிகள் இந்தத் துகள்கள். பெரும்பாலானவை ஒரு செகண்டில் பத்து லட்சத்திற்கு ஒரு பங்கே வாழக்கூடியவை. இருந்தும் இந்தத் துகள்களின் மிகச் சிறிய அளவுடன் ஒப்பிட்டால் இந்தச் சிறிது காலம்கூட நம்முடைய "முழு வாழ்நாளுக்கு" ஒப்பாகும்.

இவைகளை மறைமுகமாக ப்பிள் சேம்பர்'களில் படம் பிடித்து இவைகள் இருப்பதை அறிந்துகொள்கிறார்கள். ஹேட்ரான்ஸ், லெப்டான்ஸ் என்கிற பிரிவில் பேரியான்,மெஸான் என்கிற உட்பிரிவில் ம்யூவான், பையான், சுவான் என்று பற்பல சின்னசிறியத் துகள்களை அடையாளம் கண்டு கொண்டிருக்கிறார்கள்.

இந்தத் துகள்களெல்லாம் ஒன்றுக்கொன்று உறவாடும்போது, மிகச் சிறிது காலம் இயங்குகின்றன. அழிகின்றன. வேறு துகள்களாக மாறுகின்றன. இவைகளுக்குள் ஏற்படும் உறவாடல்கள் மிகச் சிக்கலானவை. இந்தச் சின்னஞ்சிறிய உலகத்தில் சக்தி ,, துகள்கள் சக்தியாகவும் அடிக்கடி விந்தையாக மாறிக்கொண்டே இருப்பதைப் படம் பிடித்திருக்கிறார்கள்.

சற்று நேரம் ஒரு துகள் நகர்கிறது. மற்றொரு துகளுடன் மோதுகிறது. அப்போது சக்தி வெளிப்படுகிறது. அந்த சக்தியின் பாதிப்பால் புதிய துகள்கள் பிறக்கின்றன! இந்த மாதிரி உறவாடல்களை எல்லாம் அந்த விஞ்ஞானிகள் தத்தம் சோதனைக்கூடங்களில் செயற்கை முறையில் பார்ட்டிக்கின் ஆக்ஸலேரேட்டர்கள் துணை கொண்டு 'பபின் சேம்பரில்' இந்த விந்தையான பாதைகளைப் படம் பிடிக்கிறார்கள்.

இயற்கையிலும் இந்த வகை மாறுதல்கள் எப்போதும் நிகழ்ந்து கொண்டியிருக்கின்றன. விண்வெளியிலிருந்து வரும் காஸ்மிக் கதிர்கள்-அவை எங்கிருந்து வருகின்றன என்பது சரியாக இதுவரையிலும் தெரியவில்லை. சதா பற்பல துகள்கள், சக்தி வெளிப்பாடுகள் மூலம் நம் பூமியைத் தாக்கிக்கொண்டிருக்கின்றன.

இவை தம் உலகத்தின் காற்று வெளியைத் தாக்கும்போது, காற்றின் அணுக்கள் சிறு துகள்களாகச் சிதறிசிதறி, அந்தத் துகள்கள் மற்றும் சிதறல்களை ஏற்படுத்தி சில சமயம் இந்த விதத்தில் 'துகள் மழை' ஏற்படுவதுண்டு.

விஞ்ஞானிகளின் செயற்கையான பரிசோதனைகளில் நிகழும் அதே நடனம் இயற்கையாக இந்த காஸ்மிக் கதிர்கள் மூலமும் நிகழ்கின்றன.

இந்த விண்வெளித் தூதர்களின் வரவால் நம் காற்று வெளியில் சாஸ்வதமான ஒரு சக்தி நடனம் ஏற்படுகிறது. புதிய துகள்கள் தோன்றுகின்றன. பழைய துகள்கள் அழிக்கின்றன. வேஷம் மாறுகின்றது. காட்சி மாறுகின்றது!

இந்த இயக்கங்கள் முழுவதுமே குவாண்டம் தத்துவத்தின் அடிப்படையில் நிகழ்பவையே. இந்தத் துகள்கள் ஒன்றோடொன்று பல முறைகளில் உறவாடும்போது, நிகழ்வது சிருஷ்டியும், அழிவும் தான். மாறுபட்டு மாறுபட்டு வசிகரமான, எண்ணற்ற வகைகளில் இந்த 'காஸ்மிக்' நடனம் நிகழ்கிறது.

இந்த மாறுதல்களில் ஒருவித இயக்கமும், லயமும் இருப்பதை விஞ்ஞானிகள் குறிப்பிட்டுள்ளனர். கென்னத் ஃபோர்ட் என்பவர் தன் புத்தகத்தில், 'ஒவ்வொரு ப்ரோட்டானும் இந்த படைக்கும்-அழிக்கும் நடனம் செய்கிறது என்கிறார்.

சிவதாண்டவத்தின் தத்துவமும் பின்னணியும் இதுதான்.

'பிரம்ம ராத்திரியில் இயற்கை செயலற்று இருக்கையில்,சிவதாண்டம் உயிர் அளிக்கிறது. சிவன் எழுகிறான். அவன் நடனம் அசைவில்லாப் பொருட்களின் ஊடே உயிர் இயக்கத் துடிப்பலைை அனுப்புகிறது எல்லா ஜடப்பொருள்களும் நடனமாடுகின்றன. அவன் நடனம் ஆடும்போது அவைகளுக்கெல்லாம் உயிர் அழிக்கிறான். நடனம் ஆடிக் கொண்டே அவைகளையெல்லாம் அழிக்கிறான். அவை அவைகளை அழித்தும், சிருஷ்டித்தும் இடைவிடாது நடனம் ஆடிக் கொண்டே இருக்கிறான்"

நவீன பௌதிகத்தில் சிவதாண்டவம் அணுக்களின் உட்கருவுக்குள் சதா நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்கிறார்கள்.

"மாலினி விஜயதந்திரம்" என்கிற அரிய நூல் மிகப் பழைமையானது. சிவன் முதன்முதலாக தேவியின் கேள்விக்குச் சொன்ன வாசகங்கள் வாய்மொழிப் பரவலாக நூற்றாண்டுகளாகப் பற்பல முறை ஸ்மரிக்கப்பட்டு, எழுதப்பட்டு இன்றுவரை வந்திருக்கின்றன என்கிறார்கள்.

இந்த நூல்களில் ஒருவிதமான நடுநிலைப்படுத்துதலைப் பற்றி பல வாசகங்கள் உள்ளன. சிந்தனையை ஒருமைப்படுத்துவது பற்றி -

இதன் சில பகுதிளைப் பார்க்கலாம்.

தேவி கேட்கிறாள்:

"பெருமானே, உன் உண்மை என்ன?

இந்த விந்தை நிறைந்த பிரபஞ்சம் என்பது என்ன?

இதன் விதை என்ன?

இதன் மையம் என்ன?

இதன் முடிவு என்ன ?

உருவத்துக்கு அப்பாற்பட்ட உயிர் என்பது என்ன?

உருவத்துள் ஊடுருவும் உயிர் என்பது என்ன?

அதனுள் எப்படி நாம் நுழைவது?

காலம், தூரம், நாமம் , வர்ணனை இவைகளை எப்படிக் கடந்து

செல்வது?"

சிவன் பதில் தருகிறார்:

"பிரகாசமானவளே! இந்த அனுபவம் உன் மேல் மூச்சுக்கும் கீழ் மூச்சுக்கும் இடையே தோன்றலாம். இரண்டு மூச்சுக்களின் இடையில், ஒரு கணத்தில் சக்தியற்ற, சக்தி நிரம்பிய மையத்தைத் தொட முயற்சி செய்!

"தேவி! எழுத்துக்களாகப் பார். அப்புறம் அவைகளை சப்த ரூபங்களாகப் பார். பின் அவைகளை எல்லாம் புறக்கணித்து விட்டு அவைகளின் உள்ளே இருக்கும் சுதந்திரத்தைப் பார்.

"கண்களை மூடிக்கொண்டு உன்னுள்ளேயே விவரமாகப் பார். உன் இயற்கையைப் பார்.

தலையில் இருக்கும் ஏழு வாசல்களையும் கைகளால் மூடிக்கொண்டு கண்களுக்கு இடையே இருக்கும் வெளியில் எல்லா பிரபஞ்சமும் அடங்கி விடுவதை பார் !

இந்த நூலும் நம்மிலிருந்து, நம் நினைப்பில் இருந்து விடுபட்ட ஒன்றைத்தான் உணர செய்கிறது. இந்த அனுபவத்தை உணர்வதற்கு யோகம் இருக்கிறது என்கிறார்கள். ஞானத்தில் பல வகைகள் உணர்வுகள் சொல்கிறார்கள். அதில் இது ஒரு தனியோகம் என்கிறார்கள்.

## சூ:.பி ஞானப் பொக்கிஷங்கள் 35

( ரசூலின் கை அல்லாஹ்வின் கைதானா ? ) பகுதி - 1

اِنَّ الَّذِيْنَ يُبَايِعُوْنَكَ اِنَّمَا يُبَايِعُوْنَ اللّٰهَ يَدُ اللّٰهِ فَوْقَ اَيْدِيْهِمْ فَمَنْ نَّكَثَ فَاِنَّمَا يَنْكُثُ عَلٰى نَفْسِهٖ وَمَنْ اَوْفٰى بِمَا عٰهَدَ عَلَيْهُ اللّٰهَ فَسَيُؤْتِيْهِ اَجْرًا عَظِيْمًا

நிச்சயமாக எவர்கள் உம்மிடம் பைஅத்து(வாக்குறுதி) செய்தார்களோ, அவர்கள் அல்லாஹ்விடமே பைஅத்(வாக்குறுதி) செய்கின்றனர் - அல்லாஹ்வின் கை அவர்களுடைய கைகளின் மேல் இருக்கிறது; ஆகவே, எவன் (அவ்வாக்குறுதியை) முறித்து விடுகிறானோ, நிச்சயமாக அவன் தனக்குக் கேடாகவே (அதை) முறிக்கிறான். எவர் அல்லாஹ்விடம் செய்த அவ்வாக்குறுதியை நிறைவேற்றுகிறாரோ அவருக்கு அல்லாஹ் மகத்தான நற்கூலியை விரைவில் வழங்குவான்.

(குர்ஆன் : 48:10)

கலிமாவின் உறுதியான (தலீல்களில்) ஆதாரங்களில் இந்த ஆயத்தும் ஒன்றாகும். எனவே, இது முஹ்கமு வசனந்தான் என்பதை மறுக்க முடியாது. முஹ்கமு வசனங்கள் 1) இபாரத் (சொல்), 2) தலாலத் (கருத்து), 3) இஸாரத் (சயிக்கினை),4) இஹ்திலால் (உவமானம்) ஆகிய நான்கு பிரமாணங்களின் படியும் ஒரேயொரு பொருளை மட்டும் கொடுப்பவையாகும்.

இவ்வசனங்களை உருவகப்படுத்தும் வசனங்களாய் எடுத்துக் கொள்வது குர்ஆனுக்கு முரணாகும். ஆதலால் இவ்வாயத்தில் குறிப்பிட்டபடி “அல்லாஹ்வுடைய கை தான் இருக்கிறது" என்ற வசனத்தை எவ்வித வலிந்துரையும் கொள்ளாமல் வைத்துக்கொண்டே ஆராய்வோம்.

நாம் முன்பு காட்டிய ஆயத்துக்கள் ஹதீஸுகளின்படி காலந்தான் அல்லாஹ் என்பதை அறிந்து கொண்டோம். காலமென்ற அல்லாஹ்வின் தோற்றப்பாடே பிரபஞ்சமென்ப தையும் அறிந்து கொண்டோம். பிரபஞ்சத்தில் வெளியாகும் சக்தி அல்லாஹ்வுடையது என்பதை

قُلْ مَنْ يَّرْزُقُكُمْ مِّنَ السَّمَآءِ وَالْاَرْضِ اَمَّنْ يَّمْلِكُ السَّمْعَ وَالْاَبْصَارَ وَ مَنْ يُّخْرِجُ الْحَىَّ مِنَ الْمَيِّتِ وَيُخْرِجُ الْمَيِّتَ مِنَ الْحَـيِّ وَمَنْ يُّدَبِّرُ الْاَمْرَ فَسَيَـقُوْلُوْنَ اللّٰهُ فَقُلْ اَفَلَا تَتَّقُوْنَ

“உங்களுக்கு வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உணவளிப்பவன் யார்? (உங்கள்) செவிப்புலன் மீதும், (உங்கள்) பார்வைகளின் மீதும் சக்தியுடையவன் யார்? இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றையும், உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் வெளிப்படுத்துபவன் யார்? (அகிலங்களின் அனைத்துக்) காரியங்களையும் திட்டமிட்டுச் செயல்படுத்துபவன் யார்?” என்று(நபியே!) நீர் கேளும். உடனே அவர்கள் “அல்லாஹ்” என பதிலளிப்பார்கள்; “அவ்வாறாயின் அவனிடம் நீங்கள் பயபக்தியுடன் இருக்க வேண்டாமா?” என்று நீர் கேட்பீராக. (குர்ஆன் : 10:31) போன்ற ஆயத்துக்கள் நிரூபிக்கின்றன.

அப்படியானால் பிரபஞ்சத்தில் தோன்றும் ஒவ்வொரு பொருளும் இறைவனின் சூறத்துத்தான் என்பதை நாம் மறுக்கமுடியாது. இது உண்மைதான் என்றால் முஹம்மது(ஸல் ) அவர்களுடைய சூறத்து யாருடையது? அல்லாஹ்வுடையதுதான். முஹம்மது என்ற கௌனியான நாமமுடைய சூறத்தான அவ்வுடலின் கை அல்லாஹ்வின் கைதான் என்றால், உடலும் இறைவனுடைய சூறத்தேதான் என்பதை நாம் ஏன் மறுக்க வேண்டும்?

(றஸுலின்) அப்துவான முஹம்மது (ஸல்) என்ற மனிதரின் கை அல்லது உடல் அல்லாஹ்வின் வேறல்ல என்றால் சர்வ பிரபஞ்சமென்ற சூறத்து யாருடையது? அல்லாஹ்வுடையதுதான்.

லாஹிர் என்ற வெளிப்படைத் தோற்றங்கள் யாவும் அல்லாஹ்வுடையதுதான் என்றால் பாத்தின் என்ற சூட்சும உலகும் அல்லாஹ்வுடையது தான். இவ்விரண்டும் அல்லாஹ்வுடையதுதான் என்றால் நாம் அறியாத மர்த்தபாக்களும் அல்லாஹ்வுடையவைதான். இபாரத், தலாலத், இஸாரத், இஹ்திலால் ஆகிய நான்கு பிரமாணங்களின் படியும் அந்த

வேதவசனம் அல்லாஹ்வையன்றி வேறெதுவும் அவனுடன் இல்லவே இல்லை என்று கலிமா உணர்த்தும் கருத்தான தௌஹீதைத்தான் நிரூபிக்கிறது!

என்னுடலையும் (லாஹிரையும்), என்னுயிரையும் (பாத்தினையும் ) வெவ்வேறு என்று காணாமலே நான் நம்பியிருக்கிறேன். என் கை என்னுடைய ஓர் அங்கம்தான். என்னுடலிலுள்ள ஒவ்வோர் அணுவும் என் அங்கங்கள்தான். என்னுடலிலுள்ள எந்த ஓர் அணுவின் சூறத்தும் என்னுடைய வெளிப்பாடுதான். என்னுடலிலுள்ள ஒவ்வோர் அணுவிலிருந்தும் வெளியாகும் சக்தி என்னுடையதுதான். சக்தியை நல்லதாய், தீயதாய்ப் பிரித்துக் கொள்வது மனிதனுடைய அதாலத் என்ற நீதிநிர்வாகத்தைச் சேர்ந்த விஷயமாகும். நாமிங்கே பேசுவது தௌஹீதென்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

நாம் கூறிய முன்மாதிரியை ஆதாரமாய்க் கொண்டு சிந்தித்தால் லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவினால் உணர்த்தப்படும் உண்மையை நம்மால் மறுக்கமுடியாது. எல்லோரும் தெளிவாய் விளங்கக் கூடிய ஒரே கருத்துடைய பாஷை வழக்குச் சொற்களைக் கொண்டே கலிமாவின் மூலம் (லாஹிராயும், பாத்தினாயும்) சிருஷ்டி, சிருஷ்டிகர்த்தா (அப்து, றப்பு) என்ற இரண்டு மர்த்தபாக்களும் அல்லாஹ்வாகிய என்னுடையதே என்றும் என்னுடன் ஜோடியாய், சமமாய், ஒப்பாய், இணையாய், நிகராய் ஒன்றுமே இல்லவே இல்லை என்று இறைவன் வெளிப்படையாய்த்தான் கூறினான்.

இதை நிரூபணம்செய்து விளக்குவதற்காகவே கலிமாவின் தலீல்களை அருளியிருக்கிறான். எனவே கலிமாவுக்கு முரணான எந்தவொரு வசனமும் குர்ஆனில் இடம்பெறமுடியாது. முரணிருப்பதாய்க் காண்பது மருட்சியாகும். இவ்விஷயம் மனிதர்கள் யாவருடைய அறிவிலும் தெளிவாய்ப் பிடிபட வேண்டுமென்பதற்காக இன்னும் சிறிது கூறுகிறேன் .

நாம் காட்டிய 48:10ம் வசனத்தை மீண்டும் ஒரு முறை நோக்குங்கள். அதில், றஸூலிடம் (உம்மிடம்) வாக்குறுதி செய்பவர்கள் அல்லாஹ்விடமே வாக்குறுதி செய்கிறார்கள் என்ற வசனம், அல்லாஹ்வே றஸூல் என்று கொள்வதற்குப் போதுமான ஆதாரமாகும்.

அல்லாஹ்வுடைய றஸூல் என்பதிலுள்ள "உடைய" என்ற சொல் கலிமாவின் ஆதாரப்படி தற்கிழமைப் பொருளில் கொள்ளப்பட்டால், என்னுடைய உயிர் நானாகவே இருப்பதுபோல அல்லாஹ்வுடைய றஸூல் அல்லாஹ்வாகவே இருக்கிறார் என்பது வெளிப்படையாகவே தென்படுகிறது

## **சூ்ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 36**

(ரசூலின் கை அல்லாஹ்வின் கைதானா? ) பகுதி- 2

اِنَّ الَّذِيْنَ يُبَايِعُوْنَكَ اِنَّمَا يُبَايِعُوْنَ اللّٰهَ يَدُ اللّٰهِ فَوْقَ اَيْدِيْهِمْ فَمَنْ نَّكَثَ فَاِنَّمَا يَنْكُثُ عَلٰى نَفْسِهٖ وَمَنْ اَوْفٰى بِمَا عٰهَدَ عَلَيْهُ اللّٰهَ فَسَيُؤْتِيْهِ اَجْرًا عَظِيْمًا

நிச்சயமாக எவர்கள் உம்மிடம் பைஅத்து(வாக்குறுதி) செய்தார்களோ, அவர்கள் அல்லாஹ்விடமே பைஅத்(வாக்குறுதி) செய்கின்றனர் - அல்லாஹ்வின் கை அவர்களுடைய கைகளின் மேல் இருக்கிறது; ஆகவே, எவன் (அவ்வாக்குறுதியை) முறித்து விடுகிறானோ, நிச்சயமாக அவன் தனக்குக் கேடாகவே (அதை) முறிக்கிறான். எவர் அல்லாஹ்விடம் செய்த அவ்வாக்குறுதியை நிறைவேற்றுகிறாரோ அவருக்கு அல்லாஹ் மகத்தான நற்கூலியை விரைவில் வழங்குவான்.

(குர்ஆன் : 48:10)

என்ற வசனத்தில் கை என்று மட்டுமே இறைவன் கூறியிருக்கிறான். கை என்று உடலின் ஓர் அங்கத்தை மட்டுமே கூறியிருக்கிறான். கை ஒரு தனி அங்கத்தைக் குறிப்பிட்டால் அது ஓர் அஃறிணை என்பது அதன் அர்த்தம்.

முஷ்ரீக்குகள், ஒவ்வொரு பொருளும் தனித்தனி வுஜுதுகள் என்றும் அவை அல்லாஹ் அல்லாதவை என்றும் நம்பியிருந்தவர்கள். தாங்கள் ஸுஜுது செய்து கொண்டிருந்த இலாஹுகள் அஃறிணைப் பொருட்கள் என்றும், அல்லாஹ்வும் மலக்குகளும் நபிமாருடைய ஆவிகளும் உயர்திணையென்றும் நம்பியிருந்தவர்கள். இறைவனை அரூபி என்றே நம்பியிருந்தவர்கள். இவர்களுடைய மயக்கத்தை நீக்கித் தெளிவூட்டவே "கை" என்ற சொல்லை இறைவன் கையாண்டிருக்கிறான்.

எப்படியென்றால், அல்லாஹ் அரூபியானவன் என்றால் அவனுடைய கையும் காணமுடியாத அரூபமாகவே இருக்கும். றஸூல் (ஸல் ) அவர்களின் கை முப்பரிமாணமுடைய ஜடப் பொருள்தான். றஸூலின் கையில் சத்தியஞ் செய்தவர்களின் கைகளும் பௌதீக (ஜட)க்கைகளே.

ஜடக்கையில் ஜடமல்லாத இறைவனின் கை படமுடியாதே! பட்டாலும் அதைக் கண்ணால் காணமுடியாதே! அதை உணரவும் முடியாதே! றஸுலின் கையில் சத்தியஞ் செய்தோர் றஸுலையும், றஸுலின் கையில் சத்தியஞ் செய்தோரை றஸுலும் நேருக்கு நேர் கண்டுதான் சத்தியஞ் செய்திருக்கிறார்கள்.

றஸுலின் கை அஃறிணைப் பொருளான ஜடமாயிருந்தும் அது அல்லாஹ்வுடைய கை தான் என்று கூறப்படுவதால், அஃறிணைப் பொருட்களான பிற பொருட்களும் அல்லாஹ்வின் வேறானவையல்ல என்று உணர்த்தப்படுகிறது.

எனவே உயர்திணை, அஃறிணை (ஜடம், ஸ்தூலம், பௌதீகம்) போன்றயாவும் இறைவனின் லாஹிரான தோற்றப்பாடே என்பது தெளிவாக்கப்படுகிறது. ஏனெனில் சிருஷ்டி என்ற வகையில் ஒன்றுக்கொன்று முரண்போல தென்பட்டாலும் யாவுக்கும் வுஜூது ஏகமானது (ஒன்றே ஒன்று) தான்.

உயிர் என்ற உதிர்திணை, உடல் என்ற அஃறிணைப் பொருளோடும் வேறுபாடற்ற ஏகமாய் கொண்டு வாழ்வதே சிருஷ்டி என்பது.

உயர்திணையான உயிர், தன் ஆட்சியை நிறுத்திக் கொண்டால் அவ்வுடல் மையத் அக்ரி இணையான பொருள்தான் இங்கு நாம் கூறிய விஷயத்தை முன்மாதிரியாக எடுத்துக்கொண்டு நோக்கினால் உயர்த்தினையான இறைவனும் அஃறிணையான சிருஷ்டியும் (பாதினும் லாஹிலும்) ஒன்றை விட்டு ஒன்று வேறுபடாத, பிரிபட முடியாத ஏகமாய் இருந்து கொண்டிருக்கிறது என்பதை நாம் மறக்க முடியாது.

அடுத்து,

فَلَمْ تَقْتُلُوْهُمْ وَلٰـكِنَّ اللّٰهَ قَتَلَهُمْ وَمَا رَمَيْتَ اِذْ رَمَيْتَ وَ لٰـكِنَّ اللّٰهَ رَمٰى وَلِيُبْلِىَ الْمُؤْمِنِيْنَ مِنْهُ بَلَاۤءً حَسَنًا اِنَّ اللّٰهَ سَمِيْعٌ عَلِيْمٌ

(நம்பிக்கையாளர்களே! போர் புரிந்த சமயம்) நீங்கள் அவர்களை கொன்று விடவில்லை; அல்லாஹ்தான் அவர்களை கொன்றான். நபியே! எதிரிகளின் மீது நீங்கள் (மண்ணை) எறிந்தபோது (அதனை நீங்கள் எறியவில்லை; அல்லாஹ்தான் (அதனை) எறிந்தான். நம்பிக்கையாளர்களை அழகான முறையில் சோதிப்பதற்காகவே (இவ்வாறு செய்தான்.) நிச்சயமாக அல்லாஹ், செவியுறுபவனும் மிக்க அறிந்தவனாகவும் இருக்கின்றான். (குர்ஆன் : 8:17)

மேற்கண்ட வசனம் போல், குர்ஆனின் இன்னொரு இடத்தில், யுத்தத்தின் போது, தாங்கள் புறங்காட்டி ஓட மாட்டோம் என்று நபி தோழர்கள் ரசூல் (ஸல்) அவர்களிடம்தான் வாக்குறுதி செய்திருக்கிறார்கள்.

وَلَقَدْ كَانُوْا عَاهَدُوا اللّٰهَ مِنْ قَبْلُ لَا يُوَلُّوْنَ الْاَدْبَارَ وَكَانَ عَهْدُ اللّٰهِ مَسْـــُٔوْلًا

எனினும், அவர்கள் (போரிலிருந்து) புறங்காட்டி ஓடுவதில்லை என்று அல்லாஹ்விடத்தில் இதற்கு முன்னர் நிச்சயமாக வாக்குறுதி செய்திருந்தார்கள்; ஆகவே, அல்லாஹ்விடம் செய்த வாக்குறுதி பற்றி (அவர்களிடம்) கேட்கப்படும். (குர்ஆன் : 33:15)

அந்த ரசூல்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வை விட்டும் வேறானவர்களாக இருந்தால், மேற்கண்ட இவ்வசனம் இவ்வாறு கூறுவது உண்மை என்று ஆகாது.

"ரசூல்" என்று கூறப்படுவது அல்லாஹ்தான் என்று இல்லாவிட்டால், அல்லாஹ்விடமே வாக்குறுதி செய்தார்கள் என்பது எவ்வகையிலும் ஒத்து வரவே வராது என்பதை கருத்தூன்றி கவனிக்க

மேலே காட்டிய வசனத்தில் "ரசூல்" என்ற சொல்லே பாவிக்கப்படாமல் அல்லாஹ் என்ற சொல்லை பாவிக்கப்பட்டு இருப்பதையும் குர்ஆன்

( 48 : 10 ) வசனத்தில் அல்லாஹ்வையும் ரசூலையும் இணைத்து கூறப்பட்டிருப்பதையும் கவனத்தில் கொண்டு நோக்குக !

"மன்றஆனி பகத்ற அல்ஹக்" - "என்னைக் கண்டவன் நிச்சயமாக ஹக்கை கண்டான்" என்று ஒரு ஹதீஸ் காணப்படுகிறது. நாம் முன் காட்டிய விபரங்களுக்கு இந்த ஹதீஸ் ஆதாரமளிப்பதை நோக்குக.

இந்த ஹதீஸில் கூறப்பட்ட " ஹக் "என்ற சொல் அல்லாஹ்வின் திருநாமங்களில் ஒன்று என்பதையும், இந்த "ஹக்" என்ற நாமத்திற்கு எதிரிடை கிடையாது என்பதையும் மறக்க வேண்டாம்.

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 37

(ரசூலின் கை அல்லாஹ்வின் கைதானா? ) பகுதி- 3

اِنَّ الَّذِيْنَ يُبَايِعُوْنَكَ اِنَّمَا يُبَايِعُوْنَ اللّٰهَ يَدُ اللّٰهِ فَوْقَ اَيْدِيْهِمْ فَمَنْ نَّكَثَ فَاِنَّمَا يَنْكُثُ عَلٰى نَفْسِهٖ وَمَنْ اَوْفٰى بِمَا عٰهَدَ عَلَيْهُ اللّٰهَ فَسَيُؤْتِيْهِ اَجْرًا عَظِيْمًا

நிச்சயமாக உம்மிடத்தில் பைஅத்துச் செய்கிறார்களே அவர்கள் பைஅத்து செய்வதெல்லாம் அல்லாஹ்விடம்தான்.அல்லாஹ்வின் கை அவர்களுடைய கைகளுக்கு மேல் (இருக்கிறது). ஆகவே, எவர் முறிக்கிறாரோ தன்னுடைய நஃப்ஸுக்கு விரோதமாகத்தான் அவர் (அதை) முறிக்கிறார். மேலும், எவர் அல்லாஹ்வுக்கு உறுதிமொழி அளித்ததை நிறைவேற்றுகிறாரோ புவருக்கு மகத்தான நற்பயனை அவன் அளிப்பான். (குர்ஆன் 48:10)

பைஅத் என்பது ஒரு பொருளை விற்பதற்கும் அதற்குப் பதிலாக மற்றொன்றை வாங்குவதற்கும் பெயர். சன்மார்க்க விஷயத்தில் ஒழுங்காக நடப்பதாக வாக்குறுதி அளித்து அதன்படி நடந்தால், இறைவன் மறுமையில் நற்பயனை அளிப்பதால் இதுவும் மேற்கண்ட வியாபாரத்தைப் போன்றே இருக்கிறது.

இதனை இறைவன் “நிச்சயமாக அல்லாஹ் மூமீன்களிடத்திலிருந்து அவர்களுடைய நஃப்ஸுகளையும் அவர்களுடைய பொருள்களையும், நிச்சயமாக அவர்களுக்கு சுவர்க்கம் இருக்கிறது. என்பதற்குப் பதிலாக விலைக்கு வாங்கிக் கொண்டான்” (குர்ஆன் 9:111) என்று கூறியுள்ளான்.

இவ்வாறே இரு கட்சிக்காரர்கள் செய்து கொள்ளும் ஒப்பந்தமும் இருக்கிறது. ஆதலின், ஒப்பந்தங்கள், உடன்படிக்கைகள் போன்றவைகளுக்கு “பைஅத்” என்று பெயர் கூறப்படுகிறது.

இவ்வாயத்தில் கூறப்பட்டுள்ள “பைஅத்" என்பது இந்த சூரத்தின் முதலாவது வசனத்தின் கீழுள்ள விபரத்தில் கண்ட ஹுதைபிய்யா என்ற இடத்தில் முஸ்லிம்கள் அளித்த பைஅத்தைக் குறிக்கும். நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் செய்த இந்த பைஅத் இறைவனிடம் செய்த பைஅத்தாகும் என இதன் சிறப்பு இவ்வாயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

ஹுதைபிய்யா என்ற இடத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் பைஅத்துச் செய்த நபித்தோழர்களில் ஒருவர் நீங்களாக மற்றைய யாவரும் இறுதிவரை அதனை நிறைவேற்றினர் ஜத்துப்னு கைஸ் என்ற ஒருவர் மட்டும்தான் இதை முறித்தார். இவர் முனாஃபிக்குகளில் ஒருவர்.

ஏனெனில், முஸ்லிம்கள் நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அளித்த இந்த பைஅத்துக்கு கூலி கொடுக்கும் பொறுப்பை அல்லாஹு தஆலா ஏற்றுக் கொள்கிறான். ஆகவே, அவனது தூதர் என்ற முறையில், அவன் சார்பாகவே நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இதனை வாங்கி இருப்பதால் உண்மையில் இறைவனிடம் நேரில் பைஅத்துச் செய்ததற்குச் சமமாக இருக்கிறது.

அல்லாஹ்வின் கை அவர்களுடைய கைகளுக்கு மேல் இருக்கிறது என்பது "எவர் ரசூலுக்கு கீழ்ப்படிந்தாரோ அவர் அல்லாஹ்வுக்கு கீழ்ப்படிந்தார்” என்ற ஆயத்தைப் போன்று இருக்கிறது. ஏனெனில், நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தம்முடைய உஜுதை விட்டு முற்றிலும் நிக்கிரஹஞ் செய்து, அவனது தாத்திலும், ஸிஃபத்திலும், செய்கையிலும் அல்லாஹ்வைக் கொண்டு ஸ்திரமாகி விட்டார்கள்.

ஆகவே புறத்தில் அவர்களிலிருந்து நிகழ்ந்த யாவும், அகத்தில் அல்லாஹுதஆலாவிலிருந்தே நிகழ்ந்திருக்கின்றன. இது போன்று அவர்களிடம் பைஅத்துச் செய்தது, அல்லாஹுதஆலாவிடத்தில் பைஅத்துச் செய்வதாகக் கூறப்பட்டிருக்கிறது" என்று அஹ்லுல் ஹக்கீக்கத் என்னும் அகமியக்காரர்கள் கூறி இருக்கிறார்கள்.

இங்கு கூறப்பட்டுள்ள விஷயம் ஜம்உடைய மக்காமில் உள்ளது. அல்லாஹு சுப்ஹானஹு வதஆலா, தன்னுடைய மிகச் சிறந்த சிருஷ்டியும் மிகமிக விசேஷமாகவுமுள்ள நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஒருவருக்குத் தவிர மற்ற எவருக்கும் ஜம்உடைய நிலையைத் தெளிவாக விபரித்துக் கூறவில்லை என ஒரு பெரியார் கூறியுள்ளார்.

இந்நிலையில்தான் கியாமத் நாளில் எல்லாரும் நஃப்ஸீ நஃப்ஸீ என்று தவியாகத் தவிக்கும் பொழுது, நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உம்மத்தீ, உம்மத்தீ என்று கூறுவார்கள் என ஹதீஸில் கூறப்பட்டிருக்கிறது. அச்சமயத்தில் அவர்களுக்கு உஜுது என்பதே முற்றிலும் நிக்கிரஹஞ் செய்யப்பட்டிருக்கும்.

இவ்வும்மத்திலுள்ள காமில்களுக்கு இந்நிலையில் உஸ்வயே ஹஸனா' இருந்து வருகிறது. இந்த நிலையில்தான் மன்சூர் இப்னுல் ஹல்லாஜ் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் "நான்தான் நாயன்" என்றும், அபூயஜீதுல் புஸ்தாமி

ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் "நான் தூய்மை. எனது நிலை எவ்வளவு மகத்தானது" என்றும், அபூஸயீதினில் ஹர்ராஸ் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் "என் ஜுப்பாவுக்குள் அல்லாஹ்வைத் தவிர இல்லை" என்றும் கூறியுள்ளார்கள்.

## ஸூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 38

( ரசூலின் கை அல்லாஹ்வின் கைதானா ? ) பகுதி- 4

1 ) ஒரு முறை நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி ' வஸல்லம் நாங்கள் அவர்களிடம், இருந்து கொண்டிருந்த பொழுது "உங்களில் அந்நியர் இருக்கிறாரா?" என்று கேட்டார்கள். "இல்லை, யாரசூலல்லாஹு என்று கூறினோம்.

அப்பொழுது தலைவாசலை அடைக்குமாறு கட்டளையிட்டார்கள். பின்னர் "உங்களுடைய கைகளை உயர்த்தி, லா இலாஹ இல்லல்லாஹு என்று கூறுங்களெனக்" கூறினார்கள்.

நாங்கள் சிறிது நேரம் உயர்த்திக் கொண்டிருந்தோம். பின்னர் தங்களது கையை வைத்தார்கள். பின்னர். அல்ஹம்துலில்லாஹி, அல்லாஹும்ம இன்னக்க பஅஸ்தனீ பி ஹாதிஹில் கலிமத்தி வஅமர்த்தனீ பிஹா, வவஅத்தனீ அலைஹல் ஜன்னத்த இன்னக்க லாதுக்லிஃபுல் மீஆத் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. நாயனே! நிச்சயமாக நீ இந்த வார்த்தையைக் கொண்டு என்னை அனுப்பினாய். இன்னும் அதனைக் கொண்டு என்னை ஏவினாய். இன்னும் அதன் பேரில் எனக்கு சுவர்க்கத்தை வாக்களித்தாய். நிச்சயமாக நீ வாக்குறுதிக்கு மாறு செய்யமாட்டாய்) என்று கூறி,

"நற்செய்தி பெறுங்கள்: அல்லாஹ் நிச்சயமாக உங்களை மன்னித்து விட்டான்" என்று கூறினார்கள், என்று ஷத்தாதுப்னு அவ்ஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹு, உபாதத்துப்னுஸ்ஸாமித் ரலியல்லாஹு தஆலா அன்ஹு ஆகிய இருவரும் ரிவாயத்துச் செய்திருப்பதாக "தர்வீஹுல்குலூப்" என்னுங் கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது.

2) நாங்கள் ஏழு அல்லது எட்டு அல்லது ஒன்பது பேர்கள், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்திலிருந்து கொண்டிருந்தோம். "என்னுடைய ஹதீது என்னிடத்தில் பைஅத்துச் செய்வதற்குரிய அறுதிமானமாகும்" என்று கூறிய அவர்களது உபதேசத்தைக் கடைப்பிடித்தவர்களாக தங்கள் இருந்தோம்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எங்களை நோக்கி "நீங்கள் ரசூலுல்லாஹ்விடம் பைஅத்துச் செய்ய மாட்டீர்களா?' என்று கூறினார்கள். அப்பொழுது நாங்கள் எங்களது கரங்களை நீட்டி, "எதனைக் குறித்து தங்களிடம் நாங்கள் பைஅத்துச் செய்ய வேண்டும்?" என்று வினவினோம்.

அப்பொழுது "நீங்கள் அல்லாஹ்வை வணங்க தொழுகைகளை நிலை நிறுத்த நிலை நிறுத்த வேண்டும், நீங்கள் வழிபாடு செய்ய வேண்டும், ஒரு வார்த்தையை மெதுவாக இரகசியமாக கூறி, எதையும் ஜனங்களிடத்தில் நீங்கள் கேட்கலாகாது என்று கூறினார்கள், என்று அப்துர்ரஹ்மானிப்னு அவ்ஃபிப்னிமாலிக்கில் அஷ்ஜா ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் ரிவாயத்துச் செய்து விட்டு,

இதில் சம்பந்தப்பட்டிருந்தவர்கள் தம்முடைய சவுக்கு கீழே விழுந்தாலும் கூட, அதனை எடுத்துத் தருமாறு பிறரைக் கேட்டதை பின்னர் நான் பார்த்ததில்லை என்று கூறியுள்ளார் என்று முஸ்லிம், திர்மிதி, நஸயீ ஆகிய இமாம்கள் சிவாயத்துச் செய்திருப்பதாக, இமாமுல் முன்தரீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களால் இயற்றப்பட்ட "அத்தர்கீப் வத்தர்ஹீபு" என்னுங் கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது.

3) பெண்கள் நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில் ஒன்று கூடி, தங்களிடம் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கை கொடுத்து பைஅத்துச் செய்ய வேண்டும் என விரும்பினார்கள்.

அதற்கு நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "என் கையை பெண்ணின் கை தீண்டாது. என்றாலும், ஒரு பெண்ணிடத்தில் நான் கூறுவது நூறு பெண்களிடத்தில் கூறுவது போன்றாகும்" என்று கூறி மறுத்து விட்டார்கள்.

பின்னர் அவர்கள் வார்த்தையைக் கொண்டுதான் பைஅத்துச் செய்தார்கள். பின்னர் நாயகம் ஸல்லாஹ் அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்து தங்களுக்கு பரக்கத்துன் கிடைக்க வேண்டுமென்று அவர்கள் கோரினார்கள்.

அப்பொழுது, நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களது விரலை தண்ணீரில் நனைத்து அந்தத் தண்ணீரை அப்பெண்களிடம் கொடுத்தார்கள். அந்தத் தண்ணீரில் அவர்கள் தங்கள் கைகளை நனைத்துக் கொண்டனர்" என்று அஷ்ஷெய்கு

அப்துல் அஜீஸித் தைரீனிய்யி குத்திஸ ஸிர்ருஹு அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

மஹ்ரம் அல்லாத எந்தப் பெண்ணின் மீதும் நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது கைபடாத நிலையிலேயே, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதுமிருந்து வாழ்ந்து வஃபாத்தானார்கள் என்று தர்ஜுமத்து ஃபுத்துாஹாத் என்னுங் கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது.

**சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 39**



كنتُ كنْزَ اتَخْفِيًّا فَاحْبَبْتُ أَنْ أَعْرَفَ فَخَلَقْتُ الْخَلْقَ لِأُعْرَفَ

"நான் மறைந்த பொக்கிஷமாய் இருந்தேன் . நான் அறியப்படுவதை நாடினேன். ஆனதால் படைப்புகளைச் சிருஷ்டித்தேன், அறியப்படுவதற் காக" என்று அல்லாஹுத் தஆலா ஹதீதே குத்ஸியில் திருவுளமாகிறான்.

முதற் குறிப்பு ஹக்கீகத்தே முஹம்மதியா

இறைவனின் அனாதி நாட்டத்தின் அகமியத்தை நம் அறிவைக் கொண்டோ, சிந்தனையைக் கொண்டோ எத்திக்கொள்ள இயலாது. இது நம்முடைய நாட்டத்தைப் போன்றதென்று சொல்லவும் இயலாது. ஏனெனில், நம் நாட்டம் புதிதாய் உண்டானது; அதுவோ, (இறைவன் நாட்டம்) பூர்வீகமானது.

தான் அறியப்படுவதற்காகப் படைப்புகளைச் சிருஷ்டிக்க நாடியபோது அல்லாஹ் முதலாவதாகத் தன்பேரில் தானே ஒரு வெளிப்பாட்டை (விபரமில்லாத மொத்தமான வெளிப்பாடு என்னும் தஜல்லி) வெளியாக்கினான். இது "முதல் குறிப்பு"-"முதல் வெளிப்பாடு""

இரண்டாம் அந்தஸ்து "- ஹக்கீகத்தே முஹம்மதி "வஹதத்து" - "பர்ஜகே குப்ரா " என்று சொல்லப்படும். இது தெளிவின் வெளிப்பாடு. (புற வெளிப்பாடு அல்ல.)

இரண்டாம் குறிப்பு ஹக்கீகத்தே இன்ஸானியா

பின்னர் இறைவன் தன்மீது இன்னொரு வெளிப்பாட்டை விபரமாக வெளிப்படுத்தினான் இதில் சிருஷ்டிகள் ஒவ்வொன்றினதும் தனி விபரப் பாகுபாடும் உண்டாயிற்று.

ஒவ்வொன்றும் தன் தன் தத்துவத் திறமையுடன் நிலைத்து நின்றது. இதற்கு "இரண்டாங் குறிப்பு" - "மூன்றாம் அந்தஸ்து".“ ஹக்கீகத்தே இன்சானியா "-வாஹிதிய்யத்து என்னும் பெயர்களுண்டு. இவ்விரண்டு வெளிப்பாடுகளும் இறைவனின் உள்ளமையிலேயே வெளிப்பட்டவை; அப்புறப்பட்டு வெளியானவையல்ல.

இவைகளில், "முந்தியது - பிந்தியது' என்றதெல்லாம் தெளிவை ஒட்டியதே யன்றி காலத்தை ஒட்டியதல்ல. ஏனெனில், இறைவன் உள்ளமையில் கால செல்மானமில்லை. ஆன தால் இவ்வந்தஸ்துகளுக்கு " மராதிபே உஜூபி" (உள் அந்தஸ்துகள்) என்று பெயர் சொல்வார்கள்.

ஆலமெ அர்வாஹ்

பின் மூன்றாவதாக ஒரு வெளிப்பாட்டை வெளியாக்கினான். அதிலிருந்து ஆலமே அர்வாஹ் என் னும் ஆத்ம உலகம் வெளிப்பட்டது.இது கூட்டுக் கலப்பற்ற தனிமையானது; தாத்தின் மீதும் சூக்குமத்தின் மீதும் வெளியாகிறது. இங்கிருந்தே பிரபஞ்ச வெளிப்பாடுகளின் வரிசை ஆரம்பிக்கிறது.

அதாவது, ஹக்கின் ஜோதி ஆத்மீகத் தன்மையுடன் சேர்ந்து ஆத்ம உலகின் வடிவில் வெளியாயிற்று. இந்த முதல் புற வெளிப்பாடு

"ஜுஹூரே அவ்வல்" "முதல் தோற்றம்".“நான்காம் அந்தஸ்து" - "மூன்றாம் வெளிப்பாடு" - "மூன்றாம் குறிப்பு" என்றும் சொல்லப்படும்.

ஆலமெ மிதால்

பின்னர் ஒரு வெளிப்பாட்டை வெளியாக்கினான். இதிலிருந்து சூக்கும உலகம் தோன்றிற்று. அதாவது, உடைதல், கிழிதல், சேர்தல் என்ற சுபாவங்களுக்கு இடமில்லாத சூக்குமப் பொருள்கள் தோற்றமாயின. இதனை "இரண்டாம் தோற்றம்". “ஐந்தாம் அந்தஸ்து" - "நான்காம் வெளிப்பாடு - 'நான்காம் குறிப்பு" என்கிறோம். இதுவும் ஹக்கின் ஜோதியே. முன் ஹக்கீகத்தே இன்சானிய்யா என்னும் இரண்டாம் வெளிப்பாட்டில் நிலைத்து நின்ற தத்துவத் தன்மையுடன் சேர்ந்து இது சூக்கும் உலகின் வடிவில் தோன்றிற்று.

ஆலமெ அஜ்சாம்

பின்னர் இறைவன் இன்னொரு வெளிப்பாட்டை வெளியாக்கினான். இதிலிருந்து பூத உலகம் தோன்றிற்று. அதாவது, உடைதல், கிழிதல், சேர்தல் முதலிய சுபாவங்களையுடைய பஞ்ச பூதப் பொருள்கள் உண்டாயின. இது "மூன்றாம் தோற்றம்”-“ஆறாம் அந்தஸ்து”_“ஐந்தாம் வெளிப்பாடு" என்று பெயர் குறிப்பிடப்படுகிறது.

வானம், பூமி இன்னும் இவை இரண்டிலும் உள்ளவை அனைத்தும், இன்சானைத் தவிர, இப்பூத உலகில் சேர்ந்தவைகளாகும். இதுவும் மேல் சொல்லப்பட்ட ஹக்குடைய ஜோதியே. முன் இரண்டாம் வெளிப்பாட்டில் விபரப் பாகுபாட்டுடன் நிலைத்து நிற்கும் தத்துவங்களுடன் இந்த ஜோதி சேர்ந்து பூத உலகமாய் வெளியாயிற்று; அதாவது, வானம், பூமி, தாது வர்க்கம், தாவர வர்க்கம், ஜீவராசிகள் ஆகியவையாய்த் தோன்றின.

ஹஜ்ரத்தே இன்சான்

மறுபடியும் ஒரு வெளிப்பாட்டை வெளியாக்கினான். இதிலிருந்து “இன்ஸான்"- மனிதன் வெளியானான். இவனை எவ்வளவு வருணித்தாலும் மிகையாகாது. இவன் மேற்கூறிய உள் அந்தஸ்துகள், தத்துவார்த்தங்கள், ஜோதி, பூதங்கள் அனைத்தையும் தன்னில் சேகரித்துக் கொண்டுள்ளான். இது நான்காவது தோற்றம், ஏழாம் அந்தஸ்து,ஆறாம் வெளிப்பாடு, ஆறாம் குறிப்பு என்றாயிற்று. இதுவும் ஹக்கின் ஜோதியே.

இது முன் ஹக்கீகத்தே இன்ஸானியா என்ற இரண்டாம் குறிப்பில் நிலைத்து நின்ற இன்சானின் தத்துவத்துடன் சேர்ந்து மனு ஜன்ம ரூபமாய் வெளியாகி "ஆதம்" என்று திரு நாமம் கொண்டது; "குன்” (ஆகுக) என்று கூறி "பயக்கூன்” (ஆகிவிடுகிறது) என்று உரைத்துவந்தது; மாதிரிக் குறிப்பு இல்லாதிருந்து குறிப்பாகி வந்தது .

உதாரணம்

ஒரு கொற்றன் ஒரு வீடு தயாரிக்க நாடினால் முதலில் அவன் புத்தியில் விபரமின்றி மொத்தமாக "ஒரு வீடு" அமைகிறது. பின்னர் தன் திறமைக்குத் தக்கபடி அவ்வீட்டின் பாகங்களை முழு விபரத்துடன் (புத்தியிலேயே) அமைத்துக்கொள்ளுகிறான்.

பிறகு அவ்வமைப்பின் விவரப்படி காகிதத்தில் குறிப்பு வரைகிறான். அதற்குப் பின் கல்,மண். முதலிய சாமான்களைக்கொண்டு வரைந்த அக்குறிப்பின் பிரகாரம் வீட்டைக் கட்டி முடிக்கிறான். முன் விபரமின்றி மொத்தமாகப் புத்தியில் அமைந்த வீட்டின் அமைப்பை "லாஹூத்து" என்றும், விபரமான அமைப்பை "ஜபரூத்து” என்றும், காகிதத்தில் வரைந்த குறிப்பை “மலக்கூத்து” அல்லது சூக்கும உலகம் என்றும், கட்டப்பட்ட வீட்டை 'நாசூத்து' என்றும் கொள்க.

இனிக் கட்டடம், குறிப்பு, வீடு, நாட்டம், இன்னும் கட்டடக் கலைஞனுக்குத் தன் திறமையின் உணர்ச்சி - இவை யாது மில்லாதிருந்த முந்திய நிலைமையே "ஹாஹுத்" துக்கு உதாரணம் என்றுணர்க.

எச்சரிக்கை

இந்த என் உதாரணத்தின் மேல் மண் விழ ! என் யோஜனைக்கும், கற்பனைக்கும் அப்பாற்பட்டதல்லவோ தாத் என்னும் உள்ளமை!

س مثله شيئ

("அவனைப்போல் ஒரு வஸ்துவுமில்லை") என்பது அவன் பண்பு. அவனை அறிவதில் ஆதாரம், அத்தாட்சி,உபமானம், உதாரணம் எல்லாம் வீணே. இந்தப் பரவெளியில் ஆதாரங்கள் என்னும் குதிரைகளை ஓட்டுவதற்கு அறிவுக்குத்தான் சக்தி ஏது?

உபமான உபமேயமெல்லாம் புலன்களின் சிற்றறிவைக் கொண்டதாய் இருக்கும். உண்மையில் இது விளையாட்டுத்தனம்தான். ஆயினும், இதன் நோக்கம் அசல் நாட்டத்தின் திசையிலான ஒரு நுட்ப சைக்கினையேயாகும்.

இது கொண்டு உஷ்ணம் உண்டாகித் தேட்டத்துக்கு விருத்தியளிக்கிறது. முக்கியமாக உதாரணங்களும், ஆதாரங்களும் ஹக்கைத் தேடுபவர்களுக்கு பயனளிப்பவையாய் இருக்கின்றன. இதுவே அவர்களின் (தேட்டமுடைய சிஷ்யர்களின்) திறமைக்கும், பகுத்தறிவுக்கும் ஏற்ற முறையாக இருக்கிறது.

(இதற்காகவே உதாரணங்கள் கூறப்படுகின்றன. உண்மையிலே தாத்து- ஒப்புவ மையற்றதும், இணையற்றதுமாய் இருக்கிறது.)

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 40

( இம்மையிலேயே இறைவனைக் காண முடியும்.)

ஓர் அற்புதக் கதை

ஒரு ஞானி ஆரிபாகிய ஒரு வழிப்போக்கனைச் சந்தித்தார். "நீர் எங்கிருந்து வந்தீர் ? " என்று அவரிடம் கேட்டார். "நான் ஹாஹுத்திலிருந்து வந்திருக்கிறேன்" என்றார் வழிப்போக்கன்.

ஞானி : ஹாஹுத்திலிருந்து இதுவரையில் எத்தனை விடுதிகள் இருக்கின்றன?

வழிப்போக்கன்: ஹாஹுத்திலிருந்து - லாஹுத்து - பின்னர் ஜபருத்து பின்னர், மலக்கூத்து - அங்கிருந்து நாசூத்துக்கு வந்திருக்கிறேன் !

ஞானி : ஒவ்வொரு விடுதியினதும் விஷய விவரம் என்ன என்பதை விவரிப்பீராக!

வழிப்போக்கன் :ஹாஹுத்து என்பது ஓர் ஏகாந்த அந்தப்புரம். அங்கே அழகேசன் தன்னில் தானாய் மதங்கொண்டு தன்னை மறந்திருக்கிறான்.

லாஹுத்து ஓர் உறைவிடம். இதில் அழகேசன் தன் ஸ்வயம்புவான நிலைமையை அறிந்தவனாய்த் தன்னால் உண்டாக்கப்பட்ட மூல காரணங்களுடன் நிலைத்திருக்கிறான்.

ஜபரூத்து - அன்பின் சங்கிரகம். இங்கு அழகேசன் ஆவலுடன் தன் பேரிலேயே தான் காதல் கொண்டு அந்த அன்பில் சொக்கியிருக்கிறான்.

மலக்கூத்து - ஓர் அகநிலை. இவ்விடம் அழகேசன் தன் அழகின் மேன்மையையும் வடிவையுங் கண்டு களித்துத் தூய்மையைக் கொண்டும் ஒருமையைக் கொண்டும் தன்னைத் தானே வருணித்துக் கொண்டிருக்கிறான்.

நாசூத்து - ஒரு பகிரங்கக் கூட்டம். இதில் அழகேசன் எண்ணிறந்த தோற்றங்களாக ஆடையணிந்து தன்னை அலங்கரித்துக் கொண்டிருக்கிறான்.

(இவ்விபரங்களைச் செவியுற்றிருந்த) ஞானிக்கு ஆனந்தம் பொங்கி எழுந்தது. தன்னை மறந்தார். இப்போது வழிப்போனும் மறைந்தார்.

ஞானி சற்று நிதானித்து உணர்ச்சி பெற்றுச் சொல்லலானார்:

"இவ்விடங்களைப் பற்றியும், விடுதிகளைப் பற்றியும் விபரங்கூறியது யாரோ? ஆம், இவ்விபரப்படியுள்ள நிலைமைகள் அனைத்தும் என் உள்ளமையிலேயே இருக்கின்றன.

நான் சுகபோக இச்சையின் பக்கம் கவனம் செலுத்தும் போது அது என் நாசூத்து நிலையாய் இருக்கிறது.

நான் என் உள்ளமையைப் போற்றிப் புகழ்வதையே அலுவலாகக் கொண்டிருக்கும்போது எனது அச்செயல் மலக்கூத்து நிலையாய் இருக்கிறது.

நான் என்னைப்பற்றி மமதை (அகந்தை) கொள்ளும் போது என் காதலியுடன் நான் தனித்திருக்கும் என்னுடைய ஜபருத் நிலையாய் இருக்கிறது.

நான் உற்சாகத்துடன் " இன்னி- அனு" என்று எழும்பு, வதால் உண்டாக்கப்படுவனவெல்லாம் என் லாஹுத்து நிலையாய் இருக்கின்றன.

நான் என் சுய வட்சணங்களை என் உள்ளமையைக் கொண்டு இல்லாமலாக்கிக் கொள்ளும்போது என் நிலை தனித்த ஹாஹுத்து நிலையாய் இருக்கிறது." இப்படிச் சொல்லிக் கொண்டே மதங்கொண்டு தன்னை மறத்தார் அவர்.

யதார்த்தமாகவே மனிதனின் உண்மை நிலை இக்கதையில் உள்ளது போன்றதாகவே இருக்கிறது, ஏனெனில், மானிடன் சிருஷ்டிக்கப்பட்டது ஹக்கை அறிவதற்குத்தான். ஹக்கை எத்திக்கொண்டவன் அனைத்தையும் எத்திக்கொண்டான். ஹக்கை எத்திக்கொள்வதே (இரண்டறக் கலந்து விடுவதே) தீனின் அசல் என்றுணர்க.

அதன் கிளைகளே தப்ஸீராகவும், ஹதீதாகவும், பிக்ஹு ஆகவும், கொள்கைகளாகவும் இருக்கின்றன. மேலே கூறப்பட்டுள்ள அந்தஸ்துக்கள் அனைத்தும் மனிதனிலேயே உண்டாகி இருக்கின்றன.

இக் கண்கள் இறைவனைத் தரிசிப்பதற்காகவே இருக்கின்றன. தரிசனம் பெற்றவர்கள் இக் கண்களைக் கொண்டே பார்த்தார்கள். இக்கண்களைக் கொண்டு பார்க்காதவன் ஒருபோதும் இறைவனை பார்க்கவே இல்லை. அல்லாஹுத் தஆலா திருவுளமாகிறான்:

وَمَنْ كَانَ فِىْ هٰذِهٖۤ اَعْمٰى فَهُوَ فِى الْاٰخِرَةِ اَعْمٰى وَاَضَلُّ سَبِيْلًا

யார் இம்மையில் (நேர்வழியடையாக்) குருடனாக இருக்கிறானோ அவன் மறுமையிலும் (நற்பேற்றைக் காணாக்) குருடன்தான்; இன்னும், அவன் நேர்வழியில் மிகவும் தவறியவனாவான். (குர்ஆன் : 17:72)

இம்மையில் குருடராக இருப்பவர் மறுமையிலும் குருடராகவே இருப்பார் (17:73) என்ற திருக்குர்ஆன் வசனம். இம்மையில் யார் தம் அகக்கண் மூலம் அல்லாஹ்வை காணவில்லையோ அவர்கள் மறுமையிலும் காண முடியாது என்பதை விளக்குகிறது.

## **சூ:பி ஞானப் பொக்கிஷங்கள் 40**

( ஆத்மா தாத்தின் கண்ணாடி )

கல்பு, திருநாமங்கள் சிபாத்துக்களின் கண்ணாடி சிருஷ்டி கர்த்தாவாகிய அல்லாஹுத் தஆலா வின் "தாத்" (மூலகாரணத்)துக்கு ஆத்மா கண்ணாடியாய் இருப்பதுபோல் இறைவனின் திருநாமங்களுக்கும் வருணிப்புக்களுக்கும் அகம் கண்ணாடியாக

உள்ளது.

ஆத்மாவில் விரிவின்றி வித்தைப்போல் மொத்தமாய் உள்ளவை அனைத்தும் அகத்திலே விருக்ஷம்போல் விரிவானவையாய் உள்ளன. ஆனதால், அகமும் ஆத்மாவைப் போலவே எல்லையும் திசையும் அற்றதாயும், இடம் என்னும் கட்டுப்பாட்டுக்கு வசப்படாததாயும் இருக்கிறது.

அகத்தின் உள்ளமை * (அசல்) சூக்கும உலகத்தையும், அதன் சாய்கை (நிழல்) பூத உலகத்தையும் சேர்ந்தவை. அறிவு, நப்ஸ் இவைகளின் தத்துவங்களின் சேர்க்கையினால் சூக்கும உலகில் உள்ளவைகளின் கோலங்கள் சிருஷ்டிகளின் ரூபத்தில் வெளியாகிப் புலன்களின் வாயிலாக அறியப்படுகின்றன. அல்லாமல்

ரூபங்கள் அனைத்தும் யதார்த்தமான உள்ளமையற்ற (கானல் நீரைப் போன்ற)வை. ஆனதால், ஸ்தூல சிருஷ்டிகளை உள்ளமையற்ற கோலங்கள் (மாயை) என்றும், மன ஊசாட்டக் கோலங்களென்றும் சொல்கி றார்கள்.

ஆயினும், இவை பயனற்றவை என்று எண்ணவேண்டாம். இச்சிருஷ்டி கோலங்களில் தான் இறைவனுடைய அஸ்மா, சிபாத்து என்னும் திருநாமங்களின் ஆதாரங்களும், வர்ணனைகளும் தத்துவ வெளிப்பாடுகளும் வெளியாகின்றன.

இவைகளே,விளக்கமற்ற வெளிரங்கக் கண்ணோட்ட முடையோருக்குத் திரையாகவும், விளக்கமுள்ள அகக் கண்ணோட்டமுடையோருக்கு (மெஞ்ஞானி களுக்கு) மூலா கர்த்தாவின் தரிசனையடைவதற்கான துணையாகவும் இருக்கின்றன.

நகைகளின் மூலம் பொன்னையும், பாத்திரங்களின் மூலம் மண்ணையும், விருக்ஷத்தின் மூலம் வித்தையும், கிரணங்களின் மூலம் சூரியனையும் தெரிந்துகொள்வதுபோல் மெய்ஞானிகள் சிருஷ்டி கோலங்களின் மூலம் சிருஷ்டி கர்த்தாவின் உள்ளமையே (தாத்தை) தெளிந்தறிகிறார்கள்

## சூ:ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 41

( நப்ஸ் - அறிவு - கல்பு ஆகியவற்றின் இயல்புகள் )

பூத உலகச் சிருஷ்டிகள் தரிபட்டிருப்பதற்காக "நப்ஸ்" தாயின் ஸ்தானத்திலும், "அறிவு" தகப்பன் ஸ்தானத்திலும் இருக்கின்றன.

வஸ்துக்களின் பேரில் ஆசைக் கொள்வதே நப்ஸின் குணமானதால், உலக ஆசாபாசங்களை விருத்தி செய்யத்தான் நப்ஸ் முயற்சித்துக் கொண்டே இருக்கிறது. இம் முயற்சியில் வெற்றியடைந்தால், அகத்தையும் தன் வசப்படுத்திக்கொள்கிறது. நப்ஸின் இந்த நிலைமையே துக்கங்களுக்கும் துன்பங்களுக்கும் காரணமாகும்.

"அறிவு" வஸ்துக்களை மட்டும் கொண்டு திருப்தி அடைவதில்லை; உணர்தல், விளக்கம், தீர்க்க திருஷ்டி இவைகள் அறிவின் குணங்களாகும். ஆதலால் அது ஆராய்ச்சியையே தன் லக்ஷிய மாகக்கொண்டு, அகத்துக்கும் இன்பமளிக்கிறது. இது சுகத்துக்குக் காரணமாய் உள்ள நிலையாகும்.

ஆனால், சுகம் துக்கம் இவ்விரண்டு நிலைமைகளும் அகத்தின் லக்ஷியத்துக்குப் புறம்பானவை. இவ்விரண்டும் அகத்தைப் பஞ்சபூத உலகச் சிறையில் கட்டிப்போடும் விலங்குகளாகும். சுக துக்க மாயை யென்னும் இவ்விலங்குகளை விட்டும் வெளியேறி, விடுதலைபெறும் அகத்துக்கே நித்தியானந்தம் என்னும் மோட்சம் கிட்டும்.

அதாவது, ஆத்மாவுடன் ஏகரீதி பெற்று இறைவனின் தஜல்லியாத்து களாகிய அருள் காட்சிகளுக்குக் கண்ணாடியாய் தன் உள்ளமையில் ஹக்குடைய உள்ளமை பிரதிபலிக்கக் காணும். இந்தத் தானத்தில்தான் "அனல் ஹக்"- "இன்னீ அனல்லாஹ்" என்ற உண்மை மொழிகள் ஓலமிடப்படுகின்றன.

ஆகையால், புதை குழியைவிட நெருக்கமும், இருளும் அடைந்த தன் நிழலாகிய இந்தப் பூத உலகச் சிறையில் சிக்காமல் சுக துக்க பந்தபாசங்களை உடைத்து வெளியேறினவனே "பரிசுத்த ஆத்ம ரீதி" அருளைப் பெறுகிறான். இதுவே நித்தியானந்த சுவர்க்கமும் இறைவனின் தரிசனமும் ஆகும்.

"ஆத்மா" இவ்வுலகப் பாசத்தை வெறுக்கிறது. 'நப்ஸ்' இம்மையின் பந்தபாசத்தின்மீது காதல் கொண்டிருக்கிறது. "அகம்" (கல்பு) இவ்விரண்டுக்கும் மத்தியிலிருப்பதால் ஆத்மா, நப்ஸ் ஆகிய இரண்டில் எது பலமாகிறதோ அத்துடன் அகம் (கல்பு) கலந்துவிடுகிறது.

ஆகையால், இவ் விஷயங்களை அறிவதும், இவைகளின் குணங்களையும் லக்ஷணங்களையும் விளங்கிக் கொள்வதும் சாலிஹீன்களின் அடிப்படையான நேர்வழியாகும். இதுவே உண்மைச் சன்மார்க்கத்தின் (இஸ்லாமின்) லக்ஷியம்.

இவ் வழியில் நடத்தி வைக்கும் ஆசான்களாகிய சூபியாக்களின் கூட்டுறவும், அன்பும். அவர்கள் தரும் பயிற்சியுமின்றி இஸ்லாமின் லக்ஷியமாகிய மஃரிபத்தென்னும் மெஞ்ஞானம் உண்டாகாது.

**சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 42**

(ஜீவியத்தின் இருவகை )

ஜீவியம் இரண்டு வகைப்படும். உடல் சம்பந்தப்பட்ட மனு ஜீவியம் ஒன்று; அகம் சம்பந்தப்பட்ட மெஞ்ஞான ஜீவியம் மற்றொன்று. மனு ஜீவியம் ஸ்தூல சரீரத்தின் அழிவுடன் அழிந்து விடுகிறது.

كُلُّ نَفْسٍ ائِقَةُ الْمَوْتِ

"நப்ஸ்கள் அடங்கலும் மௌத்தின் (மரணத்தின்) ருசியை அனுபவிப்பவைகளாய் இருக்கின்றன" என்பது அல்லாஹ்வின் திரு வசனம்.

மெஞ்ஞான ஜீவியம் அகம் சம்பந்தப்பட்டது. அகம் ஆத்மீக ரீதி பெற்று வாழ்வதிலிருந்து மெஞ் ஞான ஜீவியம் உண்டாகிறது. இது மரணத்துக்குப் பின்னும் அழிவதில்லை. அல்லாஹ்வின் ஔலியாக்கள் இம் மெஞ்ஞான ஜீவியம் என்னும் ரூஹுல் குத்சைக் கொண்டே வாழ்கிறார்கள். அல்லாஹுத் தஆலா திருவுளமாகிறான்:

فَلَنُحْيِيَنَّهُ حَيوة طَيِّبَةً

"மேலும், நாம் அதனை (அகத்தை) பரிசுத்த ஜீவியத்தைக் கொண்டு பரிபாலிக்கிறோம்' என்று திருக்குர்ஆனில் கூறுகிறான்.

அல்லாஹுத் தஆலாவின் முடுகுதல் என்பது ஞானத் தெளிவைப் பொறுத்த விஷயம். தெளிவு அதிகரிப்பதற்கேற்ப முடுகுதலும் அதிகமாகும்.

மஃரிபத்து நித்திய ஜீவியமாய் இருக்கிறது :-

ஒரு நாள் ஹஜரத் அலி (ரலி ) நபிபெருமான் (ஸல்) அவர்களிடம் தம் வாழ்நாள் வீணாகாமல் காத்துக் கொள்வதற்கான ஒழுக்கத்தைக் காட்டி அருளும்படி கண்ணீருகுத்தவர்களாகக் கேட்ட போது,

நபிகள் பிரான் (ஸல்) அவர்களைப் பார்த்து, "தன்னை அறிவீர்கள் என்றால் உங்கள் வாழ்நாள் வீணாகாது. முடிவில் உங்களுக்கு அந்த ஞானம் உதவும்" எனப் பகர்ந்தார்கள்.

ஆகையால், சகோதரனே ! நீ இந்த வழியை மறந்திடாதே சூபியாக்களைக் கொண்டு நீ உன் "தன்னை"அறிந்துகொள்!

**சூ:.பி ஞானப் பொக்கிஷங்கள் 43**

( மனிதன் ஓர் ஆச்சரியமான மொத்தம்)




நபிபெருமான் (ஸல்) வரிசை பெற்றவர்களாய் இருப்பதன் மர்மம் :-

நபிபெருமான் (ஸல்) ஹஜரத் அபூபக்கர் ஸித்தீக்(ரலி) அவர்களிடம், "நான் தாங்கள் யாவரிலும் வரிசைப் பெற்றவனாக இருப்பது அதிக நோன்பினாலும், தொழுகையினாலும் அல்ல. ஆனால், என் உள்ளத்தில் இறக்கப்பட்டிருக்கும் ஒரு ரகஸியத்தின் பொருட்டால் " என்று திருவுளமானார்கள்.

அல்லாஹுத் தஆலா திருவுளமாகிறான்:

يلقى الروحَ مِنْ أَمْرِهِ عَلَى مَنْ يَشَاءُ مِنْ عِبَادِهِ

அதாவது, ரகஸியத்தைத் தன் கட்டளையால் தன் அடியார்களில் தான் நாடியவர்கள் மீது இறக்கிவைக்கிறான்.

இறைவனின் ரகசியம் :-

நாயகம் (ஸல்) அவர்கள் கொணர்ந்த ரகசியம் முக்கியஸ்தர்களாகிய தேர்ந்த மகான்களின் உள்ளத்தில் உதிப்பாக்கப்படுவது உண்டு. அவர்களின் கூட்டம் பதினான்கு கான்வாதாக்களாகவும், நான்கு

பீர்களாகவும் பிரபல்யமாகி ஞானத்துறையில் வழிகாட்டிகளாக உதவி புரிகிறார்கள்.

இவ்வித ரகசிய அருள்பெற்ற ஞானகுரு நாதர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்துக் குருவாக- ஒப்புக்கொண்டு அவர்களிடம் அடைக்கலம் புகுந்து ஞானவழியில் மோகங் கொண்டு தேடுபவர்களுக்கு அது அருளப்படுகிறது.

புகழும் ஸ்தோத்திரமும் தாத்தென்னும் மூல காரண

(அல்லாஹ்)த்துக்காகவேதான்.அவன் எப்படிப்பட்டவனாயின்...,

“அன" வென்னும் 'ஹக்கீகத்தே முஹம்மதியா"வாகிய ரகசியத்தை

“ஜபரூத்” தென்னும் ஆத்மீகத்திலும்,

அதனை "மலக்கூத்" தென்னும் சூக்குமத்திலும்,

அந்த சூக்ஷம சரீரமாகிய "ரூஹுல் குத்சி"யை " நாசூத்" தென்னும் ஸ்தூல ஜடலத்திலும் அமைத்து வைத்தான்.

இவைகளனைத்தும் இன்சானுக்குள்ளே அடங்கியுள்ளன. இவ்விதம் அமைத்து வைத்த அல்லாஹு ஜல்ல ஜலாலுவுக்கே புகழ் அடங்கலும் உரியது.

ஹஜ்ரத் அலி கர்ரமல்லாஹு அவர்கள் தன் புத்திரருக்குச் செய்த ஞான போதனை -

ஹஜ்ரத் அலி(ரலி) தம்முடைய கண்மணியாகிய புத்திரரை நோக்கிச் சொன்னார்கள்:

"மகனே, உன்னிலே உன்னை நீ சிந்தனை செய்வது உனக்குப் போதுமானதாகும். அதாவது, நீ இறைவனின் தரிசனம் பெற வேண்டுமானால், உன்னுள் சிந்தனை செய்.

இறைவன் உன்னிலேயே இருக்கிறான்; உன்னைவிட் டுப் பிரிந்தில்லை. ஏனெனில், உன்னை விட்டு நீங்கியது ஒன்றுமில்லை.

உன்னுள்ளே ஒரு வியாதி (மனக் கற்பனைகள்) உள்ளது. நீ அதை அறியவில்லை. மருந்தும் உன்னிடமே உள்ளது; நீ அதைப் பார்ப்பதில்லை. உன் பிணியும் அதன் மருந்தும் உன்னிலேயே உள்ளன.

நீ உன்னை ஒரு சிறு உடல் என்று எண்ணுகிறாய். ஆனால், உண்மையில் உன்னிலே ஒரு பெரிய உலகம் புகுத்தப்பட்டிருக்கிறது.

பார்வையில் தோன்றுவதெல்லாம் வெறும் கற்பனையாகும். பெரிய உலகம் உன்னுள்ளேயே இருக்கிறது. ஒரு வஸ்துவும் உன்னைவிட்டும் நீங்கியில்லை. இங்கு "மொத்தம்"--"பிரிவினை" என்ற பாகுபாடுதான் (வித்தியாசம்). ஆக "மனிதன் ஓர் ஆச்சரியமான மொத்தம்."

பொதுவாக அண்டம் என்றால் இந்த உலகத்தையும், பிண்டம் என்றால் நமது உடலையும் கூறுவார்கள்.

ஆனால் அண்டத்தில் அண்டம், அண்டத்தில் பிண்டம், பிண்டத்தில் அண்டம், பிண்டத்தில் பிண்டம் உள்ளன.

நமது உடலில் பிண்டத்தில் பிண்டம் நமது கழுத்துக்கு கீழ் உள்ள பகுதி ஆகும். பிண்டத்தில் அண்டம் கழுத்துக்கு மேல் உள்ள தலை பகுதி ஆகும். அண்டத்திற்கும் பிண்டதிற்கும் இடையில் கண்டம் உள்ளது. அதே போல் அண்டத்தில் அண்டம் ஆகாயம் ஆகும்.

அண்டத்தில் பிண்டம் நமது பூமி மற்ற சூரிய, சந்திர, நட்சத்திரங்கள் ஆகும். அந்த ஆகாயத்தில் சூரியனைப் போல் பல்லாயிரக்கணக்கான சூரியர்கள் உள்ளார்கள். இருப்பினும் வானம் என்றும் உஷ்ணதினாலோ குளிர்சியின்னாலோ பாதிக்கப்படுவதில்லை.

அதுபோல் நமது பிண்டத்தில் உள்ள அண்டத்தில் ஆயிரம் சூரியர்களின் உஷ்ணத்தை தாங்கக் கூடிய சக்தி உள்ளது.

மேலும் நமது ஆன்மா ஆயிரம் கோடி சூரிய பிரகாசம் உடையது. அது அசுத்த மாயா காரிய அணுக்களால், துவேஷங்களால் திரையாக மறைக்கப்பட்டு இருக்கிறது.

அந்த மாய காரிய அணுக்கள் சுத்த அணுக்களாக மாறுவதற்கும், துவேஷங்கள் நீங்குவதற்கும் அதாவது திரை விலகுவதற்கும் உடலை அதி உஷ்ணமாக மாற்ற வேண்டியது மிக முக்கியம் என்று நமது ஞானப் பெரியார்கள் கூறி இருக்கிறார்கள்.

**சூ:ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 44**

( நுக்கத்தா ) -அண்டங்கள் முழுவதும் அணுக்கள் ; ஒவ்வொரு அணுக்களுக்குள்ளேயும் அண்டங்கள்.

ذٰلِكَ الْكِتٰبُ لَا رَيْبَ فِيْهِ

(அந்த வேதம், அதில் சந்தேகமில்லை-குர்ஆன் )

உண்மையில் அந்த வேதமாவது மனிதனின் உள்ளமையே.

كُلٌّ فِي كِتَابٍ مُبِين

அடங்கலும் விளக்கமான (உள்ளமை) வேதத்தில் இருக்கிறது !

இனி மனிதர்களுக்கெல்லாம் மேலானவர்களும் பரிபூரண மனிதருமாகிய நாயகம் (ஸல்) அவர்கள் பேரில் இறக்கப்பட்ட அந்த வேதம் மனிதனின் உள்ளமையின் புகழை உரைப்பதாயும், அதனுடைய மொத்தமான விரிவான நிலைமைகளை விவரிப்பதாயுமிருக்கிறது. அதாவது, தௌஹீதையும் தப்ஸீலையும் விளக்கி உரைக்கிறது.

(வேதத்தின் முதல் அத்தியாயமாகிய) சூரத்து பாத்திஹா "உம்முல் கித்தாப்" (வேதத்தின் தாய்) ஆக இருக்கிறது. ஏனெனில், வேதத்தில் விரிவாக இருப்பவை சூரத்து பாத்திஹாவில் மொத்தமாகவுள்ளன.

அஃதேபோல் பாத்திஹா பிஸ்மில்லாஹ்விலும், பிஸ்மில்லாஹ் “பே" என்னும் அட்சரத்திலும்,“பே” அதன் நுக்கத்தாவிலும் (புள்ளியிலும்) அடங்கியுள்ளன.

பிஸ்மில்லாஹ்வின் பேயுடைய நுக்கத்தா வானம், பூமி, இன்னும் அடங்கலும் உண்டாவதற்குக் காரணமாகிய "தாத்” தென்னும் உள்ளமையின் நுக்கத்தாவின் பக்கம் குறிப்பிடுவதாக இருக்கிறது.

"நுபுவ்வத்" (தீர்க்கதரிசனத்)தின் நுணுக்கமும் அதுவே ; விலாயத் என்னும் மஃரிபத்தின் நுணுக்ககமும் அதுவே. அதிசயமாகிய ரகஸியத்தை அல்லாஹ் நுணுக்கத்தில் அமைத்துள்ளான்.

அலிப் அல்லாஹ் சே ஹோகா நஜாரா

பேகே நுக்தேமே ஹே பே(ஹ்)து ஸாரா.

அலிப் (இன்சான்) அல்லாஹ்வின் காட்சியளிக்கும்; ரகசிய மடங்கலும் பேயின் நுக்கத்தாவில் அடங்கியுள்ளது.

கற்பித்தார் கற்பித்தார் கசகசாவின் பிரமாணம்

கற்பித்தாரே யெனக்குக் கற்பித்தார்-கற்பித்தார்

கைச்சீட்டுந் தந்தாரே காசினி யெல்லாமான

மைச்சீட்டுக் குள்ளே மயம்.

(காட்டானை ஷைகு ஒலியுல்லாஹ் அவர்களின் வெண்பா)

"இறைவன் உன் உயிர் நரம்பைவிட அதிகம் அணுகி இருக்க, நீ உன் சிந்தனையின் அம்பைத் தூரத்தில் எய்கிறாயோ?" என்றார்கள் மௌலானா ரூமி (ரஹ்).

"பார் பார்! (சிந்தித்துப்பார்!) இரண்டற (பார்ப்பவனும் பார்க்கப்படுபவனும்) கலந்து ஒன்றாய்ப் பார்!" என்பது மூத்தோர்களின் உபதேசம்.

வட்ட வடிவினில் வளைந்து வெள்ளை

வடிவுதுலங்கும் விரிவாக

மட்டிலடங்கா ஒளிவு

மகாமன் மஹமூதாகிய கண்ணாடி

விட்ட நிறச் சுருமாவதின் நீலம்

விளங்கிய வேதப் பொருளாதி

திட்டமிகுந்த அரூப சுரூப

தியானம் மறவாதே !

"பார் பார்! (சிந்தித்துப்பார்!) இரண்டற (பார்ப்பவனும் பார்க்கப்படுபவனும்) கலந்து ஒன்றாய்ப் பார்!"

وَمَا تَكُوْنُ فِىْ شَاْنٍ وَّمَا تَتْلُوْا مِنْهُ مِنْ قُرْاٰنٍ وَّلَا تَعْمَلُوْنَ مِنْ عَمَلٍ اِلَّا كُنَّا عَلَيْكُمْ شُهُوْدًا اِذْ تُفِيْضُوْنَ فِيْهِ وَمَا يَعْزُبُ عَنْ رَّبِّكَ مِنْ مِّثْقَالِ ذَرَّةٍ فِى الْاَرْضِ وَلَا فِى

"நீங்கள் எந்த நிலையில் இருந்தாலும், “குர்ஆனிலிருந்து நீங்கள் எதை ஓதினாலும், நீங்கள் எந்தக் காரியத்தை செய்தாலும், நீங்கள் அவற்றில் ஈடுபட்டிருக்கும்போது நாம் கவனிக்காமல் இருப்பதில்லை" (குர்ஆன் : 10:61)

பார்ப்பவனும் பார்க்கப்படுபவனும் பற்றி விஞ்ஞானம் வித்தியாசமாக சிந்திக்க சொல்கிறது ! அதைப்பற்றி சொல்றேன்.

எங்கள் திருநெல்வேலி மாவட்ட அறிவியல் மையத்திற்கு பேரன் பேத்திகளோடு போய் இருந்தேன். நிறைய விஞ்ஞான யுக்திகளின் பயன்பாட்டை அழகாக செயல்முறைப்படுத்தி இருக்கிறார்கள். அடுத்து, விஞ்ஞான சினிமா ஷோ பார்த்தேன். படம் பார்ப்பதற்கு முன்னாடி 3D கண்ணாடியை கண்ணுக்கு மாட்டி விடுகிறார்கள்.

அமேசான் காட்டில் அனகோன்டா பாம்பை சாதாரணமாக காட்டிக்கொண்டே வந்தார்கள். திடீரென பாம்பு நம்மை நோக்கி சீறியதும் எல்லோரும் தங்களை அறியாமலே ஷோபாவில் பின்னாடி தள்ளப்பட்டோம்.

அப்போதுதான் குவாண்டம் தியரிக்கு விளக்கம் கிடைத்தது.இப்போது நீங்கள் இந்த கட்டுரையை படிக்கிறீர்கள். இப்படி படிப்பதால் உங்களுக்கும் எனக்கும் ஒரு விதமான தொடர்பு ஏற்படுகிறது. படிக்கும் செயல் மற்றவர்களையோ, நம்முடைய சுற்றுப்புறத்தையோ எந்த விதத்திலும் பாதிப்பதில்லை இதுதானே பகுத்தறிவு !

பதிலாக 'நீங்கள் இந்தக் கட்டுரையை படிப்பது இந்த பிரபஞ்சம் முழுவதையும் ஏதோ ஒரு வகையில் மாற்றி விடுகிறது' என்று சொன்னால், அது நம் பகுத்தறிவுக்கு ஒத்து வராது. ஆனால் நவீன விஞ்ஞானம் அதை நிரூபிக்கிறது. எந்த ஒரு தனிப்பட்ட செயலும் பிரபஞ்சத்தை பாதிக்கிறது என்கிறது.

ரூத்தர்ஃபோர்டு அணுக்களை அதைவிட நுட்பமான ஆல்ஃபா துகள்களால் துளைத்துப் பார்த்தபோது அணுக்கள் உள்ளே வெட்ட வெளியாக இருப்பதைக் கண்டு பிரமித்துப் போனார். அண்டத்திலிருக்கும் வெட்ட வெளியைப் போல் அணுவிற்குள்ளும் வெட்டவெளி !

அணு மையத்தில் ஒரு சில புரோட்டான் துகள்களும் அவைகளைச் சுற்றி சில எலக்ட்ரான்களும் இருப்பதை பார்த்து திகைத்துப் போனார். அதுவரை அணு என்பது பிரிக்க முடியாத திடப்பொருள் என்று நம்பி வந்தவர்களுக்கு அதனுள் காலியாக இருப்பதே கண்டு ஆச்சரியப்பட்டு போனார்கள்.

அணுவை ஒரு சர்க்கஸ் கூடார அளவுக்குப் பெரிதுப்படுத்தினால்,அதன் உட்கரு சின்ன பந்து அளவுக்கு தெரியலாம் ! அண்டங்கள் பூராவும் அணுக்கள்தான். அந்த அணுக்களுக்குள் பூராவும் வெட்ட வெளிதான்.

அண்டங்கள் முழுவதும் அணுக்கள் ; ஒவ்வொரு அணுக்களுக்குள்ளேயும் அண்டங்கள்.

இந்த அணுக்களுக்குள் இருக்கும் அணு துகள்களுக்கு இரண்டு எதிர் நிலைகள் உண்டு. இந்த துகள்களை நாம் எந்த விதத்தில் பார்க்கிறோமோ அதற்கு ஏற்ப இவைகளின் இயற்கை வேறுபடும் சில சமயம் அவை துகள்கள்... சில சமயம் அவைகள் அலைகள்... துல்லியமாகச் சொல்லுங்கள் அவை துகளா ? அலையா ? என்று சொல்ல முடியாது.

இந்த இரட்டை நிலை ஒளிக்கும் உண்டு என்று நிரூபித்திருக்கிறார்கள் ஒளியும் அலைகளாக பரவுகிறது.... சில சமயம் துகள்களாக....

இதனால் அணு அளவில் செய்யப்படும் பரிசோதனைகளால் பார்ப்பவனும் பார்க்கப்படும் பொருளும் பாதிப்படைகிறது ! என்கிறது.

பிஸ்மில்லாஹ்வின் பேயுடைய நுக்கத்தா வானம், பூமி, இன்னும் அடங்கலும் உண்டாவதற்குக் காரணமாகிய "தாத்” தென்னும் உள்ளமையின் நுக்கத்தாவின் பக்கம் குறிப்பிடுவதாக ஆன்மிகம் சொல்வதிலும் அறிவியல் உண்மை இருக்கிறது

**சூ:.பி ஞானப் பொக்கிஷங்கள் 45**

( நான் மனிதனின் ரகசியம் )

மூமீன் ஒருவர் தன்னுடைய முகத்தை நிலைக் கண்ணாடியில் பார்த்து வெம்பிவெம்பி அழுதவராக,

"இறைவனே, நீ என்னைப் படைத்ததில் உன்னுடைய நோக்கம் யாதோ?" என்று புலம்பினார்.

அக் கண்ணாடியிலிருந்து, "என்னுடைய அன்பு உன் உள்ளத்தில் தரிபட்டிருப்பதே உன்னை நான் படைத்ததன் நோக்கம்" என்று சப்தம் வந்தது.

இதிலுள்ள நுட்பங்கள் மெஞ்ஞான ரகசியங்கள் பொதிந்தவையாகும். இவ்விதமான ஞான ரகசிய மூல பாஷையை புத்தகங்களிலே விவரித்து எழுத (ஷரீ அத்தின்) அனுமதி கிடையாது. ஏனென்றால், ரகசியங்களை வெளிப்படுத்துவது நீதிநெறியை நிராகரிப்பதாகும் (குப்ராகும்).

இந்த மறைவான ரகசியம் மெஞ்ஞானிகளின் உள்ளத்தில் வெளியாகும் ஹக்கீகத்தே முஹம்மதியாவாகிய இறைவனின் ரகஸியமாகும்.

நபிநாயகம் (ஸல்) அவர்கள் திருவுளமானார்கள்: "சந்தேகமின்றி சில (ஞானக்) கல்விகள் மறை பொருளின் ரூபத்தில் மறைத்திருக்கின்றன. அவைகளை இறைவனைத் தெரிந்துகொண்ட ஆரிபீன்களையன்றி (மற்றவர்கள்) அறியார். பின்னர் இக்கல்விகளை அவர்கள் வெளிப்படுத்தினால் அதனை அல்லாஹ்வைத் தெரிந்துகொள்ளாமல் பொடுபோக்காய் இருப்பவர்களையன்றி மற்றோர் நிராகரிப்பதில்லை."

எனவே, நீ அடையவேண்டியவை யாவும் உன் உள்ளமையிலேயே உள்ளன. இறைவன் உன்னில் உள்ளான்; உன்னை விட்டும் நீங்கியில்லை.

இறைவனே ! நீ எதற்காகப் படைப்பினங்களைப் படைத்தாய் ?

என்று நபி தாவூத் அலை அவர்கள் கேட்டார்கள்

நீ இருப்பது என்னால் வெளிப்பட்டது.நான் இருப்பது உன்னால் உண்டாக்கப்பட்டது. என்னாலேயன்றி நீ வெளியாக்கப்பட்டிருக்க மாட்டாய் உன்னாலேயன்றி நான் உண்டாக்கப்பட்டிருக்க மாட்டேன்

" மனிதன் என் ரகசியம்

நான் மனிதனின் ரகசியம்"

அல் இன்ஸானு சிர்ரீ வஅன சிர்ருஹு

ஹஜரத் ரூமி (ரஹ்) அவர்கள் ஓரிடத்தில் சொல்கிறார்கள், "பூமியிலும் வானத்திலும் நீங்கள் எவ்வளவு தேடித் திரிவீர்கள்? என் சட்டைக்குள்ளே அல்லாஹ்வைத் தவிர வேறொன்றுமில்லை" என்று.

ஆனால், இந்த ரகசிய அவசியமான விஷயங்கள் இறைவனின் உள்ளமை வர்ணனைகளுடையவும், ரசூல் (ஸல்) அவர்களுடையவும் ரகசியமாய் இருக்கின்றன. "தனஸ்ஸுலாத்" (இறங்கும் வரிசை) என்ற ஞான வரிசையை நன்கு விளங்காமல் இந்த ரகசியத்தின் தெளிவு பெறுவது அரிது. இந்த வரிசை விவரத்தை அறியாத சிலர் இது

மார்க்கத்துக்கு முரணானது என்று உளறுகிறார்கள்.

ஆயினும்,

مَنْ يُرِدِ اللَّهُ بِهِ خَيْرًا يُفَقِّهْهُ فِي الدِّينِ

"இறைவன் தான் நாடியவர்களுக்கு மார்க்கத்தில் விளக்கம்

தந்தருள்கிறான்."

## சூ:.பி ஞானப் பொக்கிஷங்கள் 46

( உபூதியத், ருபூபியத் )

வாய் மந்திரம் சுலூக் என்னும் ஞானாப்பியாசம் அல்ல :

சிலர் (வாயளவில்) மந்திரம் ஜபிப்பதுவே ஞான நெறிமுறை நடப்பு என்பார்கள். இது அனைத்தும் முறையாகாது. அவ்வழியில் நடந்து செல்லாதவர் பிறரை எவ்விதம் நடத்தாட்ட வியலும்?

தனஸ்ஸுலாத்தின் விவரமறியாதவர் ஏழு கோணங்களின் மன்னாதி மன்னராயினும் சரி, அல்லது அற்புதம் விளைவிப்பவராயினும் சரி, கீழ் நிலையில் கிடப்பவரேயாவார்.

ஹஜரத் ஜுனைத் பக்தாதி (ரஹ்) சொல்கிறார்கள்:

“அல்லாஹுத் தஆலா இரண்டு விஷயங்களைத் தன் அடியார்கள் அறிந்துகொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கிறான். ஒன்று 'உபூதியத் (அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு முழுதும் கீழ்ப் படிந்து அடைக்கலம் புகுந்து, தான் அல்லாஹ்வின் அடியான் என்றறிதல்);

இரண்டாவது 'ருபூபியத்' (அல்லாஹுத் தஆலா சிருஷ்டிகளைப் பரிபாலிக்கும் தன்மை) என்னும் பரிபாலனையின் அறிவு. இவ் விரண்டு வகை ஞானங்களையன்றி மற்ற அறிவுகளெல்லாம் மனிதனின் நப்ஸின் இன்பத்துக்காக உள்ளவை.

தான் இறைவனால் பரிபாலிக்கப்படும் அடியான் என்னும் தன்னிலைமையை உணர்தல், இறைவன் தன்னைப் பரிபாலிக்கும் முறையை உணர்தல் ஆகிய இவ்விரண்டு விதக் கல்விகளைப் பெற்றவர்களுக்குத்தான் இறைவனை அறியும் ஆசை யுண்டாகும்.

இவ்வாசை உடையவர்களையே மனிதர்களாகக் கருதுங்கள். ஆசை கொண்டு இறைவனை எந்த அளவுக்கு அறிவார்களோ அதற்குத் தக்கபடியே அவர்களின் மறுமை வாழ்க்கையின் நிலைமை இருக்கும்.

## சூ:.பி ஞானப் பொக்கிஷங்கள் 46

( ஆலமீன் - உலகங்கள் )



'ஆலம் ' என்றால் உலகம். 'ஆலமீன் ' என்றால் உலகங்கள். அண்ட கோளங்கள் , நட்சத்திர மண்டலங்கள் , நெபுலாக்கள் , விண்மீன் தொகுதிகள் என்றெல்லாம் நவீன விஞ்ஞானத்தில் கருத்து கொள்ளப்படுகிறது .

ஆனால் மார்க்க அறிஞர்கள் ஆலத்தை கீழ்க்கண்டவாறு பிரித்துள்ளார்கள்

1) ஆலமுல் அர்வாஹ் - இது ஆன்மாக்களின் உலகம்

2) ஆலமுல் ஹல்க் - உயிர்கள் வாழும் இப்பூவுலகம்

3) ஆலமுல் பகீ - நிலையான (மறுமை) உலகம்

4) ஆலமுல் ஸமா - மிகவும் உன்னதமான உலகம்

5) ஆலம் ஷஹாதா - கண்களுக்கு தோன்றும் உலகம் .இவை கண்களுக்குத் தோன்றும் சூரியன் , சந்திரன், கிரகங்கள் , துணை கோள்கள் ஆகியவற்றைக் குறிக்கும்.இதனை ஆலமுல் முல்க் என்றும் , ஆலமுல் அஜ்ஸாம் என்றும் ஆலமுல் மானீ என்றும் கூறுவர்

6 ) ஆலமுல் கைப் - கண்களுக்கு தோன்றா சூட்சும உலகம்

7) ஆலமுல் மஃகூல் - அறிவுள்ள உலகம்

8 ) ஆலமுல் இன்ஸான் - மனித உலகம் இதில் உன்னத நிலை பெற்றோர் "இன்ஸானெகாமில் ( சம்பூர்ண மனிதர்) ஆகின்றனர்

ஆனால் ஞானிகளோ ஆலத்தை நான்கு விதமாக பிரித்து உள்ளார்கள்

1) ஆலமுல் நாஸூத் - இப்போதைய உலகம்

2) ஆலமுல் மலக்கூத் - வானவர்களின் உலகம் .இதில் ஆலமுல் மிதால் என்றும் ஆலமுல் கைப் என்றும் கூறுவர்

3) ஆலமுல் ஜப்ரூத் - சக்தியின் உலகம் ; ஆன்ம உலகம்

4) ஆலமுல் வாஹூத் - இறைவனில் தோய்ந்துவிடும் உலகம் .

அனைத்து ஆலங்களின் முகடு "அர்ஷ்" என்றும் , அதன் அடித்தளம் "தஹ்ததரா" என்றும் அர்ஷுக்கு மேலேயும் தஹ்ததராவுக்குக் கீழேயும் என்ன இருக்கிறது ? என்பது உங்களுக்கும் எனக்கும் கேள்வியாக இருக்கலாம்

பதில் : அல்லாஹ் ஒருவனே அறிவான் என்று கூறப்படுகிறது

"அல்லாஹ் ஒருவனே அறிவான் "என்பது நம்மின் இயலாத் தன்மையை குறிக்கிறது. அதாவது அறியப்படும் உண்மையைப் பற்றி ஞானத்தின் விஸ்தீரத்தின் பரப்புக்கு நம் மூளையின் பரப்பு குறைவானது .

'உண்மை' என்பது வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டது.

'ஞானம்' என்பது புலனறிவுக்கு அப்பாற்பட்டது.

சுருக்கமாக சொல்வதென்றால் அதற்குரிய ஒரே தீர்வுதான் "அல்லாஹ் ஒருவனே அறிவான் " என்பது

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 47

( ஜடமும், அதைச் சூழ இருப்பதும் ஒன்றே )

ஜடம் என்பது நீளம், அகலம் , கனம், ஆகிய முப்பண்புகளையுடையது எதுவோ அதையே நாம் ஜடம், பௌதீகம், ஸ்தூலம் என்று கூறுகிறோம். இந்த ஜடத்தை நமது எல்லாப் புலனுறுப்புக்கள் வாயிலாகவும் நம்மால் அறிய முடியும். திட , திரவம், வாயு ஆகிய மூன்றும் ஜடத்தின் மூன்று நிலைகளே (மர்த்தபாக்களே).

இறைவன் ஜடமல்லாதவன் என்றோர் நம்பிக்கை உலக மக்கள் எல்லோரிடத்திலும் உண்டு. இந்த நம்பிக்கை நமது முன்னோரால் ஆதாரபூர்வமாய் உறுதிப்படுத்தப்பட்ட ஒன்றாகும். ஆரிபீன்களான நல்லடியார்களின் ஆதாரத்தோடுள்ள இக்கூற்றை இன்றுள்ள மிகப்பெரும்பாலான மக்கள் தவறாக விளங்கிக்கொண்டு, தவறான விசுவாசத்திலேயே உறுதியடைந்து கொண்டும் இருக்கிறார்கள் எப்படியென்றால்,

ஜடம் என்பது அல்லாஹ்வை விட்டும் வேறானதாய், அல்லாஹ் அல்லாததாய் இருப்பதால் ஜடத்தை அல்லாஹ் என்று கூறக்கூடாதென்பது பாமரமனிதனின் விளக்கமாகும். முஸ்ரிக்குகளின் கொள்கை இதுவே.

ஜடம் என்பது வெறும் தோற்றப்பாடாய்ப் பொருள் அல்லாத ஹுரூரா (மாயையாய்) இருப்பதால், அல்லாஹ்வை ஜடம் என்று கூறக்கூடாது என்பது ஆரிபீன்களின் வாதமாகும். ஜடம் என்று ஒன்றில்லை என்பதே இவர்களின் முடிவு. இந்த ஆரிபீன்கள் கூறும் ஆதாரத்தோடுள்ள தீர்ப்பையே இன்றைய விஞ்ஞான உலகம் ஏற்றுக் கொண்டிருக்கிறது !

எனினும் ஆரிபீன்களுக்கும் விஞ்ஞானிகளுக்குமிடையில் ஓர் வேற்றுமை தென்படுகிறது. விஞ்ஞானம் ''மஃகூல்" (அறிவுள்ள உலகம்) என்ற யுக்தியை மட்டுமே ஆதாரமாய்க் கொண்டுள்ளது.

ஆரிபீன்களோ "மஃகூல்" ( அறிவுள்ள உலகம் ) என்ற யுக்தியையும் "மன்கூல்" (சுருதிப் பிரமாணங்கள் ) என்ற வேதசுருதிகளையும் ஆதாரங்களாய் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

மேலும் மஹ்கூல் மன்கூல்களின்படி தன்மை மட்டுமே உண்டென்று ஆரிபீன்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் விஞ்ஞானம் தன்மை மட்டுமே உண்டென்பதை இதுவரை அறிந்த கொண்டிருப்பதாய்த் தென்படவில்லை.

யுக்தியை மட்டும் ஆதாரமாய்க்கொண்ட விஞ்ஞானம் சுருதியையும் ஆதாரமாய் எடுத்துக்கொண்டால் நிச்சயமாக அத்தனை விஞ்ஞானிகளும் நல்லடியார்களாகவே மாறிவிடுவார்களென்பது எனது நம்பிக்கை.

விஞ்ஞானத்திற்கு வருவோம்

ஐன்ஸ்டைனின் 'பொதுப்பட்ட ரிலேட்டிவிட்டி சித்தாந்தம்' இன்னும் பிரம்மாண்டமான சிந்தனை வடிவம் பெற்றது. 'கிராவிட்டேஷன்' என்று சொல்லப்படும், எல்லா ஜடப்பொருள்களுக்கும் இருக்கும் ஈர்ப்பு சக்தியின் ஆதார குணத்தை, இயற்கையை அவர் ஆராய்ந்தார். அவர் என்ன சொன்னார் என்று விளக்குவதற்கு முன் ஈர்ப்பு சக்தியைப் பற்றி பேசலாம்.

பூமி நம்மை எல்லாம் இழுக்கிறது. சூரியன் தன்னைச் சுற்றும் கிரகங்களைக் கவர்கிறது. இந்தக் கவரும் சக்திக்கு ஈடுகொடுக்க கிரகங்கள் சூரியனைச் சுற்றி வருகின்றன. அந்தச் சுற்றலினால் ஏற்படும் வெளிநோக்கிய சக்தி, ஈர்ப்பு சக்திக்கு ஈடு கொடுப்பதால் கிரங்களால் ஏறக்குறைய வட்டப் பாதைகளில் சுற்றிச் சமாளிக்க முடிகிறது.

இந்த ஈர்ப்பு சக்தி இருப்பதை நிஜமென்று கொண்டு நியூட்டன் போன்றவர், கிரகங்கள் சுற்றும் பாதைகளைத் துல்லியமாகக் கணக்கிட்டார்கள். நியூட்டன் விதிப்படி இந்த ஈர்ப்பு சக்தி என்பது ஒரு பொருளின் ஆதார இயற்கை. ஒரு பொருளின் எதிரே மற்றொரு பொருளை வைத்தால், இரண்டும் ஒன்றுக்கொன்று கவர்ந்துகொள்வது அவற்றின் இயற்கை என்று நம்பினார்.

ஐன்ஸ்டைன் அப்படி நம்பவில்லை. அவருடைய சித்தாந்தப்படி இந்த ஈர்ப்பு சக்தி ஜடப் பொருளின் இயற்கை அல்ல. அந்தப் பொருளைச் சுற்றியுள்ள வெளி, ஸ்பேஸ், அந்தப் பொருள் இருப்பதால் வளைந்து விடுகிறது. இந்த வளைவினால் ஏற்படும் சரிவே, வழுக்கலே, ஈர்ப்பு சக்தி என்று மிகத் தைரியமான ஒரு கருத்தைச் சொல்லி, அந்தக் கருத்து நிரூபிக்க,

" வெளி "வளைந்திருக்கிறதா ? எப்படி நிரூபியுங்கள் என்று ஐன்ஸ்டைனிடம் விஞ்ஞான உலகம் கேட்க,

'பகலில் இரவு வர வேண்டும். பட்டப் பகல்ல சூரியன் மறைந்து , நட்சத்திரங்கள் வெளிப்பட்டு வானம் இருட்டாக வேண்டும் " என்றார் ஐன்ஸ்டீன்

" நடக்கிற காரியமா ? "- நடந்தது .

முழு சூரிய கிரகணம் 1919 மே 29 -ல் பட்டப்பகலில் சூரியன் மறைந்து வானம் இருட்டானது.நட்சத்திரங்கள் ஐன்ஸ்டீனைப் எட்டிப்பார்த்து சிரித்தது!

ஹயாடெஸ் (Hyades ) என்கிற நட்சத்திர விண்மீன் தொகுதியில் உள்ள ஒரு நட்சத்திரத்தை முத்தைய இரவில் டெலஸ்கோப் மூலம் படம் பிடித்து , டெலஸ்கோப்பை நகர்த்தாமல் அப்படியே வைத்து பகலில் சூரிய கிரகணம் ஏற்பட்ட போது மீண்டும் அதே நட்சத்திரத்தை படம் எடுக்க, அந்த நட்சத்திரம் கொஞ்சம் இடம் மாதிரி இருந்தது. அந்த இடமாற்றத்தின் வளைவு 1.75 ° ஆர்க் வினாடி . ஆக விண்வெளி வளைந்துள்ளது நிரூபிக்கப்பட்டது .

وَلِلّٰهِ مَا فِى السَّمٰوٰتِ وَمَا فِى الْاَرْضِ وَكَانَ اللّٰهُ بِكُلِّ شَىْءٍ مُّحِيْطًا

வானங்களிலும், பூமியிலுமுள்ள அனைத்தும் அல்லாஹ்வுக்குரியனவே! அல்லாஹ் அனைத்தையும் சூழ்ந்தவனாக இருக்கின்றான்.(குர்ஆன் : 4:126)

'இப்படி வளைந்து வளைந்து வெளி முழுவதும் திரும்ப ஒன்றுடன் ஒன்று சேர்ந்துகொண்டுவிடும்' என்றார் ஐன்ஸ்டைன்.

அப்படியெனில் இங்கிருந்து புறப்பட்ட ஒளிக்கற்றை விண்வெளியில் சென்று கோடிக் கணக்கான வருஷங்களுக்குப் பிறகு திரும்ப புறப்பட்ட இடத்துக்கே வந்து விடும் ! இதில் காலம் என்பது என்ன? தூரம் என்பது என்ன? சரித்திரம் என்பது என்ன? எதிர்காலம், இறந்த காலம் எல்லாம். ஒன்றிப்போகின்றன!

வளைந்த வெளியை சிந்தனையில் தேக்குவதற்கே முடியாமல் விஞ்ஞானிகள் திணறினார்கள். வளைந்த வெளியாவது? சரி! வளைந்த வெளிக்கு அப்பால் என்ன? அதுவும் வெளிதானே? இல்லை! வெளி வளைவோடு அவ்வளவுதான்! எப்படி ? நினைத்துப் பார்க்கவே முடியவில்லையே!.

لَا تُدْرِكُهُ الْأَبْصَارُ وَهُوَ يُدْرِكُ الْأَبْصَارَ وَهُوَ اللَّطِيْفُ الْخَبِيْرُ

பார்வைகள் அவனை அடைய முடியா; ஆனால் அவனே எல்லோருடைய (எல்லாப்) பார்வைகளையும் (சூழ்ந்து) அடைகிறான். அவன் நுட்பமானவன்; தெளிவான ஞானமுடையவன். (குர்ஆன் : 6:103)

இதிலிருந்து விஞ்ஞானிகள் 'நம் புலன்களுக்கும் சிந்தனைகளுக்கும் அப்பாற்பட்ட ஒரு ஞானம் இருக்கலாமோ என்று சிந்திக்கத் துவங்கினார்கள்.

## **சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 48**

( தாத், சிபத் )

"இம்மையில் (இறைவனைப் பார்ப்பதை விட்டும்) குருடாகியிருப்பவன் மறுமையிலும் குருடன் (ஆக இருப்பான்)"என்கிறது குர்ஆன் 17:72 வசனம்

"அல்லாஹ்" என்ற பெயர் மட்டும் “தாத்”தின் பெயரென்றும், ஏனைய பெயர்கள்யாவும் “சிபத்து ” அவனின் தன்மைகளைக் குறிக்கும் பெயர்கள், அர்ரஹ்மான் (அருளாளன்), 'அர்ரஹீம் (அன்புடையோன்)

தாத்தே முத்தலக் (மட்டில்லாத மூல உள்ளமை) ஓர் குறித்த வெளிப்பாட்டைத் தோற்றுவித்தால் அது “சிபத்து” (வருணிப்பு) என்று சொல்லப்படும். விளப்பத்தில் வருணனை உள்ளமையை விட்டும், ஒரு வர்ணனை மற்றொரு வருணனையை விட் டும் வேறாக இருந்தாலும், உண்மையில் உள்ளமையின் வெளிப்பாடு மூல உள்ளமையில், வேறொரு உள்ளமையின் கூட்டுதல் அன்று. மூல உள்ளமை (ஒன்றே) யன்றி (வேறொரு) உள்ளமையே கிடை யாது.

ஆனதால், வருணனை உள்ளமையை விட்டும் பிரிந்ததல்ல. அது உள்ளமையை யொட்டியது என்பதில் ஐயமே இல்லை. உள்ளமையின் வெளிப்பாடு வருணனையின் திரையின் பேரிலேயே தோற்றமாகிறது.

தாத்தின் சிபாத்தும், அதாவது உள்ளமையில் வருணனையும் சம்பூரணமானதும் பூர்வீகமானதும் அழிவில்லாததுமாய் இருக்கிறது. தாத்தை உள்ளபடி அறிந்துகொள்ள இயலாதது போலவே சிபாத்தின் அந்தரங்கத்தையும் உள்ளபடி விளங்கிக் கொள்ள இயலாது.

சிபாத்தும் (தாத்தைப் போலவே) மட்டற்றதாயும் அடைய வளையப்படாததாயும் இருக்கிறது. ஆனால், சிபாத்து பலவாய் இருப்பதால் தாத்தின் ஓர்மை பாதிக்கப்படுவதில்லை. உதாரணமாக, ஒருவன் பலவித வேஷங்களில் தோன்றுவதால் அந்த நபரின் ஒருமை மாறிவிடாது. (ஒருவன் பலவாகிவிடமாட்டான்.)

இனி தாத்தின் வருணனை களில் ஏழு மேலான வருணனைகள் (சிபத்துக்கள்) உண்டு அவை,

1.ஹயாத்து (ஜீவன்.) 2.இல்மு (அறிவு.) 3.குத்ரத்து(தத்துவம்.)

4.இராதத்து(நாட்டம்.) 5.ஸம்உ (கேள்வி.) 6.பஸர் (பார்வை.) 7.கலாம் (பேச்சு) என்பனவாம்.

தாத்துக்கு சிபாத்துக்களைப் பொறுத்துப் பெயர்களுண்டு. “அல்லாஹ்"-சகல சிபத்துக்களுடனும் தாத்தாய் இருக்கிறது. "அலீம்" - (அறிவுடை யோன்)- இல்மு (அறிவு) வுடன் தாத்தாய் இருக்கிறது. கதீர் (தத்துவமுடையோன்) - குத்ரத்துடன் தாத்தாய் இக்கிறது. ஆனதால், அல்லாஹ் வென்னும் திருநாமம் தாத்தின் பெயராயும், அலீம்- கதீர் என்னும் இஸ்முகள் (பெயர்கள்) சிபாத்தின் பெயர்களாயும் இருக்கின்றன.

சிபத்து தாத்தை விட்டும் வேறானதல்ல. அதுபோன்றே இஸ்மும் அவ் இஸ்மையுடையோனாகவே இருக்கும். அதாவது, அறிவும் அறிவுடையோனும், தத்துவமும் தத்துவமுடையோனும் அவனாகவே இருக்கிறான்.

மேலும், சிபாத்துக்கள் அதிகமாய் இருப்பதால் இஸ்முகளும் அதிகமாய் இருக்கின்றன. இஸ்மு ஒவ்வொன்றும் வெளிப்படும் அந்தஸ்தில் ஸம்பூர்ணத் தன்மையுடன் வெளிப்பட்டுத் தன் தோற்றத்தில் ஜொலிக்கிறது.

அலீமின் (அறிவுடையோனின்) தோற்றம் மஅலூம் (அறியப்பட்டது).ஆகையால், அறியப்பட்ட அணுவணுவடங்கலும் இறைவனில் இருக்கின்றன. இவ்வறியப்பட்டவைகளும் வேறன்று; அந்த தாத்தாகவே இருக்கின்றன. அறிவும், அறிவோனும் அறியப்பட்டதும் அதுவே.

இனித் தோற்றங்களை கவனிக்கும்போது, தோற்றங்கள் அதிகமாய் இருப்பதற்கேற்பத் திரைகளும் அதிகமாய் இருக்கின்றன. அதாவது, தாத்தின் திரை இல்மும், இல்மின் திரை ஆலிமும் ஆலிமின் திரை மஅலூமும் ஆக இருக்கின்றன. இதனால் திரையும் வேறல்ல என்பது வெளியாகிறது. ஒவ்வொன்றும் தனக்குத் தானே திரையாக இருக்கிறது.

ஆதலால், ஆரம்பம் முதல் கடைசி வரையில் அல்லாஹுத் தஆலாவின் ஜோதி ஒவ்வொரு நிலையிலும் ஒரு புதிய தோற்றத்தில் வெளியாகி வருகிறது. விண்ணும் மண்ணும் அந்த ஜோதியே. அது ஓர் அந்தஸ்தில் லேசான நுண்மையானதாகவும் மற்றோர் அந்தஸ்தில் உறுதியான கனமானதாகவும் இருக்கிறது. ஹக்கின் ஜோதி இவ்வித அந்தஸ்து களில் இருப்பினும் அதன் பரிசுத்த சம்பூரண சிபத்தில் ஒரு குறைவும் ஏற்படுவதில்லை.

ஏனெனில், குறைகள் குறிக்கப்பட்ட அந்தஸ்தைச் சேர்ந்தவை; நிறை பூரணமோ ஏக உள்ளமையைச் சேர்ந்தது. குறிக்கப்பட்ட அந்தஸ்தின் இத் தன்மைகூடப் பிரத்தியேகக் குறிப்புகளேயன்றி உண்மையில் அதிலே கனம், உறுதி என்ற தன்மையோ, குறையோ கிடையாது. அது ஜோதியாய் இருப்பதால் நுண்மையும் பூரணமுமே அதில் அதன் தன்மையாய் இருக்கின்றன.

இருலோகத்திலும் ஒரே ஜோதியே ஜொலித்துக்கொண்டிருக்கிறது. ஆம், அந்த ஜோதி பலப் பல தோற்றங்களில் வெளியாகிறது. அது ஹக்கின் ஜோதியாய் இருக்கிறது. அது பலவிதத் தோற்றங்களாய் வெளியாகுதலே "ஜகம்". இதை நன்கு உணர்வீர்களாக!

''காணும் சொரூபமெல்லாம் சுத்தன் மலுஹரென்று

பேணி ஷஹூது செய்து பெலப்படுவ தென்னாளோ!

"எல்லாம் ஒரே ஜோதியாய் இருக்கும்போது அடியான் என்ன, ஆண்டவன் யார்? அடியானே ஆண்டவன்' என்று அனர்த்தம் கொள்ளவேண்டாம். (நவூது பில்லாஹ்) ஆண்டவன் காப்பானாக ! அப்படி எண்ணுவதில் அந்தஸ்துகளின் கார்மானம் இல்லாமலாகிவிடும்.

"ஹர் மர்தபா அஜ் வுஜுது

ஹுக்மே தாரத்-

கர் ஹிப்ஜெ மராதிப் ந

குனீ ஜிந்தீகீ '"

உண்மையில் ஒவ்வொரு அந்தஸ்துக்கும் ஒரு தனிச் சட்டமுண்டு. நீங்கள் அந்தஸ்துக்களில் பேணுதல் வைக்காவிட்டால் ஜிந்தீக் (காபிர்களாக) ஆய்விடுவீர்கள்.

العبد عبد وَإِن تَرَقَّى وَالرَّبِّ رَبٌ وَإِن تَنَزَّلُ

"எத்தகைய உயர் பதவி அடைந்துவிட்டாலும் அடியான் அடியானே. எவ்வளவு கீழ் இறங்கித் தோற்றம் வெளியானாலும் ஆண்டவன் ஆண்டவனே." ஆனதால், வணங்கும் அப்தின் அடியான் பதவியில் உள்ள ஜோதியை அடிமை என்றே அழைக்க வேண்டும்.

வணங்கப்படும் மஃபூதின் பதவியிலுள்ள ஜோதியை மஃபூது என்றே அழைக்கவேண்டும். இதன் திரு நாமம் அதற்கும், அதன் பெயர் இதற்கும் சூடுவது தகாது. மேலும், மட்டுண்ட உள்ளமைகள் (ரூபகங்கள்) அரூபியாகிய ஏக உள்ளமையின் பற்றுதலின் தேவையுடையவையாகவும், ஏக உள்ளமை (அரூபம்) தன் தோற்றத்தில் (ரூபத்தில்) ஆசையுள்ளதாகவுமிருக்கின்றன.

மூஸா (அலை) வுடைய கோல் பாம்பாகத் தோன்றியது. உண்மையில் அது கோல்தான்; அது கோல் அல்ல, பாம்பல்ல- பாம்புதான். அல்லது பாம்பல்ல, கோல்தான். கோல் பாம்பின் அசலாய் இருந்தது. அல்லது பாம்பு கோலின் அசலாய் இருந்தது. கோல் பாம்பை விட்டும் வேறாய் இருந்தது. பாம்பு கோலைவிட்டும் வேறாய் இருந்தது. இவை எப்படியாயினும் ஒரே உள்ளமைக் கற்பனையின்படி ஆடையணிந்து தோன்றியதே யன்றி வேறல்ல. கோலாக இருந்தபோது கோலாகவும், பாம்பாக மாறியபோது பாம்பாகவும் தோற்ற மளிப்பதே யன்றி உண்மையில் இரண்டும் ஒன்றே.

وَقَدْ خَلَقَكُمْ أَطْوَارًا

("அவன் உங்களை (படிப்படியாக) பல கோலங்களில் படைத்தான்.) அந்த ஒழுங்கின்படி அவை வெவ்வேறாகத் தெரிகின்றன. இது அதி நுட்ப ரகஸியமாய் இருக்கிறது. இந்த நுட்பத்தை அறிந்து அவனை ஷுஹூது செய்பவர்களாக நிலைபட்டவர்கள் ஒரு

கூட்டமாவர். இதை விளங்கிக் கொள்வதில் தடுமாறி வழிகெட்டவர்கள் பலர். அவர்களின் விளக்கத்தில் மண் விழுந்துவிடுகிறது; உலக மாயையில் அவர்கள் சிக்குண்டு கிடக்க நேரிடுகிறது. இதனாலேயே, "உள் விளங்கா முரீதீன்கட்கு உள்ளதை சொல்லொணாதப்பா" என்று ஒரு பெரியார் பாடியுள்ளார்.

இம் மர்மத்தை,அதாவது, வஹதத்தை (ஒருமையை) வஹதத்தாகவும், கதரத்தை (பலவை கதரத்தாகவும் பக்குவப்பட்ட தம் முரீதுகளுக்கு ஷைகுமார்கள் விளக்கிவைக்கிறார்கள். குருவின் போதனையாலேயே இதன் ரகஸியங்கள் வெளியாகின்றன; வேறெந்த விதத்திலும் வெளியாவதில்லை.

வஹத்ததையும் கதரத்தையும் சிஷ்யர்களுக்கு விளக்கி அருளுவதே ஞானாசிரியரின் மாபெரிய வேலையாகும். மெஞ்ஞானிகளின் வாசகங்கள் விளங்காவிட்டால், தன்னுடைய ஞான அறிவின் குறையை ஒப்புக்கொண்டு ஞானாசிரியரிடம் கேட்டு விளங்கிக் கொள்ள வேண்டுமேயன்றி தனக்கு விளக்கமில்லாததோர் விஷயத்தில் ஆட்சேபனை எழுப்புவது சரியன்று.

سئل بِهِ خَبِيرًا

(தெரிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள்) என்கிறது திருகுர்ஆன்.

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 49

( வந்து உதித்தெல்லாம் விந்து குதித்த வாறே..)

**( Vaitiyar Malick )**

அவ்வல் தீனி மஃரிபத்துல்லா

-------------------------------------

அல்லாஹ்வை அறிந்து கொள்வதே தீனில் முதன்மையாக இருக்கும்.

என்பதற்கிணங்க சில குறிப்புகளை கவனிப்போம்.

கடவுள் என்பது யார்?

இந்த பிரபஞ்சத்தில் காணும் அனைத்தும் ஆனது எப்படி? எதுவும் தானாக ஆகாது இவைகளின் ஆக்கத்திற்கு ஒரு ஊக்கம் இருந்தாக வேண்டும்.இத்தனையும் மிகைத்த ஞானத்தோடும் முன்மாதிரி இல்லாமலும் குறைகாண முடியாமலும் உண்டாகியுள்ளது. இவைகள் உண்டாவதற்கு காரணமான ஒரு மகா சக்தி இருந்தாக வேண்டும் அந்த இயற்கையின் மகா சக்தியைத்தான் கடவுள் என்கிறோம். கடவுள் என்பது ஒரு தன்மை அது ஒரு பொருளோ ஜடமோ அல்ல .

இந்தக் கடவுள் என்ற தண்மைக்கு 99 வகையான இயல்புகள் உண்டு

இந்த 99 வகையான இயல்புகள் வெளியாக ஒரு தளம் வேண்டும்

இதைத்தான் தனக்கு ஒரு கலீபாவை படைக்கப் போவதாக

திருமறையில் சொல்கிறான் .

கலீபா என்றால் ஒரு பிரதிநிதி ஒரு முதலாளி தன்னுடைய பணிகளை கவனிப்பதற்காக ஒரு மேனேஜரை நியமிப்பதைப்போல கடவுள் தனது ஆற்றல்களை வல்லமையை இயல்புகளை வெளிப்படுத்தவே மனிதனை (ஆதம் அலைஹிஸ்ஸலாது வஸ்ஸலாமை) படைத்தான் .

கடவுளின் தன்மையான ஹூவியத் அண்ட பிண்டம் அனைத்தையும் சூழ்ந்ததாக உள்ளது . எங்கும் சூழ்ந்திருக்கும் ஹூவியத்தை மனிதன் தனக்குள் ரிசார்ஜ் செய்துகொள்ள சில வழிமுறைகளை வகுத்துள்ளார்கள். அதை ஞானகுரு ஒருவரின் துணையோடு தெரிந்து

கொண்டு இயற்கைக்கு மாற்றமா நடைபோட்டு மாளாமல் மாண்டு நப்ஸுகளோடு போராடி வெற்றி பெற்றால் விகிதாச்சார முறையில் தனக்குள் சில ஆற்றலும் சக்தியும் மேலோங்குவதை உணரலாம்.

குணமோ குறிப்போ அற்ற மூலத்தின் (தாத்தின்) குணமும் குறிப்பும் உள்ள கோலத்தின் (சிபத்தின்) இயல்புகளை (அஸ்மாக்களை) கவனிக்கும் பச்சத்தில்

இறைவனுடைய திரு நாமங்கள் - 99 இந்த 99 எதார்த இயல்புகளும் (அஸமாக்களும்) மனிதர்களில் பிரதிபலிக்கும் .

பிறக்கும் ஒவ்வொரு மனிதரும் இந்த 99 அஸ்மாக்களில் ஏதாவது ஒரு அஸ்மாவின் ஆதிக்கத்தில் பிறந்திருப்பார். ஒரு மனிதனிடம் எல்லா இயல்புகளுமே காணப்பட்டாலும் அவன் எந்த இயல்பின் ஆதிக்கத்தில் இருக்கிறானோ அந்த இயல்பே அவனிடம் மேலோங்கி நிற்கும்

உதாரணமாக ஒருவன் மன்னிக்ககூடியவன் என்ற இயல்பின் ஆதிக்கத்தில் பிறந்திருந்தால் அவன் யாரையும் பழி வாங்க மாட்டான் அதேபோல் ஒருவன் பழிவாங்குகிறவன் என்ற இயல்பின் ஆதிக்கத்தில் பிறந்திருந்தால், அவன் யாரையும் மன்னிக்க மாட்டான் இதுவே மனிதர்களின் யதார்த்த இயல்புகளாகும்.

இறைவனுடைய இந்த 99 திருநாமங்களும் (இயல்புகளும்) மனிதர்களிடையே பிரதிபலிக்கிறதே தவிர இறைவன் மனிதர்கள் அளவில் இறங்கி விடுவதல்ல.

இந்த யதார்த்த இயல்புகள் ஒரு புறமிருக்க மனிதர்கள் மன இச்சையின் போக்கில் வாழ்ந்து தீய இயல்புகளை தானே தேடிக்கொண்டு வாழ்வதால் யதார்த்த இயல்புகள் மங்கி இச்சையின் இயல்புகள் மேலோங்கி விடுகிறது.

தீய இயல்புகள் ஒவ்வொன்றுக்கும் ஒரு கீழான படைப்புகள் உள்ளன அந்த படைப்பினங்களில் ஒன்றை தனது தீய இயல்புக்கு ஏற்ற ஒன்றை இங்கேயே தேடிக்கொண்டு அவர்கள் தேடிய ஒன்றாக மறுமையில் எழுப்பப்படுகிறாரகள். இதை முகநூலில் இதற்கு மேல் விளக்க முடியாமல் முடிக்கிறேன் .

வல்லமையையும் வெளிப்படுத்த தனக்கொரு பிரதிநிதி வேண்டுமென்று படைப்புகளிலே மேலான படைப்பாக நம்மை படைத்து நம்மிடம் அபார சக்திகளையும் அற்புத ஆற்றல்களையும் வைத்து அவைகளை பிரயோகிக்க , செயலாற்ற தன்னை அறிந்த ஒருவனுக்கே சாத்தியமென ஒரு வரம்பை வைத்து விட்டான்.

அப்படி நம்மை நாம் அறிவதற்கு நமக்குள் என்ன இருக்கிறது ? என்று பார்ப்போமேயானால் நாம் இங்கு காணும் அனைத்து வஸ்துக்களின் அசலும் நமக்குள்ளேதான் இருக்கிறது.

பஞ்சபூதங்களும் நமக்குள்ளே

பஞ்சபூதங்களின் அதிபதிகளும் நமக்குள்ளே

பஞ்ச புலன்களும் நமக்குள்ளே பஞ்ச

புலன்களின் பதிவேடும் நமக்குள்ளே

உள் ஒலி Internal Audio நமக்குள்ளே

உள் ஒளி Internal Video நமக்குள்ளே

சந்திரனும் சூரியனும் நமக்குள்ளே

நட்சத்திரக் கூட்டங்களும் நமக்குள்ளே

மது அருந்தா போதை நமக்குள்ளே

மாதரில்லா பேரின்பம் நமக்குள்ளே

மாவுல் ஹயாத் ஜீவநீர் நமக்குள்ளே

ஒன்பது வகை ஓசைகள் நமக்குள்ளே

பிறவி பயன் பெறும் வழி நமக்குள்ளே

பிறவி கடல் கடக்க ஓடம் நமக்குள்ளே

ஆலம் அடங்களும் நமக்குள்ளே

அகிலத்தில் உள்ள அனைத்தின் ஆற்றலும் நமக்குள்ளே

வானமும் பூமியும் நமக்குள்ளே

வானவர் சேவகளும் நமக்குள்ளே

சித்துரதுல் முன்தஹா நமக்குள்ளே

சிம்மாசனமாம் அர்ஷும் நமக்குள்ளே

அறியும் தளமும் நமக்குள்ளே

அறிந்தவர் வருகையும் நமக்குள்ளே

அலிப் லாம் மீமும் நமக்குள்ளே

ஐந்தெழுத்தின் அச்சரம் நமக்குள்ளே

இப்படி எத்தனையோ நமக்குள்ளிருக்க

இத்தனையும் நாம் அனுபவித்து அறிய நமக்கு ஆசை இல்லையா?

இத்தனையும் நமக்குள்ளிருக்க

நமக்குள்ளிருக்கும் நம்மை நாம்

பார்க்க ஆர்வம் இல்லையா?

தேடியவர்கே ஞானப்பாதை திறக்கும்

*********************************

கரு வளர்ச்சியும் அல்குர்ஆனின் அற்புதமும்

*************************************

ஒரு குழந்தை ஆணாகவோ, பெண்ணாகவோ இந்த உலகில் பிறப்பதை ஏதோ காலத்தின் கட்டாயம் என்று நாம் நினைக்கிறோம் ஆனால் அல்லாஹ்வின் வல்லமையை நாம்

சிந்திப்பதில்லை. இதைப்பற்றி சிந்திக்க முற்பட்டுவிட்டால் இணைவைத்தலை தவிர்த்து அல்லாஹ்வுக்கு முற்றிலும் வழிபடக்கூடிய இறை விசுவாசியகாகவும் அல்லாஹ்வுக்கு உண்மையான அடியானாகவும் மாறிவிடுவோமே!

"நிச்சயமாக (முதல்) மனிதனை களிமண்ணின் மூலச்சத்திலிருந்து படைத்தோம்.

பின்னர், (அதற்கான உள்ள) ஒரு பாதுகாப்பான இடத்தில் (கர்ப்பப்பையில்) நாம் அவனை இந்திரியத் துளியாக்கினோம்.

பின்னர் அந்த இந்திரியத் துளியை ‘அலக்’ என்ற நிலையில் ஆக்கினோம்!

பின்னர் அலக் என்பதை ஒரு தசைப்பிண்டமாக்கினோம்!

பின்னர் அந்த தசைப் பிண்டத்தை எலும்புகளாகவும் ஆக்கினோம்! பின்னர் அவ்வெலும்புகளுக்கு மாமிசத்தை அணிவிதோம்!

பின்னர் நாம் அதனை வேறு ஒரு படைப்பாக் (மனிதனாகச்) செய்தோம்! (இவ்வாறு படைத்தவனாகிய) அல்லாஹ் பெரும் பாக்கியமுடையவன் (படைப்பாளர்களில் எல்லாம்) மிக அழகான படைப்பாளன்.

(குர்ஆன் 23:12-14)

மேற்கண்ட வசனத்தில் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ள வேண்டியவை

**#நாம்** அவனை இந்திரியத் துளியாக்கினோம்.

**#இந்திரியத்** துளியை 'அலக்' என்ற நிலையில் ஆக்கினோம்!

**#பின்னர்** அலக் என்பதை ஒரு தசைப் பிண்ட மாக்கினோம்!

**#பின்னர்** அந்த தசைப் பிண்டத்தை எலும்புகளாகவும் ஆக்கினோம்!

**#பின்னர்** அவ்வெலும்புகளுக்கு மாமிசத்தை அணிவிதோம்!

**#பின்னர்** நாம் அதனை வேறு ஒரு படைப்பாக் (மனிதனாகச்) செய்தோம்!

மேற்கண்ட இந்த ஆறு அம்சங்களையும் ஒவ்வொன்றாக அலசுவோம் வாருங்கள்

ஆண் விந்துத் துளி பற்றிய அறிய தகவல்கள்

----------------------------------------------------------------

ஒரு ஆணிடமிருந்து வெளிப்படும் ஒருவகையான நீர் விந்துத்துளி என்று அறிவியல் உலகம் வர்ணிக்கிறது. இந்த விந்துத்துளியைப் பற்றி 1400 வருடங்களுக்கு முன்னர் அல்லாஹ் அருள்மறையில் குறிப்பிட்டள்ளான் இதைப் பற்றி அருள்மறை பின்வருமாறு கூறுகிறது

மனிதன், (தான்) எதிலிருந்து படைக்கப்பட்டிருக்கிறான் என்பதை அவன் சிந்தித்து பார்க்க வேண்டாமா? குதித்து வெளியாகும் (ஒரு துளி) நீரிலிருந்து அவன் படைக்கப்பட்டான். அது (ஆணின்) முதுகந் தண்டிற்கும், (பெண்ணின்) கடைசி நெஞ்செலும்புகளுக்கும் மத்தியிலிருந்து வெளிப்படுகிறது." (அல் குர்ஆன்: 86:5-7)

இதோ மேலே காணும் படம் ஒரு ஆண் மகனுடைய விந்தணுவாகும் இது உருவாக 74 நாட்களாகிறது என்றும் விந்து நீரில் 100-300 மில்லியன் விந்தணுக்கள் காணப்படுவதாகவும் ஆய்வாளர்கள் கூறுகிறார்கள்.

பெண்ணின் சினைமுட்டை பற்றிய அறிய தகவல்கள்

--------------------------------------------------------------------------

பெண்ணின் சினை முட்டையின் வடிவம் 0..2 மி.மீ அளவு கொண்டது என்றும் இந்த சினை முட்டை வட்ட வடிவமுடையது என்றும் ஆய்வாளர்கள் கூறுகிறார்கள்.

இதோ மேலே கண்ட படம் பெண்ணின் சினை முட்டையாகும் இதை சற்று கவனித்துப் பாருங்கள் இது முட்டையைப் போன்று வட்ட வடிவமாக காணப்படுவதால் இதற்கு சினை முட்டை என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது!

பெண்ணின் சினைமுட்டையானது அவளுடைய சினைப் பையிலிருந்து வெளியாகிறது என்றும் இந்த சினை முட்டையின் உயிர்க்காலம் ஒருநாள் அதாவது 24 மணி நேரம் என்றும் மேலும் இந்த சினை முட்டை சினைப் பாதையின் புறச் சுவர்களால் உறிஞ்சப்பட்டு சினைப்பையை அடைகிறது ஆய்வாளர்கள் கூறுகிறார்கள்.

விந்தணுவும் சினைமுட்டையும் ஒன்றுடன் ஒன்று சேருகிறது

------------------------------------------------------------------------

ஒரு ஆணுடைய விந்தணு ஒவ்வொருமுறை உறவு கொள்ளும்போதும் அவனிடமிருந்து 2-4மிலி விந்து நீர் வெளிப்படுகிறது இந்த விந்து நீரில் உள்ள விந்தணு 0.5 மி.மீ நீளம் உடையது. இதோ விந்தணுவின் படத்தை சற்று கவனியுங்கள்

இந்த ஆணுடைய விந்துநீரிலிருந்து வெளிப்படும் விந்தணு பெண்ணுடைய சினைப் பையிலிருந்து வெளியாகும் சினை முட்டையுடன் கூடுகிறது! ஆணுடைய விந்தணு எவ்வாறு பெண்ணுடைய சினைமுட்டையுடன் கூடுகிறது என்ற நிகழ்ச்சியை படமாக விளக்கியுள்ளேன் கீழே உள்ளதை பாருங்கள்

பெண்ணுடைய சினைப் பையிலிருந்து சினைமுட்டை வெளிப்பட்ட நேரம் முதல், சினைப்பாதையில் நகர்ந்து வர 2 நாட்கள் ஆகும். மேலும் சினைமுட்டை வெளிவந்து 24 மணி நேரத்திற்குள் விந்தணு சினைமுட்டையை அடைய வேண்டும்.

இவ்வாறு நுழையும் விந்தணு கருப்பையில் 10 நாட்கள் வரை உயிர்வாழும் என்றும் மேலும் இந்த ஆணின் விந்தணு 24-48 மணி நேரத்தில் ஒரு பெண்ணை கருத்தரிக்கச் செய்யும் சக்தியை இழந்து விடுகிறது என்றும் அதே போன்று பெண்ணின் சினைமுட்டையின் உயிர்க்காலம் ஒருநாள் அதாவது 24 மணி நேரம் என்றும் ஆய்வாளர்கள் கூறுகிறார்கள்.

இதன் மூலம் நாம் விளங்குவது என்னவெனில் ஆணுடைய விந்தணு பெண்ணுடைய சினைமுட்டையுடன் 24 மணிநேரத்திற்குள் ஒன்றுடன் ஒன்று கோர்த்துக்கொண்டு கருத்தரிக்க வைக்க வேண்டும் என்பதே!

ஆணுடைய விந்தணுவிலிருந்து 23 குரோமோசோம்களும் பெண்ணின் சினை முட்டையிலிருந்து 23 குரோமோசோம்களும் ஒன்றாக இணைந்து செல் அமைப்பாக உருவாகிறது இந்த செல் அமைப்பு உப்பு போன்று காணப்படுகிறது. இதுதான் FERTILIZED EGG அதாவது கருமுட்டையாகும்

கருமுட்டை கர்பப்பை குழாய் எனப்படும் FALLOPIAN TUBE வழியாக கருப்பையில் சென்றடைகிறது பின்னர் கர்ப்பப் பை படிப்படியாக வளர ஆரம்பிக்கிறது இந்த வளர்ச்சியை கீழே உள்ள படத்தின் உதவியால் காண இயலும்!

பின்னர் அந்த தசைப் பிண்டத்தை எலும்புகளாகவும் ஆக்கினோம்! பின்னர் அவ்வெலும்புகளுக்கு மாமிசத்தை அணிவிதோம்! மேற்கண்ட அருள்மறை வசனம் கூறும் செய்தியை ஆராய்வோம்

**#ஒரு** பெண் கர்ப்பம் தரித்த 21 அல்லது 24-ம் நாளிலிருந்து அந்த கருவுக்குள் இதயத்துடிப்பு நிகழ்கிறது இதன்மூலமாக அந்த கருவுக்குள் இரத்த ஓட்ட நிகழ்ச்சி நடைபெறுகிறது

**#கர்ப்பம்** தரித்த 28ம் நாள் முதல் அந்த கருவுக்குள் கை, கால்கள், காதுகள் மற்றும் முதுகுத்தண்டுவடம் ஆகியன துளிர்விடுகின்றன.

**#கர்ப்பம்** தரித்த 30ம் நாள் கருவுக்குள் மூளை துளிர்விடுகிறது

**#கர்ப்பம்** தரித்த 35ம் நாள் விரல்கள் துளிர்விடுகின்றன

**#கர்ப்பம்** தரித்த 40ம் நாள் மூளை செயல்பட ஆரம்பிக்கிறது

**#கருவுற்ற** 6-வது வாரம் முதல் கருவின் மூளை கருவை தன் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவருகிறது.

**#கருவுற்ற** 7-வது வாரம் முதல் பற்களின் தாடைகள் துளிர்விடுகின்றன மேலும் பால்பற்கள் முளைப்பதற்கான அறிகுறிகள் தென்படுகின்றன

பின்னர் நாம் அதனை வேறு ஒரு படைப்பாக் (மனிதனாகச்) செய்தோம்

மேற்கண்ட அருள்மறை வசனம் கூறும் செய்தியை ஆராய்வோம்

**#கருவுற்ற** 8-வது வாரத்தில் கரு மனித உருவத்தில் தென்படுகிறது மேலும் அனைத்து அங்கங்களும் உறுப்புக்களும் கண்டறியப்படுகிறது

**#கருவுற்ற** 9-வது வாரத்தில் குழந்தையின் கை விரல்களில் ரேகைகள் படர ஆரம்பிக்கிறது பின்னர் குழந்தை தன் விரல்களை அசைக்க முற்படுகிறது

**#கருவுற்ற** 10-வது வாரத்தில் குழந்தை கர்ப்பப் பையில் உள்ள அமிலங்களை பருக முற்படுகிறது

# கருவுற்ற 11-வது வாரத்தில் குழந்தை உறங்க கற்றுக் கொள்கிறது பிறகு விழிக்க கற்றுக்கொள்கிறது இறுதியாக சிறுநீர் கூட கழிகக் ஆரம்பிக்கிறது. அதே சமயம் சுவாச உறுப்புகளை இயக்குவதற்காகவும் அதன் வளர்ச்சிக்காகவும் இந்த குழந்தை பயிற்சி எடுக்கிறது!

**#கருவுற்ற** 13-வது வாரத்தில் குழந்தையின் மர்மஸ்தான உறுப்புகள் தெரிய ஆரம்பிக்கின்றன மேலும் நாக்கில் ருசியை அறியக்கூடிய நரம்புகள் வேலை செய்கின்றன.

**#கருவுற்ற** 14-வது வாரத்தில் குழந்தையின் செவிப்புலன்கள் வேலை செய்ய ஆரம்பிக்கின்றது.

கருவுற்ற 17-வது வாரத்தில் கண்களில் அசைவுகள் தென்படுகின்றன. குழந்தை கனவு காண முற்படுவதாக அறிவியல் வல்லுனர்கள் தங்கள் ஆய்வில் கூறுகிறார்கள்.

கருவுற்ற 20-வது வாரத்தில் குழந்தை வெளிச்சத்தை உணர ஆரம்பிக்கிறது தாயின் வயிற்றினுள் ஏற்படக்கூடிய சப்தங்களை காது கொடுத்து கேட்கிறது!

**#கருவுற்ற** 5-வது மாதத்தில் குழந்தையின் அசைவுகள் நன்றாக வெளிப்படுகின்றது.

**#கருவுற்ற** 6-வது மாதத்தில் வியர்வை சுரப்பிகள் முளைக்க ஆரம்பிக்கின்றன. மேலும் உடலில் முடிகள் முளைப் பதற்கான செயல்பாடுகள் நடைபெறுகின்றன

**#கருவுற்ற** 7-வது மாதத்தில் விழிகள் திறந்து மூடுகிறது, குழந்தை சுற்றுமுற்றும் பார்க்கிறது, சுவையை அறிகிறது, தாயின் கர்ப்பப் பையை மெதுவாக தொட்டு உணருகிறது.

**#கருவுற்ற** 8-வது மாதத்தில் குழந்தையின் மிருதுவான தோல் சருமங்கள் சற்று மேம்பட ஆரம்பிக்கிறது.

**#கருவுற்ற** 9-வது மாதம் அதாவது 266 அல்லது 294ம் நாள் தன் கருவளர்ச்சியை முழுவதுமாக அடைந்து குழந்தை இந்த உலகில் காலடி எடுத்துவைக்க தயாராகிவிடுகிறது.

மேலே தாங்கள் கண்ட அனைத்து அறிவியல் அதிசயங்சளையும் கீழ்கண்ட அருள்மறை குர்ஆனின் வசனம் மெய்ப்படுத்துகிறதா? என்பதை சற்று யோசித்துப்பாருங்கள்

நிச்சயமாக (முதல்) மனிதனை களிமண்ணின் மூலச்சத்திலிருந்து படைத்தோம். பின்னர், (அதற்கான உள்ள) ஒரு பாதுகாப்பான இடத்தில் (கர்ப்பப்பையில்) நாம் அவனை இந்திரியத் துளியாக்கினோம். பின்னர் அந்த இந்திரியத் துளியை ‘அலக்’ என்ற நிலையில் ஆக்கினோம்! பின்னர் அலக் என்பதை ஒரு தசைப்பிண்டமாக்கினோம்! பின்னர் அந்த தசைப் பிண்டத்தை எலும்புகளாகவும் ஆக்கினோம்! பின்னர் அவ்வெலும்புகளுக்கு மாமிசத்தை அணிவிதோம்! பின்னர் நாம் அதனை வேறு ஒரு படைப்பாக் (மனிதனாகச்) செய்தோம்! (இவ்வாறு படைத்தவனாகிய) அல்லாஹ் பெரும் பாக்கியமுடையவன் (படைப்பாளர்களில் எல்லாம்) மிக அழகான படைப்பாளன். (அல்குர்ஆன் 23:12-14)

## சூ:ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 50

( மிகவும் உள்வாங்கி கவனமாக படிக்கவும் )

ஷரீ அத்து, தரீ கத்து, ஹக்கீகத்து, ம:ஃரிபத்து-இந் நான்கும்

தலைவாசலாகிய கலிமா தையிபாவின் நான்கு படிகளாகும்.

ஷரீ அத்தின் வணக்கம் சரீ ரத்தைக் கொண்டும்,

தரீ கத்தின் வணக்கம் அகத்தைக் கொண்டும்,

ஹக்கீகத்தின் வணக்கம் ஆத்மாவைக் கொண்டும்,

ம:ஃரிபத்தின் வணக்கம் அல்லா(ஹ்)வின் தரிசனத்தைக் கொண்டும் நிகழ்த்தப்படுவனவாய் இருக்கும்.

இந் நான்கும் சேர்ந்ததே தொழுகை (இஸ்லாத்தின் இறை வணக்கம்) ஆகும்.

உடலைக் கொண்டு தொழுகையை நிறைவேற்றும்போது கல்பை அல்லா(ஹ்)வின் நினைவில் நிலைநாட்டி ஆத்மாவைக்கொண்டு ஹக்கின் தரிசனம் பெற்று,

''உள்ளமை அல்லாஹ்-இல்லாமை நான்" என்றுணர்ந்து- அந்த நிலையில் தரிசனம் பெற்ற பிறகு ' நான் 'என்ற அனாநியத்தைப் பனாவாக்கி,நிலைப்பட்டுத் தொழுவாயாகில் நான்கு வணக்கங்களும் சேர்ந்து தொழுகை சம்பூரணமானதாகும்.

இவைகளில் ஒரு படியேனும் குறைபட்டால் அது சம்பூரணமான வணக்கமாகாது. தலைவாசலை எத்துவதற்கு ஒரு படியையும் தவறவிடாமல் படிப்படியாக ஏறிச் செல்வது அவசியமாகும். இவ்வண்ணமே கலிமாவின் முதல் படியாகிய ஷரீ அத்தைத் தவறவிட்டவன் நரகத்திலேயே வீழ்வான்.

'ரசூல் ஷரஹதைப் பேணும், ஜன்னபதி (சுவர்க்கபதி) சேரலாம் காணும்.'(-ஹம்ஜா புலவர்).

தீனின் அறிஞர்களான கலப்பறுதலாகிய உலமாக்களே ஷரீ அத்தைப் பாதுகாப்போரும் வழிகாட்டிகளுமாவர். சம்பூரண ஆரிபாகிய ஞானாசிரியர் மற்ற மூன்று வணக்கப் படிகளையும் பாதுகாப்பவர்களும், முரீதைப் படியேற்றி இறைவனோடு சேர்ப்பவர்களுமாய் இருக்கிறார்கள்.

குரு காமிலாகவும் (சம்பூரணமானவராகவும்) முரீது ஆமிலாகவும் (சாதனை புரிபவனாகவும்) இருந்தாலல்லவோ இறைவனை அடைய முடியும்!

நபிகள் நாயகம் (ஸல் ) திருவுளமாகிறார்கள்

من بِاللَّهِ وَإِن لَّمْ تَكُنْ فَكُنُ مَعَ مَنْ كَانَ بِاللَّهِ فَإِنَّهُ يُوصِلُكَ إِلَى اللَّهِ إِن كُنتَ مَعَهُ

"நீங்கள் அல்லாஹ்வுடன் ஆகிவிடுங்கள். இல்லாவிட்டால் அல்லாஹ்வுடன் ஆகிவிட்டவர்களுடன் ஆகிவிடுங்கள். நீங்கள் அவர்களுடன் ஆகிவிடுவீர்களாயின், அவர்கள் உங்களை அல்லாஹ்வுடன் சேர்த்துவிடுவார்கள்." என்று.

ஆண்பிள்ளை சிங்கமாகிவிடு ! அல்லது, ஓர் ஆண் சிங்கத்தைப் பின்தொடர்ந்து செல்!

ஹஜ்ரத் ஆதம் (அலை) அவர்களோடு கலந்த (அவர்கள் உண்டதால் அவர்கள் உடலின் ஒரு பாகமாய்க் கலந்த) உயிரற்ற ரொட்டி உயிர் பெற்று உணர்ச்சியுடையதாகிவிட்டது. மனிதனின் பாகமும் மனிதனே. மனிதன் உணர்ச்சியுடையவனாய் இருக்கும்போதும் அவன் பாகம் உணர்ச்சியுள்ளதாய் இருக்கும்.

நாற்றமுள்ள வெங்காயம் மணமுள்ள நெய்யுடன் கலந்து மணமும் ருசியும் உள்ளதாகி விடுகிறது; காடி (வினிகர்) சர்க்கரையுடன் கலந்து ஷிகஞ்சி ஆகிவிடுகிறது. இதுவே உடலினதும், மனிதனின் உணர்ச்சியினதும் தொடர்புக்குள்ள நிலையாகும்.

உண்மை சிஷ்யனே, நீ அல்லா(ஹ்)வை அடைய நாடிவிட்டபடியால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைச் சொல்லிலும், செயலிலும், உள்ரங்கத்திலும் (பிசகாமல்) பின்பற்றவேண்டுவது உன் மீது கடமையாகியுள்ளது. பின்னர், வஹதத்தின் "முராகபா"! செய்யவேண்டும்.

முராகபா = இறைவனல்லாது வேறு எந்த 'ஊசாட்டமும் புகாமல் உள்ளத்தைக் காப்பது ஆரம்பத்திலுள்ளவர்களின் முராகபாவாகும்.

ஏக உள்ளமையையும் அதன் வருணிப்புகளையும் தெரிவித்துக் கொண்டிருப்பதில் தன் உள்ளமையை (அதன் குணங்களுடன் இல்லாமையாக்கி) மறந்து நிற்கும் நிலை முடிவு பெற்றவர்களின் முரகாபாவாகும்.

ஆன்மீக ஆசானிடமிருந்து வழிகாட்டல் பெற்ற பிறகு, ஒருவர், உலகியல் ஈடுபாடுகளிலிருந்து கால அவகாசமெடுத்து, அந்த நுட்பமையங்கள் மீது கவனம் செலுத்துவதே முராகபா ஆகும். முராகபா, மெஞ்ஞானத்திற்கு வழிவகுப்பதோடு, இறை நெருக்கம் உண்டாகும் பாதையை அமைத்துத் தருகிறது.

(அடுத்த முரகாபாவைப் பற்றி...)

## ஸூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 51

ஆழ்நிலை தியானம் (முராகபா)

'ஆழ்நிலை தியானம்' அல்லது 'முராகபா' எனும் பயிற்சியே, அனைத்து ஆன்மீக நிலைகளும் பூரணத்துவமடைய வழிவகுக்குகிறது என்பது பல நூற்றாண்டு கால அனுபவங்கள் மூலம் தெரிய வருவதாகும். அதன் காரணமாகத்தான், நமது ஞான ஆசான்கள் திக்ரையும் (இறைவனை நினைவுகூர்ந்து அழைத்தல்), ஸலவாத்தையும் (நபிகளார் மீது அருள்புரிய வேண்டுதல்) இன்னபிற உச்சாடன உத்திகளைச் செய்தபோதும், அவர்களின் அகமியப் பயிற்சியின் முக்கிய அம்சமாக முராகபாவே திகழ்கிறது.

முராகாபாவின் மூலத்தோற்றம் பெருமானார் நபிகள் நாயகம்(ஸல்) அவரகளின் பொன்மொழியோடு சார்ந்திருக்கிறது. "அல்லாஹ்வைப் பார்ப்பது போல் நீ வணங்க வேண்டும். நீ அவனைப் பார்க்கவில்லை என்றாலும் அவன் உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதை அறிந்துகொள்".

முராகபாவின் நேரடிப் பொருள், காத்திருத்தல், உத்தரவாதம் அல்லது பாதுகாப்பு என்பதாகும். ஸூஃபிகளின் சொல்லகராதியில் அது இவ்வாறு கருதப்படுகிறது,

அதாவது, ஒருவர், ஆன்மீக ஆசிரியரிடமிருந்து பெற்றுக் கொண்ட வழிகாட்டுதல்களைத் தன்னிலே வளர்த்துக்கொள்ளும் உயர்ந்த எண்ணத்தில், உலகியல் ஈடுபாடுகளிலிருந்து ஒரு குறிப்பிட்ட கால அவகாசத்திற்கு தன்னை விடுவித்துக் கொள்வதாகும்.

வேறுவார்த்தைகளில் இவ்வாறு சொல்லலாம், அதாவது மனிதனின் உள்மனதில், உணர்வூட்டும் நுட்ப மையங்கள் (Subtle Centre of Consciousness ( படம் ) இருக்கின்றன. ஆன்மீக ஆசானிடமிருந்து வழிகாட்டல் பெற்ற பிறகு, ஒருவர், உலகியல் ஈடுபாடுகளிலிருந்து கால அவகாசமெடுத்து, அந்த நுட்பமையங்கள் மீது கவனம் செலுத்துவதே முராகபா ஆகும். முராகபா, மெஞ்ஞானத்திற்கு வழிவகுப்பதோடு, இறை நெருக்கம் உண்டாகும் பாதையை அமைத்துத் தருகிறது.

ஸூஃபி ஆர்வலர் ஒருவர், ஏனைய அலுவல்களிலிருந்து தன்னை விடுவித்து, இறையருளை எதிர்பார்த்து அமர்ந்திருக்கும் நிலையில் உடனடியாகவோ அல்லது தாமதமாகவோ ஒருவகையான செயல்பாடுகள் உள்ளத்தில் உண்டாவதை உணரத் தொடங்குகிறார்.

அது சிலசமயம் வெப்பத்தின் வடிவிலும், சில சமயம் அசைவுகளாகவும் மற்றும் சிலசமயங்களில் சிலிர்ப்பது போன்ற உணர்வாகவும் இருக்கலாம். இதயத்தின் அகமிய வடிவத்தையோ அல்லது வண்ணத்தையோ ஒரு போதும் முன்னோக்கலாகாது. ஏனெனில், எல்லாத் தன்மைகளுக்கும் அப்பாற்பட்ட்ட இறை உள்ளமையின் மீது மட்டுமே கவனம் யாவும் திசை திரும்பி இருக்கவேண்டும்.

தியானத்தில் குறைந்த பட்சம் 30 முதல் 45 நிமிடங்களாவது அவசியம் அமர்ந்திருக்க வேண்டும். குறிப்பிட்ட ஒரு தோரணையில்தான் அமரவேண்டும் என்பதில்லை. தியானத்தில் அமர்ந்த மாத்திரமே, ஆர்வலரின் மனதில் எண்ண அலைகள் அலைமோதத் தொடங்கும். ஆனால், அதைப்பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. "யோகாவைப் போல் அல்லது இன்ன பிற ஆன்மீக செய்முறை நுட்பங்களைப் போல், எண்ணங்களை ஒருமுகப்படுத்துவதில் நாம் முயற்சி செய்வதில்லை. அதைவிட நாம் இதயத்தை விழிப்புணர்வுள்ளதாக்கவே முயலுகிறோம்",

இதயம் ஒரு முறை விழிப்புணர்வு பெற்றதும், எண்ணங்களெல்லாம் படிப்படியாக அடங்கி விடும். இறுதியாக அவ்வார்வலர், மயக்கம் தோய்ந்த ஒருவித தன்னுணர்வற்ற நிலைக்குள்ளாகி, வேறொரு பரிமாணத்திற்குள் நுழைகிறார். அங்கே உறக்கத்திற்கும் மயக்கத்திற்கும் இடையே வித்தியாசம் உண்டு. இந்த மயக்கம் என்பது 'சுயம் அழித்தலின்' (Self Annihilation) நிழல் போன்றது.

ஹஜ்ரத் ஷேக் அஹ்மது ஃபாரூகி சர்ஹிந்தி (ரஹ்) அவர்கள் இம்மயக்கம் தோய்ந்த நிலை பற்றி இவ்வாறு கூறுவார்கள் – "அவன் வருகிறான், வந்து உன்னை எடுத்துச் செல்கிறான்".

தூக்கத்தில் ஆன்மா கீழ்நிலையை நோக்கிக் ஈர்க்கப்பட்டு, இதயத்திற்குள்ளே (Heart) தஞ்சமடைந்து கொள்கிறது. மயக்க நிலையில் மேல்நோக்கி ஈர்க்கப்பட்டு சுயத்திற்குள்ளே (Self) தஞ்சமடைந்து கொள்கிறது.

ஆர்வலர், அம்மயக்க நிலையில், தன்னுணர்வற்று, தான் இருப்பதையே அறிவதில்லை. இந்நிலையில் அவருக்கு சில அகக்காட்சிகளும் தோன்றும். ஸூஃபிகளின் சொல்லகராதியில் அதற்கு "கஷ்ஃப்" எனப் பெயரிடப்பட்டுள்ளது. இவ்வகைக் காட்சிகளில் 'எண்ண வெளிப்பாடுகள்' கலந்திருக்கும் சாத்தியங்களிருப்பதால், அதற்கு முக்கியத்துவம் வழங்க வேண்டியதில்லை.

ஷேக் அஹ்மது ஃபாரூகி சர்ஹிந்தி (ரஹ்) அவர்கள் கூறுவார்கள்: "வெறுமனே ஆர்வலரின் உள்ளத்தை மகிழ்விக்கவே இவைகளெல்லம் இருக்கின்றன. ஆனால், இலக்கோ, இதற்கெல்லாம் மிக அப்பால் இருந்து கொண்டிருக்கின்றது".

ஹஜ்ரத் அலாவுத்தீன் அத்தார் அவர்கள் கூறினார்கள்: "முராகபாவெனும் தியானப் பயிற்சியானது, மறுத்தல் மற்றும் உறுதிப்படுத்துதலை நினைவுகூறும் பயிற்சியை விடச் சிறந்ததாகும். முராகபாவின் மூலம் பௌதீக உலகிலும், ஆன்ம உலகிலும் இறை பிரதிநிதித்துவப் படித்தரத்தை அடைந்து கொள்ளும் சாத்தியங்கள் உண்டு".

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 52

(அகமிய பந்தம் - நிஸ்பத்)

நிஸ்பத் எனும் அரபிச்சொல்லின் பொருள், இருவரிடையே உள்ள உறவு அல்லது இணைப்பு என்பதாகும். சூஃபிகளின் சொல்லகராதியில் அது இறைவனுக்கும், மனிதர்களுக்குமிடயே உள்ள பந்தத்தைக் குறிக்கிறது.

சூஃபித்துவத்தின் சாராம்சம் என்னவெனில், ஒருவர், ஒரு சில நல்லொழுக்கப் பண்புகளை அல்லது சிறப்பம்சத்தை தன்னுள்ளே எந்த அளவு வளர்த்துக்கொள்ள வேண்டுமென்றால், அச்சிறப்பம்சமே அவனை முற்றிலும் வியாபித்த நிலையில் அவனை முழுவதுமாக ஆட்கொண்டுவிட வேண்டும்.

எப்போது அப்படிப்பட்ட சிறப்பம்சம் அவனது இன்றியமையாத ஒரு பகுதியாக ஆகிவிடுகிறதோ, அதுவே 'அகமிய பந்தம்' (நிஸ்பத்) என்றழைக்கப்படுகிறது. இவ் ஆன்மீக வேட்கையின் குறிக்கோளே, இத்தகைய அகமிய பந்தத்தை அடைதலாகும்.

நிஸ்பத் எனும் பந்தங்களில் பலவகை உண்டு.

அழகிய செயல்முறைகளின் பந்தம்,

தூய்மை பந்தம்,

ஆழ்ந்த இறைக்காதலின் பந்தம்,

ஆன்மீகப் பரவசப்பந்தம்,

ஒருமைப்பாட்டுப் பந்தம்,

அமைதியின் பந்தம் மற்றும்

பிறர் மத்தியில் நினைவுகூறலின் பந்தம் ஆகியனவாம்.

சூஃபி ஞானிகள் இவ்வித பந்தங்களில் தங்களை ஈடுபடுத்தி என்பதை விட தங்களை தாங்களே வருத்தி ஆன்மிகதத்தின் உச்சங்கள் பலப் பெற்றிருப்பதை காண முடிகிறது. இப்பந்தங்கள் குறித்து ஆய்வு செய்யும்போது அதுவே பெரிய தொடராக ஆகிவிடுகிறது.

ஆயினும், இந்த பந்தங்கள் யாவும் சூஃபி பயிற்சிகளை மேற்கொள்வதால் மட்டுமே கிடைக்கப்பெறுகிறது எனக்கருதுவது சரியன்று. இந்தப் பயிற்சிகள் யாவும் இவைகளை அடைந்து கொள்ள உதவும் கருவிகள் மட்டுமே. உண்மையில் இவை யாவும் இறைவனின் வெகுமதியாகும், அதனைத் தான் நாடுபவர்களுக்கு, அவர்களின் ஆன்மீகப் பரம்பரையைக் கருத்தில் கொள்ளாது, அவன் வழங்குகிறான்.

இது குறித்து, ஹஜ்ரத் பஹாவுத்தீன் நக்ஷ்பந்த் அவர்களின் விளக்கம் மிக விரிவாக அமைந்திருக்கிறது. யாரோ ஒருவர் அன்னாரின் ஷைகுமார்களின் பரம்பரையைப் பற்றிக் கேட்டபோது, அவர்களின் பதில்," எனது ஷைகுமார்களின் பரம்பரையின் மூலம் நான் இறைவனை அடையவில்லை. இறைவன்பால் கவர்ந்திழுக்கும் ஒருவகை ஈர்ப்பு சக்தி எனக்கு வழங்கப்பட்டது. அதுவே என்னை இறைவன் வரை கொண்டு சேர்த்தது".

நபித்தோழர்களும், பிந்தைய காலத்தில் பெருமானாரைப் பின்பற்றி ஒழுகியவர்களும், இந்த அகமிய பந்தத்தை வேறு வழிகளில் பெற்றிருக்கிறார்கள்.

தொடர்ந்து முறையாக நிறைவேற்றி வரும் ஐங்கால வணக்க வழிபாடுகள், உபரியான வணக்கங்கள், சதா இறைவனைப் புகழாரம் செய்தல், புனிதக் குர்ஆனை ஓதுதல், மரணத்தை நினைவு கூர்தல் மேலும் நீதித் தீர்ப்பு நாளின் பயம் ஆகியவைகள் இறைநெருக்கம் கிடைக்க வழிவகுக்கும் தன்மைகளை அவர்களில் ஏற்படுத்தி, அவர்களின் உள்ளங்களில் அவை ஆழமாகப் பதியக்காரணமாகி விட்டன.

இந்த உயரிய பந்தத்தை தங்களின் எஞ்சியுள்ள வாழ்நாளில் மிகப் பேணுதலாகப் பாதுகாத்து வந்தனர். இதே வழிமுறைதான் பெருமானார் நபி(ஸல்) அவர்கள் முதல் பல்வேறுபட்ட சூ:பித் தொடர்களின் ஆசான்கள் வரைக்கும் வந்தடைந்துள்ளது

## சூ:பி ஞானப் பொக்கிஷங்கள் 53

(பனாவும், பகாவும் ) பகுதி – 1

கலிமா தையிபா வென்னும் அத்வைத மூலமொழியின் கருத்தை எப்பொழுதும் "ஒலு" இல்லாவிடினும் (ஆனால், ஒலுவுடன் இருப்பது ஏற்றம்) நாட்டத்தில் வைக்கவேண்டும். இதற்கு நேரக் குறிப்பும், சுவாசப் போக்குவரத்தின் கவனமும் அவசியமில்லை. இருக்கும்போதும், நிற்கும்போதும், உண்ணும்போதும், குடிக்கும் போதும்-ஆக எல்லா நிலைகளிலும் இக்கலிமாவின் கருத்தே நாட்டத்தில் இருக்கவேண்டும்.

அதரவது, "லாஇலாஹ " வின் கருத்து தன் உள்ளமையை இல்லாமல் ஆக்குவது. இல்லல்லாஹ் வின் கருத்து பின்னர் பரிசுத்த ஹக்குத் தஆலா வின் உள்ளமையைத் தன் அகத்தில் ஸ்தாபிப்பதாகும்.

"அன" (நான்) என்பது இருவகைப்படும். ஒன்று உன்னுடைய 'அன' மற்றொன்று ஹக்குடைய 'அன''. உன்னுடைய இந்த அனவை ஹக்குடைய அந்த "அன"வில் 'பனனு' (இல்லாமல்) ஆக்கிவிட வேண்டும்.

இதன் விவரமாவது, மனிதன் எப்பொழுதும் நான், நான் என்ற வார்த்தையைக் கையாண்டுவருகிறான். ஹக்குத் தஆலாவும் நான் என்ற வார்த்தையை உபயோகிக்கிறான். இந்த இரண்டு 'அன' வில் மனிதன் சொல்லும் 'அன'வென்ற குபிரியத்தை பனாவாக்கி அதை இல்லாமலாக்கிவிட்டு, அந்த பனா வென்னும் நிலையில் நிற்பானாகில் ரப்பின் ஜலாலுடைய புரத்தில் ஹக்குத் தஆலா சொல்லும் நான் என்ற அந்த உள்ளமைக் குணத்தில் இவன் குடி கொள்வான்.

அப்படிக் குடிகொண்டு ரப்பு சொன்ன அந்த 'அன'வில் இவன் ஆகிவிடுவான். இதுதான் ஆரிபீன்களான ஔலியாக்கள் எத்திக் கொண்ட மேம்பாடான நிலையாய் இருக்கும்.

சிருஷ்டிகளுக்காக உண்டாக்கப்பட்ட "வேறு" என்ற. எண்ணமே இல்லாமலாக்கப்படுகிறது. இவ்வெண்ணம் உண்மையற்றது. இவ்வழியில் தன் உண்மையற்ற உள்ளமையின் எண்ணத்தை விடக் கொடியது எதுவுமில்லை. இதுவே பெரிய திரையாகும். இந்திரை மிகப் பலரை நாசமாக்கிவிட்டது.

ஒருவன் நான் "வேறு" என்னும் எண்ணத்தில் சிக்குண்டு கிடப்பதற்கேற்பத் தன் உள்ளமையை விட்டும் (விலகி) இருக்கிறான்.

சூ:பியாக்கள் என்னும் மெஞ்ஞானிகள் பனா வென்பதற்குக் கொண்டுள்ள கருத்து இந்த நான் வேறு என்னும் எண்ணத்தை இல்லாமலாக்குவதே யன்றி வேறில்லை.

அன்பர்கள் நிழலாகவும், அன்புக்குரியவன் சூரியனாகவும் இருக்கிறார்கள். இவ்வன்பர்கள் அவனின் பகாவில் (நித்தியத்தில்) பனாவாகி விடவேண்டும்.

வானத்தில் சூரியன் பிரகாசித்துக் கொண்டிருக்கும்போது இரவும் நட்சத்திரங்களின் பிரகாசமும் எவ்விதமிருக்கக் கூடும் ? புயல் காற்று வீசும்போதும் கொசுக்கள் இருக்க முடியுமோ? சிந்தித்துப்பாருங்கள்! நேர்வழிகாட்டும் அல்லாஹுத் தஆலாவே அதிகம் அறிவான்.

அன்பனே, உனக்குத் தேட்டமிருந்தால் (இறைவனின்) அன்பில் உன்னை இல்லாமலாக்கிவிடுவதே உனக்கு உசிதமாகும். அன்பனின் உள்ளத்தில் ஏக உள்ளமையின் ஒளி பிரகாசிக்க ஆரம்பித்தால் இந்த மனிதனின் "நான்" என்னும் பொய்யான எண்ணம் பனா வாகிவிடும். அச்சமயம் உண்டாகும் பேரின்பத்துக்கு இவ்வுலகத்தில் எவ்வின்பமும் நிகராகாது.

வாழ்நாள் முழுவதிலும் பனாவென்னும் இந்த மகாமில் மாய்ந்து கொண்டும், பகாவென்னும் ஏக உள்ளமையின் மெய்நிலைபாடான மகாமில் தரிபட்டுக் கொண்டும் இருப்பவன்தான் இப்பேரின்பத்தை அடைந்தவனாவான்.

நபி (ஸல்) அவர்கள் திட்டமாகத் திருவுளமாகி யிருக்கிறார்கள் :

"அல்லாஹுத் தஆலா தன் சொந்த அடியார்க ளுக்கு ஒரு குடிப்பைச் சொந்தமாக்கி வைத்திருக்கிறான். அதை அருந்தியபோது அவர்கள் மஸ்தாகி ஆனந்தம் அடைந்து மரணமாகி விடுகிறார்கள்.

மரணமானதும் உற்சாகமடைந்து பறக்கிறார்கள். பறந்தபோது அடைகிறார்கள். சேர்மானத்தை நாடினால் சேர்ந்துவிடுகிறார்கள். சேர்ந்து பிரிந்துவிடுகிறார்கள். பிரிந்தபோது பனாவாகி விடுகிறார்கள். பனாவான போது பகாவாகி விடுகிறார்கள். பகாவான போது அரசராகி விடுகிறார்கள். அதிபதியிடத்தில் "மக்அதே ஸிதிக்' என்னும் பதவியில் (தங்கி) இருக்கிறார்கள்."

இன்னொரு ஹதீஸில் திருவுளமாகிறார்கள்

"திட்டமாக, அல்லாஹ்விடத்தில் ஒரு குடிப்பு இருக்கிறது. அதைத் தன்னை அடுத்த ஞானவான்களுக்குத் தயாராக வைத்துள்ளான். அதை அருந்தியபோது ஆனந்தம் அடைகிறார்கள். ஆனந்தம் அடைந்தபோது நிலைபாடடைகிறார்கள். நிலைபாடடைந்தபோது பிரமித்து விடுகிறார்கள்.

பிரமித்த போது உற்சாகம் அடைகிறார்கள். உற்சாகம் அடைந்தபோது பேரின்ப சுகமனுபவிக்கிறார்கள். பேரின்ப சுகம் அடைந்தபோது பறக்கிறார்கள். பறக்கும்போது இறைஞ்சுகிறார்கள். இறைஞ்சும்போது அருள் பெறுகிறார்கள். அருள் பெற்றபோது இறங்குகிறார்கள். இறங்கும்போது விடுதலை அடைகிறார்கள். விடுதலை அடையும்போது சேர்மானம் நாடுகிறார்கள்.

நாடும்போது பெறுகிறார்கள். பெறும்போது மறைகிறார்கள். மறையும்போது தகவல் இல்லாமலாகிவிடுகிறார்கள். தகவல் இல்லாமலாகும்போது பனாவாய் விடுகிறார்கள். பனாவாகும்போது பகாவாகி விடுகிறார்கள். பகாவாகும் போது எனக்கும் அவர்களுக்கும் இடையில் பிரிவினை இல்லை"

இவ்விதம் இஸ்ஹாக்குல் கிர்மானி (கத்) அவர்களின் "வஸீலத்துல் இஜாபத் "தில் இதுவிவரம் தரப்பட்டுள்ளது.

## சூ:ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 54

(பனாவும், பகாவும் ) பகுதி – 2

ஷெய்குல் இஸ்லாம் ஸகரிய்யா அல் அன்ஸாரீ றஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறுகின்றார்கள். (ஸகரிய்யா அல் அன்ஸாரீ அல் கஸ்றஜீ மிஸ்ர் நாட்டில் ஹிஜ்ரீ 926ல் வபாத் ஆனார்கள்)

“பனா” என்பது மூன்று வகை என்பதாக “ஸூபிய்யாக்கள்” கூறுகின்றார்கள்.

ஒன்று: செயல்களில் “பனா” ஆகுதல். “லா பாஇல இல்லல்லாஹ்” செய்பவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை.

இரண்டு: “ஸிபத்”துக்களில் (தன்மைகளில்) “பனா” ஆகுதல்.

“லா ஹய்ய, வலா ஆலிம, வலா கதீற, வலா முரீத, வலா ஸமீஅ, வலா பஸீற, வலா முதகல்லிம அலல் ஹகீகதி இல்லல்லாஹ்” உயிருள்ளவன், அறிவுள்ளவன், சக்தி உள்ளவன், நாட்டம் உடையவன், கேள்வியுடையவன், பார்வையுடையவன், பேசுபவன் அல்லாஹ்வைத் தவிர எதார்த்தத்தில் யாருமில்லை.

மூன்று: உள்ளமையில் “பனா” ஆகுதல். பொதுவாக, உள்ளமையாக இருப்பவன் அல்லாஹ் மாத்திரமே. இக்கருத்தை மையமாகக் கொண்டு ஸூபிய்யாக்கள் பின்வரும் கவியைப் பாடியுள்ளனர்.

“பனா” ஆகி மீண்டும் “பனா” ஆகி மீண்டும் “பனா” ஆகுவான்

அவனுடைய “பனா” ஆகிறது அது “பகா” (தரிபாடாகுதல்) ஆக ஆகிவிடும்.

(ரிஸாலதுல் குஷைரீ ஓரக்குறிப்பு: பக்கம் 28, ஹாஷியதுல் அரூஸீ ஓரக்குறிப்பு, 2 – 3)

இக்கவியில் வந்துள்ள முதலாவது சொல் (பனா) ஓர் அடியான் செயல்களில் “பனா” ஆகுவதைக் குறிக்கும். இரண்டாவது சொல் (பனா) ஓர் அடியான் ஸிபாத் – தன்மைகளில் “பனா” ஆகுவதைக் குறிக்கும். மூன்றாவது சொல் (பனா) உள்ளமையில் (தாத்) “பனா” ஆகுவதைக் குறிக்கும்.

ஓர் அடியான் செயல்களில் “பனா” ஆகுவதற்கான “திக்ர்” ஆகிறது

“லா பாஇல இல்லல்லாஹ்” ஆகும். இந்த திக்ரின் கருத்தாகிறது நிச்சயமாக செயல்கள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே சொந்தம். அவனல்லாத எவருக்கும் எச் செயலும் சொந்தம் இல்லை. “உங்களையும், உங்கள் செயல்களையும் அல்லாஹ்வே படைத்தான்” என்று அல்லாஹ் திருமறையில் கூறுவது போன்று.

அதாவது படைப்புக்களின் உருவிலும், அப்படைப்புக்களில் நின்றும் வெளியாகின்ற செயல்களாகவும் அல்லாஹ்வே வெளியாகின்றான். எதார்த்தத்தில் செய்பவன் அல்லாஹ்வே! அவனுடைய செயல் எப்படைப்பில் வெளியானாலும் சரியே!

நெருப்பிலிருந்து “எரித்தல்” என்ற தன்மை வெளியாவது போன்று, வெட்டுதல் என்ற தன்மை கத்தியிலிருந்து வெளியாவது போன்று. நெருப்பாகிறது எப்பொருளையும் எரிக்காது. அல்லாஹ் அந்நெருப்பில் எரித்தல் என்ற தன்மை கொண்டு வெளியானாலே தவிர. அதே போன்றுதான் கத்தியும். அது எப்பொருளையும் வெட்டாது. அல்லாஹ் அக்கத்தியில் வெட்டுதல் என்ற தன்மை கொண்டு வெளியானாலே தவிர.

ஓர் அடியான் “ஸிபாத்” எனப்படுகின்ற தன்மைகளில் “பனா” ஆகுவதற்குரிய “திக்ர்” ஆகிறது “லா ஹய்ய இல்லல்லாஹ், வலா அலீம இல்லல்லாஹ், வலா கதீற இல்லல்லாஹ், வலா முரீத இல்லல்லாஹ், வலா ஸமீஅ இல்லல்லாஹ், வலா பஸீற இல்லல்லாஹ், வலா முதகல்லிம இல்லல்லாஹ்” என்பதாகும்.

ஓர் அடியான் தன்னிலிருந்து

ஹயாத் – உயிர் வாழுதல் என்ற தன்மையை “லா ஹய்ய இல்லல்லாஹ்” என்ற “திக்ர்” கொண்டும்,

அறிவு என்ற தன்மையை “லா அலீம இல்லல்லாஹ்” என்ற “திக்ர்” கொண்டும்,

சக்தி என்ற தன்மையை “லா கதீற இல்லல்லாஹ்” என்ற “திக்ர்” கொண்டும்,

நாட்டம் என்ற தன்மையை “லா முரீத இல்லல்லாஹ்” என்ற “திக்ர்” கொண்டும்,

கேள்வி என்ற தன்மையை “லா ஸமீஅ இல்லல்லாஹ்” என்ற “திக்ர்” கொண்டும்,

பார்வை என்ற தன்மையை “லா பஸீற இல்லல்லாஹ்” என்ற “திக்ர்” கொண்டும்,

பேச்சு என்ற தன்மையை “லா முதகல்லிம இல்லல்லாஹ்” என்ற “திக்ர்” கொண்டும் நீக்குவான். (பனா ஆகுவான்)

குறித்த அடியான் தன்னிலிருந்து மேற்குறித்த அனைத்து தன்மைகளையும் அழித்துவிட்டானேயானால் அவன் ஒரு “மையித்” போன்று ஆகிவிடுகின்றான். இந்த அந்தஸ்த்தையே நபிகள் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் “மூதூ கப்ல அன் தமூதூ” மரணிக்கும் முன் மரணியுங்கள் என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

ஓர் அடியான் அல்லாஹ்வின் “தாத்” உள்ளமையில் “பனா” ஆவதற்குரிய “திக்ர்” ஆகிறது “லா மவ்ஜூத இல்லல்லாஹ்” அல்லாஹ் அன்றி எதுவுமே இல்லை என்பதாகும். சகல வஸ்த்துக்களினதும் உள்ளமையை நீக்கி அதை அல்லாஹ்வுக்கே உரியது என்று தரிபடுத்தினானேயானால் அவன் அல்லாஹ்வில் “பனா” ஆகிவிடுவான்.

அந்நேரத்தில் இவனில் நின்றும் வெளியாகக் கூடிய அனைத்தும் அல்லாஹ்வில் நின்றும் வெளியானதாக ஆகும். ஏனெனில் அவன் அனைத்தைவிட்டும், தன்னைவிட்டும் மறைந்தவனாக ஆகிவிடுகின்றான். ஹக் தஆலா தவிர எதையுமே பார்க்க மாட்டான்.

**சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 55**

( நம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மூன்று வித நிலைகள் )

மாட்சிமை பொருந்திய மனிதன் தன்னுடைய மூலத்தை நோக்கி முயற்சியை மேற்கொள்ளும் போது அவனுக்குள் இரண்டு விதமான சிறப்பம்சங்கள் தோன்றுகின்றன.

முதலாவது நஃபில்களின் நெருக்கம்,

இரண்டாவது கடமைகளின் நெருக்கம்.

மனித குணங்கள் மறைந்து விடும் நிலையே நஃபில்களின் நெருக்கம் என்பதாகும். அந்த நிலையில் அண்ணலெம்பெருமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித நாவால் வெளிப்பட்டது யாவும் ஹதீஸெ குத்ஸி என்பதாகும்.

அடியானின் உள்ளமை இறையோனின் உள்ளமையிலே அழிந்து விடும்போது இறைகுணங்கள் வெளிப்படத் துவங்குகின்றன, அந்த நிலையே கடமைகளின் நெருக்கமாகும். அத்தகைய தருணங்களில் அண்ணலெம் பெருமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவித்தவை அனைத்தும் குர்ஆன் ஷரீஃபாகும்.

மனித பண்புகள் அமைந்த நிலையில் அறிவித்தவை அனைத்தும் ஹதீஸ் என்பதாகும்.

எனவே எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மூன்று வித நிலைகளில் இருந்தார்கள்.

ஒன்று மனித நிலை, இரண்டாவது வானவர்களின் நிலை, மூன்றாவது மறைமுகமான நிலை.

மனிதத் தோற்றத்திலே ஹதீஸ், வானவரின் இயல்பைக் கொண்டு ஹதீஸெ குத்ஸி மற்றும் மறைவான முகத்தைக் கொண்டு வேதம். இந்த விஷயங்கள் பொதுமக்களின் அறிவுக்கு எட்டுவது சற்று கடினமே.

காரணம் என்னவென்றால் அதை எல்லாம் விட்டு அவர்கள் தூரமாகவே விலகி இருக்கின்றனர். அல்லாஹுத் தஆலா அவர்களுக்கு சீரான அறிவை அளிப்பானாக, ஆமீன்,

(குத்பெ தோஆலம் ஹஜ்ரத் காஜா ஹபீபுல்லாஹ் ஷாஹ் சிஷ்தியுல் காதிரி அவர்கள் எழுதிய "மக்தூபாதே ஹபீப்" (மெஞ்ஞான மடல்கள் கடிதம் எண் 3- சேலம் 15.1.53 )

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 56

( உங்கள் சுயத்தை மறந்திருங்கள் )



மனத்திலே ஐயங்கள் வருவதும் போவதும் உள்ளமையின் தனித்தன்மையாகும். அவற்றை தடுப்பது எவ்வளவு சிரமமோ அதே போன்று எளிதானதுமாகும். சிரமம் எப்படியென்றால் அவை வராமல் இருக்க முடியாது. எளிது எப்படியென்றால் அவற்றை களைந்து விட்டு அவனுடைய உள்ளமையின் கற்பனையிலே மூழ்கி விட வேண்டும்.

இதைக் குறித்து நான் அநேகமாய் இதற்கு முன்னரும் எழுதி இருக்கிறேன். ஆக அனைத்து வித எண்ணங்கள் மற்றும் கற்பனைகளை எல்லாம் கடந்து எல்லாவற்றையும் மறந்த நிலையில் தன்னிலே மூழ்கி விடவேண்டும். அப்புறம் சாட்சியும் கிடையாது, சாட்சியளிப்பவனும் கிடையாது, தானும் கிடையாது, தலைவனும் கிடையாது.

இரட்சகனே, கோரிக்கையின் அறிகுறியும் இருக்கக்கூடாது இறைவனற்ற வேறெந்த எண்ணமும் இருக்கக்கூடாது வெறும் அடையாளம் மட்டுமே இருந்து போகட்டும் புரிதலுக்கு ஆளாகி விட்ட இறைவனும் இருக்கக்கூடாது.

ஞானஇரகசியத்தை எந்நேரமும் நினைவில் வைத்திருங்கள். அதாவது உங்கள் சுயத்தை மறந்திருங்கள்.

ரஹ்மத்தெ ஆலம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹஜ்ரத் உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களிடம் கூறினார்கள் - இருப்பது உள்ளதா ? அல்லது இன்மை உள்ளதா ? என்பதை நீங்கள் நன்றாக கவனித்துப் பாருங்கள். பார்ப்பது கண்களின் பணி, கேட்பது செவிகளின் பணி, புரிந்து கொள்வது அறிவின் பணி. நீங்கள் எந்த வகையை சார்ந்துள்ளீர்கள்?

மெய்ஞானியர்களின் கூற்றை இறைஞானியர்கள் மட்டுமே புரிந்து கொள்வர். ஹஜ்ரத் சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மிருகங்களின் மொழியை அறிந்திருந்தார்கள். அந்த பேச்சுக்களை பறப்பனவும், ஊர்வனவும் நன்கு அறிந்து கொள்ள முடியும். சாதாரண மனிதனால் அந்தத் திறனை எவ்வாறு அடைய முடியும்?

அதனால் தான் வெளிப்புற மேதாவிகள் சிறிய சிறிய விஷயங்களுக்கெல்லாம் ஆன்மிகவாதிகளை ஆட்சேபித்துக் கொண்டே இருக்கின்றனர். அல்லாஹுத்தஆலா அவர்களுக்கு மார்க்கத்தின் நுட்பங்களை அறியும் திறனை அளிப்பானாக. மேலும்

நம்புகின்ற ஆற்றலை மேம்படுத்துவானாக. ஆமீன், யாரப்பல் ஆலமீன்.

பிரார்த்திப்போன்,

காஜா ஹபீபுல்லாஹ் ஷாஹ் சிஷ்தி காதிரி (கடிதம் எண் 4)

## **சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 57**

( ஏகத்துவமும், ஏராளத்துவமும் )



சூபியாக்கள் சிஷ்யர்களுக்கு இரண்டு காரியங்களைச் சித்தியாக்கி வைக்கிறார்கள்.

முதலாவது, நிச்சய வேற்றுமையை (உண்மையில் ஆண்டவன் அல்லாதது உண்டு என்பதை) அவர்களின் எண்ணத்தில் இல்லாமல் ஆக்கி வைப்பது.

இரண்டாவது, நம்பத்தக்க வேற்றுமையை (தாத்தின் சிபத்து வெளியாகும் தோரணையில் தோன்றும் பிரிவினையை) நிலைபடுத்தி வைப்பது.

முதலாவது, லாஇலாஹ இல்லல்லாஹு - இரண்டாவது முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என்பது. முதல் பாகத்தை கல்பைக்கொண்டு நிர்ணயம் செய்தும், நாவால் விண்ணப்பஞ் செய்தும்-

இரண்டாம் பாகத்தை அவ்விதம் ஒப்புக்கொள்ளாதவன் சம்பூர்ணவனாகான் என்று மகான்கள் ஏகமனதாகக் கூறுகிறார்கள். ஏனெனில், அவனுக்கு “லாஇலாஹ்- இல்லல்லாஹ்” என்னும் முதல் பாகம் சித்தியாகி விடும். இரண்டாம் பாகமாகிய முஹம்மதுர் ரசூலுல்லாஹ் சித்தியாகாது.

வெளிரங்கப் பொருளை மட்டும் ஒப்புக்கொள்ளும் ஒரு கூட்டம் இருக்கிறது. இதுவஹ்தத்துல் வுஜூது (ஏக உள்ளமை) ஐ ஒப்புக் கொள்வதில்லை. ஏமாற்றம் கொடுக்கும் அறிவினால் ஒவ்வொரு வஸ்துவும் வெவ்வேறானதென்று இக் கூட்டத்தினர் எண்ணுகிறார்கள். இவர்கள் உண்மையில் லாஇலாஹ இல்லல்லாஹ்வை விண்ணப்பம் செய்யவில்லை (என்றே ஆகும்).

உள்ரங்கப் பொருளை மட்டும் ஒப்புக்கொள்ளும் இன்னொரு கூட்டம் இருக்கிறது. இது ஏக உள்ளமையின் சித்தாந்தத்தில் அளவுக்கு மேல் மூழ்கி (வெளித்தோற்ற) பதவிகளில் பேணுதல் வைப்பதில்லை. தம் அரைகுறையான அறிவினால் கற்பனை செய்து ஒவ்வொரு வஸ்துவும் ஆண்டவன்தான் என்கிற இக் கூட்டம், “ முஹம்ம துர் ரசூலுல்லாஹ்"வை உண்மையில் விண்ணப்பம் செய்யவில்லை (என்றே ஆகும்).

"லாஇலாஹ இல்லால்லாஹு முஹம்மதுர் ரசூலில்லாஹி" யென்னும் கலிமா இவ்விரண்டு கெடுதிகளையும் நீக்குகிறது; உள்ரங்கத்தில் ஏகத்துவத்தையும், வெளிரங்கத்தில் ஏராளத்துவத்தையும் நிலைநாட்டுகிறது

(இவ் விதம்) ஏகத்துவத்தை உள்ரங்கத்திலும், ஏராளத்துவத்தை வெளிரங்கத்திலும் சேர்த்துப் பேணுபவரே (நிலைப்படுத்துபவரே) ஆரிபுகளில் முன்னிலையானவராவார்.

ஆனதால், அவருடைய ஏகத்துவ விழி (அகக்கண்), ஏராளத்துவ விழி (முகக்கண்) யுடன் சேர்ந்தே திறந்திருக்கிறது. இதுபோலவே, ஏராளத்துவத்தின் கண் ஏகத்துவத்தின் கண்ணுடன் சேர்ந்தே திறந்திருக்கிறது.

## ஸூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 58

( மஸ்னவீ ஷரீப் இரண்டாம் பாகம் )

சீர் 1. "நான் பூமியிலே உன்னுடனே ஓரிடத்தில் இருக்கிறேன். ஆனால், மர்த்தபா வின் அறிவின் பொருட்டால் ஏழாம் வானத்தின் பேரில் "ஜொஹல்" (சனி) என்னும் கிரஹத்தைப் போல் ஓடிக்

கொண்டிருக்கிறேன்.

சீர் 2. ஆனால், உண்மையில் நான் உன்னுடன் சேர்ந்திருப்பவனல்லன். அது என் நிழலாகும். என் சிந்தனையும் நோட்டமும் உன்னதமானவை. கருத்தாவது: பூத உலகத்தின் பக்கம் நோட்டமாய் இருக்கும் ஆத்மாக்களைப் போலின்றி, என் ஆத்ம சூக்கும உலகத்தின் பக்கம் நோட்டமிடுகிறது.

சீர் 3. ஏனெனில், நான் சிந்தனை, நோட்டம் இவைகளைக் கடந்துவிட்டேன். சிந்தனையின் எல் லைக்கு வெளியே உலாவுகிறேன்.

சீர் 4. நான் சிந்தனை, நோட்டம் இவைகளின் அதிகாரியாய் இருக்கிறேன். (அவைகளின்) அதிகாரத்துக்கு உட்பட்டில்லை-கொற்றன் கட்டிடம் கட்டுவதற்கு அதிகாரியாய் இருப்பது போல்.

கருத்தாவது: கொற்றன் தனக்குத் தேவையானபடி கட்டிடத்தை அமைத்துக்கொள்ளும் திறத்தைப் பெற்றிருப்பது போல் எந்த நிலையில் என்னை அமைத்துக்கொள்ள வேண்டுமானாலும் அவ்விதம் அமைத்து, அதை ஏற்றுக்கொள்ளும் தத்துவம் எனக்கு உண்டாய் இருக்கிறது. எந்த ஒளி எனக்குத் தேவையோ அந்த ஒளியை நான் என்மீது பிரகாசிக்கச் செய்து கொள்வேன்.

சீர் 5. இதற்கு மாஞ்க மற்ற சிருஷ்டிகள் தம் கற்பனையின் அதிகாரத்துக்குட்பட்டவர்கள். ஆனதால், அவர்கள் மனம் உடைந்து சஞ்சலப்படுபவர்களாய் இருக்கிறார்கள்.

சீர் 6. நான் நாடியவனாகவே எனது 'தன்னை' சிந்தனையின் வசம் ஒப்புவித்துவிடுகிறேன். மறுபடியும் நாடும்போது அதை விட்டும் வெளிக் கிளம்பிவிடுகிறேன்.

கருத்தாவது: சம்பூரண ஞானிகள் ஒரு நிலை யிலிருந்து சலித்துவிட்டால், சலிப்பாறுவதற்காக மற்றொரு நிலைக்குத் தம்மை மாற்றிக்கொள்ளுகி றார்கள்.

சீர் 7. நான் வெகு உயரத்தில் பறக்கக்கூடிய பறவையாய் ( ராஜாளியாய் ) இருக்கிறேன். சிந்தனையோ ஈயைப் போன்றிருக்கிறது. ஈ என்னை விடச் சக்தி பெறுவ தெப்படி ?

சீர் 8. எளியோர்கள் பயன் பெறுவதற்காக என்னிடம் கூடியிருப்பான் வேண்டி நான் நாடினவனாகவே கீழ் நிலைக்கு இறங்கிவிடுகிறேன் .

கருத்தாவது: என் பதவி மிக உன்னதமானது. இப்பதவியின் அலுவலால் சாவகாசமில்லாதவனாய் மக்கள் பக்கம் கவனம் செலுத்த முடியாது. அப்படிக் கவனம் செலுத்தினாலும், அவர்களின் தகுதியின்மையால் அவர்கள் பயன்பெற இயலாது. ஆனதால், அவர்களின் போதனைக்காக நான் இறங்கி ஆரம்பஸ்தர்களின் அந்தஸ்தில் வந்து பயிற்சி அளிக்கிறேன்.

அதாவது, சம்பூரண ஞான ஆசிரியனாய் இருக்கிறேன். போதனா முறையையும், பயிற்சி அளிக்கும் ஒழுங்குகளையும் நான் நன்கு அறிவேன்.

சீர் 9. அற்ப குணமுடையோர்களின் கூட்டத் திலிருந்து நான் சலித்துவிட்டபோது சிறகை விரித் துப் பறக்கும் பறவைகளைப் போல் உயரிய பதவியின் புறம் நான் பறந்துவிடுகிறேன்.

أولم يروا إِلَى الطَّيْرِ فَوْقَهُمْ صَفَّتٍ وَيَقْبِضْنَ

"அவர்களின் (தலை) மேல் பறக்கும் பறவைகளை அவர்கள் பார்க்கவில்லையா? அவை (தாம் நாடிய) சமயத்தில் தம் சிறகுகளை விரித்துக்கொள்கின்றன; (நாடிய) சமயத்தில் ஒடுக்கிக்கொள்கின்றன." (குர்ஆன்)

சீர் 10. என் சிறகுகள் என்னிலிருந்தே முளைத்தவை; செயற்கையானவையல்ல. என் ஆத்மீக உயர்ச்சி என் உள்ளமையின் புறத்திலுள்ளது ; கேட்டு வாங்கப்பட்டதோ அல்லது பின்னர் இணைக் கப்பட்டதோ அல்ல.

ஏகத்துவமின்றி பலவாகவே காணும் நிலை சாமான்ய ஜனங்களுடையது.

ஏகத்துவத்துடன் பலவாகக் காணும் நிலை நடுத்தரமான அடியார்களுடையது.

பலவன்றி ஏகத்துவமாகவே காணுவது மெஞ்ஞானிகளாகிய சொந்த அடியார்களுடைய நிலையாகும்.

சாமான்யர்கள் அறியாமையிலும், நடுத்தரமானவர்கள் கலக்கத்திலும், மெஞ்ஞானிகள் அமைதியிலுமிருக்கிறார்கள்.

"இல்முல் எக்கீன்" (வாசித்து அல்லது கேட்டுக் கற்றுக்கொள்ளும் கல்வியறிவு) மாணாக்கர்களின் பதவி;

"ஐனுல் எக்கீன்" (கற்ற கல்வியின்படி நடைமுறையில் செயலாற்றி அதனால் உண்டாகும் இன்பத்தைக் கண்டு அனுபவிப்பது) நடுநிலையானவர்களின் பதவி.

"ஹக்குல் எக்கீன்" (தன் உள்ளமையை இழந்து அவ்வின்பமே தானாகி நிலைத்து இருப்பது) ஹக்கை அடைந்த மெஞ்ஞானிகளின் பதவி. மெஞ்ஞானிகளுக்கு மௌத்து (அழிவு) கிடையாது. ஏனெனில், அவர்கள் ஹக்குடன் நித்தியானந்தத்தில் இருக்கின்றார்கள்.

## சூ:ஃபி ஞானப் பொக்கிஷங்கள் 59

( கடவுள் தூதும், அவர் வாக்கியமும், அவர் செயலும்)

1) உதிப்பே கடவுளின் தூது ! சொல்லே அவர் வாக்கியம்! ஒருவன் உலகத்தை அறிவின் கண்ணைக்கொண்டு உற்று நோக்குவானாகில் அவனுக்கு ஓர் ஆசானுமில்லை; ஒரு வேதமுமில்லை!

2) வேதமோ கடவுள் சொல்லின் வாக்கியம்! சிருஷ்டிப்பொருள்களோ அவர் செயலின் வாக்கியம் ! வேதத்தைக் கண்ணைக் கொண்டு வாசிக்கின்றோம். சிருஷ்டிப் பொருள்களை அறிவைக் கொண்டு வாசிக்கின்றோம்.

3) கடவுள் சொல்லின் வாக்கியமும் அவர் செயலின் வாக்கியமும் வேறுபடா. அறிவோ அவர் செயலின் வாக்கியத்தைச் சேர்ந்தது. ஆகையால் வேதம் அறிவுக்கு மாற்றமாகாது!

4) வேதத்தை அறிவுக்கு மாற்றமாகக் கண்டால் அதைக்கொண்டு மனிதனுக்கு நம்பிக்கை உண்டாகாது. ஆகையால் அதன் பொருளைத் (தீர்க்கமாய்)தீர விசாரிக்க வேண்டும்.

5) கடவுள் சொல்லின் வாக்கியமும் அவர் செயலின் வாக்கியமும், அவர் சொல்லின் வேதம், அவர் செயலின் வேதமாகும். அவர் சொல்லும், அவர் செயலும் ஒன்றே!

6) கடவுள் சொல்லின் வேதம் கடிதத்திலும், அவர் செயலின் வேதம் ஆகாயத்திலும் வரைத்திருக்கிறது. அவர் செயலின் ஏட்டை வாசிப்பவர்கள் அவர் சொல்லின் ஏட்டில் தவறார்கள் !

7) கடவுள் சொல்லின் ஏடு அனுமானமாகவும், அவர் செயலின் ஏடு பிரத்தியட்சமாகவும் சிலருக்குத் தோற்றுவதால் அவர்களுக்கு ஒரு வேதமும் ஓர் ஆசானுமில்லை! அல்குர்ஆன் 25 ஆம் ஜூஸ்வு: இலைஹியுரத்து, சூராவில் வருகிறது:

"வ கதாலிக அவ்ஹய்னா இலைக்க ரூஹன் மின் அம்ரினா மா குன்த தத்ரி மல்கிதாபு வலல் ஈமானு வலாகின் ஜஅல்னாஹ் நூரன் நஹ்தி பிஹி மன்னஷாஉ மின் இபாதினா வ இன்னக லதஹ்தீ இலா சிராத்தின் முஸ்தகீம்"

'அப்படிப்போல, வஹி கொண்டு அல்லது திரைக்கப்பாலிருந்து கொண்டு அல்லது தூதனுப்பி நாம் நாடியவர்களோடு பேசிக் கொள்வது போல் முஹம்மதே! உம்மளவில் நம்முடைய அம்ருடைய ஆலத்தில் நின்றும் சகல ஜீவாத்மாக்களுக்கும் அசலான ரூஹை உதிக்கச் செய்தோம். முற்படநீரும் வேதமென்னும் அந்தப் பொக்கிஷம் இன்னது, அந்த ஈமான் என்னும் உண்மை இன்னது என்று அறிந்திருக்கவில்லை.

ஆகிலும் அந்த ரூஹை நாம் ஏகமாயிருக்கும் ஜோதிப் பிரகாசமாக்கி இருக்கிறோம். நம்முடைய அடியார்களில் நின்றும் நாம் நாடியவர்களை அதுகொண்டு நேர்வழி காட்டுவோம். ஆனால் உமக்கு ஈமான் இன்னது வேதமின்னது என்று நாம் தெரிவித்துவிட்டபடியால் உண்மையாய், கெட்டியாய் (உறுதியாய்) நீரும் செவ்வொத்த பாதையளவில் நேர் வழி காட்டுவீர்" இந்த "வகதாலிக்க அவ்ஹைனா இலைக்க ரூஹன்" ஓர் ஆயத்தையும் ஆராய்ந்து பார்! விளங்கும்.

😎சிருஷ்டிப் பொருள்களில் இழுப்புத் தத்துவமும், மறுப்புத் தத்துவமும் காணப்படுவதால் உலகத்தில் பகையும் நேசமும் காணப்படுகிறது. சிருஷ்டிப் பொருள்களின் தத்துவம் கடவுள் தூதாகவும், அதன் காரியம் வார்த்தையாகவுமிருக்கின்றன.

9) போன கிராபில் " (டேப் ரெக்கார்டரில்) தமது தொனியும் வார்த்தையும் அழியவில்லை. அவ்வாறே, நாம் பிரயோகித்த தத்துவங்களும், நமது செய்கைகளும், தமது எண்ணங்களும் ஆகாயத்தில் சித்தரிக்கப்படுகின்றன !

10) சாதாரண உதிப்பே கடவுளின் தூது. அவ்வாறான சொல்லே அவர் வாக்கியம். இது மனிதனுக்கு மட்டும் சொந்தமல்ல. எல்லா ஜீவராசிகளுக்கும் உடையது!

11) தேவ ஆவியால் பரிசுத்த ஆவியின் உதவியைக் கொண்டு உதிப்பே கடவுளின் தூது : அவ்வாறான சொல்லே அவர் வாக்கியம்: இது மனிதவர்க்கத்திற்கு மட்டுமே சொந்தமானது. இதை எவராலும் தள்ள முடியாது!

12) இந்த வேதத்தையும் இந்த ஆசானையுமே யாவரும் அனுசரிப்பது அவசியம், இதை அனுசரிப்பவர்களுக்கு வாசிப்பதை விட கடவுள் பக்தியால் உண்டாகும் ஞானம் வியக்கத்தக்கது!

13) கடவுளின் நீதி ஆத்மா. ஆத்மாவின் நீதி ஆகாயம். ஆகாயத்தில் எல்லாம் அமைந்திருக்கின்றன. ஆகாயத்திற்கு அடி, நடு, முடிவில்லை. திக்கு திசையில்லை. முடிவில்லாத விகாசத்திற்கு எந்த இடமும் நடு மையம் ஆகலாம்!

14) நானென்ற அகங்காரமே எல்லாவற்றிற்கும் நடு மையம்: நானென்ற அகங்காரமே எல்லாவற்றிற்கும் மூலம். தன்னையறிந்தவன் தலைவனையும், தலைவனையறிந்தவன் தன்னையுமறிவான். கடவுளின் பொக்கிஷத்திற்கு இவனே சாவி! (திறவுகோல்)

15) கடவுளின் அம்சத்தில் நின்றுமுள்ளது ஆத்மா, ஆத்மாவின் அம்சத்தில் நின்றுமுள்ளது ஆகாயம். எல்லாம் ஆகாயத்தின் அம்சத்தில் நின்றுமுள்ளன!

("சம்பூரண சுயம் பிரகாசம் "- மவ்லானா மவுலவி மஷாயிஹ்

A முஹம்மத் தாஹிர் ஹஸனீ காதிரீ (ரஹ்)

## **சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 60**

முராக்கபா எனும் இறைதியானமும்,

முஷாஹதா எனும் அகவிழிப்பு நிலையும்

முராக்கபா மற்றும் முஷாஹதா என்பது ஆன்மீகத்தில் தவிர்க்க முடியாத அடிப்படை பயிற்சிகள். இதைப் பற்றி விளக்குமுன் ஆன்மீகம் பற்றி நமது சமகால இஸ்லாமிய அறிஞர்களில் ஒருவரான மௌலவி டாக்டர் செய்யது மஸ்வூது ஜமாலி முதல்வர், புகாரி ஆலிம் அரபிக் கல்லூரி, வண்டலூர், சென்னை அவர்கள் கூறுவதை கேளுங்கள்:

“மெய்ஞ்ஞானம் ஓர் ஆழமான ஆன்மீக அனுபவம். அந்த அனுபவம் ஏற்படுத்தும் ஆன்மீக உறுதி [Al-yakeen] நம்பிக்கைதான் உன்னதமான இறைஞானம். இந்த மெஞ்ஞானத்தையும் அதன் ஆழத்திற்கு ஏற்ப வகைப்படுத்தபடுவதுண்டு. இதற்கு திருக்குர்ஆன் கையாண்டுள்ள சொற்களையே பயன்படுத்தப்பட்டுள்ளது.

அவை:

1) علم اليقين (இல்முல் எக்கீன்)

2) عين اليقين( ஐனுல் எக்கீன்)

3) حق اليقين(ஹக்குல் எக்கீன்)

உதாரணமாக மூடப்பட்ட அறையில் அமர்ந்திருப்பவர் பெறுகின்ற அனுபவத்தை மூன்றாக வரிசைப்படுத்தலாம்.

1.மூடப்பட்ட அறையில் இருந்து கொண்டு வெளியில் மழை பெய்கிறது என்ற செய்தியை அறிந்து கொள்வது. (علم اليقين -இல்முல் எக்கீன்)

2.ஜன்னலைத் திறந்து மழையைக் கண்ணால் கண்டு அனுபவிப்பது.( عين اليقين-ஐனுல் எக்கீன்)

3.கதவைத் திறந்து வெளியே வந்து மழையில் நனைந்து அதன்மூலம் பெறும் அனுபவம். ( حق اليقين- ஹக்குல் எக்கீன்

இதுபோன்ற அனுபவம் ஏற்படுத்துகின்ற நம்பிக்கையையும், அந்த நம்பிக்கையுடன் ஒருவர் பெறுகின்ற அனுபவங்களையும் வார்த்தையால் அளவிட முடியாது”.

o o o o o

முராக்கபா, முஷாஹதா :-

சுருக்கமாக சொன்னால் இவை இரண்டும் இஹ்ஸான் என்பதன் இரண்டு பகுதிகளாகும்.

இஹ்சான் என்றால் என்ன? என்ற கேள்விக்கு நபி(ஸல்) அவர்கள் இப்படி பதிலளித்தார்கள்:

“(இஹ்ஸான் என்பது) அல்லாஹுவை அவனைப் பார்ப்பது போன்று நீ வணங்குவதாக இருக்கும், அப்படி (அகப்பார்வையினால்) நீ அவனைப் பார்ப்பவனாக ஆகியிருக்கவில்லையானால், அவன் உன்னை நிச்சயமாக பார்த்தவனாகவே இருக்கின்றான்.”

(நூல்: முஸ்லிம் ஷரீ ஃப்)

இந்த நபிமொழியில் வணங்ககூடிய அடியானின் இரண்டு படித்தரங்கள் கூறப்பட்டுள்ளன. இதில் ஏதாவது ஒரு நிலையில் இல்லாத வணக்கம் முழுமையான வணக்கமாகாது..

முதலாவது நிலை : “அல்லாஹ்வை பார்ப்பதை போல்

வணங்குவது". இது மிகவும் உயர்ந்த நிலை. அது சாத்தியப்படாத நிலையில் அடைய வேண்டிய இரண்டாவது நிலை “ அல்லாஹ் நம்மை பார்த்து கொண்டிருக்கிறான் என்ற உணர்வுடன் வணங்குவது”.

இதில் அல்லாஹ்வை பார்ப்பதை போல் வணங்கும் முதலாவது நிலை “முஷாஹதா” (எனும் அகப்பார்வை நிலை) என்றும் அல்லாஹ் நம்மை பார்த்து கொண்டிருக்கிறான் என்ற உணர்வுடன் வணங்கும் இரண்டாவது நிலை “முராக்கபா” என்றும் சொல்லப்படும். ஆக முராக்கபா என்பதும், முஷாஹதா என்பதும் நமது வணக்கத்தின் உயர் தரத்தை குறிக்கும் இரண்டு படித்தரங்கள்.

இங்கே வணக்கம் என்பது ஐவேளை தொழுகையை மட்டுமல்ல வாழ்வின் எல்லா நிலைகளையும் குறிக்கும் என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும். ஒரு நம்பிக்கையாளன் சிறுநீர் கழித்து சுத்தம் செய்யும் நடவடிக்கைக் கூட வணக்கத்தை சேர்ந்த ஒன்று தான்.

ஒரு இறைநம்பிக்கையாளனுக்கு அல்லாஹ் நம்மை பார்த்துக் கொண்டிருக்கின்றான் என்ற உணர்வு வாழ்வின் எல்லா நிலையிலும் இருக்க வேண்டிய, குறைந்தபட்ச அடிப்படை பண்பாகும் எனபதுதான் இங்கே கவனத்தில் கொள்ள வேண்டிய முக்கிய அம்சமாகும்.

o o o o o

இஸ்லாத்தில் நல்ல நாள், கெட்ட நாள் என பாகுபாடில்லை என்றாலும் “அதிகாலைத் (சுப்ஹ்) தொழுகை தொழாத நாள் இறை நம்பிக்கையாளனுக்கு கெட்ட நாள்” என நபி(ஸல்) சொல்லியிருக்கின்றார்கள். அதே போல அதிகாலை தொழுகைக்கு பின் ‘முராக்கபா’ பயிற்சி செய்யாத நாள் ஆன்மீக சீடனுக்கு கெட்ட நாள் என சொல்வார்கள் சங்கைக்குரிய சுப்ரிஷாஹ் ஃபைஜி எனும் ஞானமகான்.

முராக்கபா என்ற வார்த்தை புதிதாக இருக்கின்றதே! எங்கேயிருந்து வந்தது? என கேள்வி எழுகின்றதா?

இந்த இறைவசனத்தை பாருங்கள்:

வ கானல்லாஹு அலா குல்லி ஷையின் ரகீபா(raqeeba) : அல்லாஹ் யாவற்றையும் கண்காணித்தவனாக இருக்கின்றான்.(33:52)

இது போன்ற வேதவசனங்களில் வரும் 'ரகப' என்ற வார்த்தைகளில் இருந்து பெறப்பட்டது தான் முராக்கபா எனும் ஆன்மீக வழக்குச் சொல்.

முராக்கபா என்றால் என்ன?

முராக்கபா என்பதன் கருத்து ஆழ்ந்து சிந்தித்தல். எந்த ஒரு விசயத்தையும் குறிப்பாக்கி அதில் ஆழ்ந்து சிந்திப்பது. இது ஆன்மீகப் பாதையில் உள்ளோருக்கு இறப்பு வரை அவசியமான ஒன்றாகும் என்பார்கள் குருநாதர் ஃபைஜி ஷாஹ் நூரி (ரஹ்).

நமது ரட்சகன் நம்மை கவனித்து கொண்டிருக்கின்றான் என்றால் எங்கிருந்து நம்மை கவனித்து கொண்டிருக்கின்றான் ?

நமது தமிழில் எட்டுதிசை என்பது போல் அரபியில் முன், பின், வலம், இடம், மேல், கீழ் என ஆறு திசைகளாக கூறுவார்கள். எந்த ஒரு திசையிலும் மட்டுப்படுத்துவதை விட்டும் அல்லாஹ் பரிசுத்தமானவன் என்பது ஆன்மிக குருநாதர் சொல்லித் தந்த ஆரம்பப்பாடம்.

அப்படியானால் அல்லாஹ் எங்கிருந்து பார்த்துக் கொண்டிருக்கின்றான்?

அர்ஷில் இருப்பவனாக சொல்கிறது ஒரு இறைவசனம்.

பிடறி நரம்பைவிட சமீபமானவன் என்கிறது இன்னொரு இறைவசனம்.

எங்கு திரும்பினாலும் அவன் திருமுகம் என்கின்றது மற்றுமொரு இறைவசனம்.

அல்லாஹ்வை – அவனது சுயத்தை (தாத்தை) பற்றி சிந்திக்கக் கூடாது. சிந்திக்கவும் முடியாது. ஆனால் அவனது பண்புகள், வல்லமை, அருள் பேருபகாரங்களை சிந்திக்க உத்தரவிடுகிறது இறைவேதம். அனைத்து சிருஷ்டிகளையும் அடைய வளைய சூழ்திருக்கும் அவன் பண்புகளை (ரஹ்மத்தை) அறிய உத்தரவிடுகின்றது "ரஹ்மானைப் பற்றி அறிந்தவர்களிடத்தில் தெரிந்து கொள்ளுங்கள்." (25:59) என்ற திருமறை வசனம்.

கவனிக்கவும் அல்லாஹ்வைப் பற்றி என்று சொல்லாமல் அவனது பண்புப் பெயரான ரஹ்மானைப் பற்றி அறிந்து கொள்ளுங்கள் என சொல்லப்பட்டிருக்கிறது.

70 தாயை விட கருணையாளனான ரஹ்மான்.....

நம்மை சன்னம் சன்னமாக வளர்த்து போஷிக்க்க் கூடிய ரட்ஷகன் (ரப்பு).....

எப்படி கண்காணிப்பவனாக (ராகிபாக) இருக்கின்றான். சிருஷ்டிகளை சூழ்ந்தவனாக (முஹீத்) ஆரம்பமானவனாக (அவ்வல்), முடிவானவனாக (ஆஹிர்), வெளியானவனாக (லாஹிர்), மறைவானவனாக (பாத்தின்), நெருக்கமானவனாக (கரீப்), மிக நெருக்கமானவனாக (அக்ரப்) இருக்கின்றான் என்ற விளக்கத்தை 'பாஹபர்' என்ற அறிந்தவர்களிடம் மூலம் அடையாமல் இஹ்சானிய நிலையை அடைவது என்பது சாத்தியமில்லை.

முராக்கபா என்ற ஆன்மிக பயிற்சியின் வாயிலாய் தான் அல்லாஹ் நம்முடனிருந்து நம்மை கண்காணித்து கொண்டிருக்கும், நம்மை வளர்த்து வாழ வைத்து கொண்டிருக்கும் இறைநெருக்க உணர்வு ஏற்படும் என்பதற்கான சைக்கினை இந்த இறைவசனத்திலிருந்து பெறப்படுகின்றது.

மேலும் எவர்கள் நம்முடைய வழியில் முயல்கிறார்களோ நிச்சயமாக அவர்களை நம்முடைய நேரான வழிகளில் நாம் செலுத்துவோம்: நிச்சயமாக அல்லாஹ் இஹ்சான் செய்வோருடனேயே (முஹ்ஸினுடனேயே) இருக்கின்றான். (29:69) என்பது இறை வாக்கு.

முராக்கபாவில் முன்னேறிய நிலையில் முஷாஹதா என்ற அகவிழிப்பு நிலை ஏறபடும் .

அந்நிலையில் சிலருக்கு ஜன்னலைத் திறந்து மழையைக் கண்ணால் கண்டு அனுபவிப்பது போன்ற அகத்தெளிவு ஏற்படும் அதை ( عين اليقين ) -ஐனுல் எக்கீன் எனப்படும்.

வெகு சிலருக்கு கதவைத்திறந்து வெளியே வந்து மழையில் நனைந்து அதன் மூலம் பெறும் அனுபவம் போல பேருண்மையின் தெளிவு ஏற்படும். அந்நிலையை ஹக்குல் யக்கீன் என்ற குர்ஆனிய வார்த்தைகளில் குறிப்பிடப்படுகின்றது.

அது முராக்காபாவின் விளைவால் தாமாக அடைவதல்ல. இறைவன் அருட்கொடையாய் வழங்கும் பேருண்மையின் சாட்சி நிலை. பின் வரும் வசனத்தை நன்கு கவனித்து பாருங்கள். 'அவர்களுக்கு நாம் காட்டுவோம் 'என இறைவன் சொல்கின்றான்.

விரைவில் நமது அடையாளங்களை வெளியிலும், உள்ளேயும் அவர்களுக்கு நாம் காட்டுவோம். அவை ஹக்கு தான் என்று தெளிவாகின்ற வரை (காண்பிப்போம்). (41:53)

அந்த ஆனந்த பரவசமான அந்த அற்புத நிலைப் பற்றியே

"சுத்த பரிபாரண சுகவாரி தன்னிலோர்

சொட்டாகிலும் தொட்ட பேர் நல்லவர்கள் நல்லவர்கள்

நானென்றைக்கு அந்த நல்லவன் ஆவேனோ?"

என ஞானிகள் கவிதை பாடி வைத்தார்கள்.

கவனம் இதில் Ecstasy என்ற பரவசம் நமது நோக்கமல்ல. ஹக்குல் எக்கீன் என்ற உண்மையாளர்களின் தெளிவான நம்பிக்கையே நமது நோக்கம்.

அந்த மகத்தான நிலையை அடைந்து வாழ உங்களுக்கும், எனக்கும் எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவானாக! ஆமீன்!.

(ஃபைஜிஷாஹ் (ரஹ்), சுபூரிஷாஹ் ஃபைஜி, முராக்கபா, முஷாஹதா)

## சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் 61

(ஃபிக்ரின் (சிந்தனையின்) பக்கமும் கவனம் செலுத்துங்கள் )



இறைவனின் பக்கம் கவனம் செலுத்துதலும், அவனை நினைவு கூர்தலும் தான் திக்ரின் குறிக்கோள் ஆகும். திக்ரின் நோக்கமும், அன்புக்குரியவனும் அந்த ஒரு உள்ளமையே தான். முழுமையான வெளிப்பாடும் ஹகீகதெ முஹம்மதி தான். அந்த உள்ளமையே தான் முதன்மையான நிலைப்பு. இது ஒரு மறைமுகமான இரகசியம்.

இந்த இரகசியங்களை அறிந்தவர்களே சிறப்பாக வெளிப்படுத்த முடியும். இறைத் தேட்டம் கொண்டவர்கள் அவர்கள் மீது நம்பிக்கைக் கொண்டவர்கள். லா இலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹி, உண்மையில் இந்த இரு வாக்கியங்களும் ஒன்றே.

ஆம், ஆரம்ப நிலையில் இருப்பவர் களுக்கு லா இலாஹ இல்லல் லாஹ், இறுதியை எட்டியவருக்கு முஹம்மதுர் ரசூலுல்லாஹ். லா இலாஹ இல்லல்லாஹ்வின் தரம் பாதிப்பிலே கீழேயுள்ளது, முஹம்மதுர் ரசூலுல்லாஹ்வின் தரம் உயர்வாக உள்ளது.

எல்லா முஸ்லிம்களிடமும் இந்த நம்பிக்கை வேரூன்றி இருக்க வேண்டும். அதாவது- வெறும் லா இலாஹ இல்லல்லாஹ் என்று மட்டுமே சொல்பவன் முஸ்லிம் ஆகுவதில்லை. எதுவரை அவன் முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என்று சொல்ல மாட்டானோ இறைவனிடத்திலே அவன் ஏற்புக்குடையவனாக மாட்டான்.

என்னுடைய நோக்கம் என்னவென்றால் இனிமேல் திக்ர் வகைகளை குறைத்துக் கொள்ளுங்கள். மூப்பின் காரணத்தினால் உடல் பலவீனமடைந்து விடுகிறது.

உங்கள் அதிக நேரத்தை ஹகீகதெ முஹம்மதியின் தியானத்திலே செலவிடுங்கள். அதன் பெயர் தான் சிந்தனை. திக்ரையோ நீங்கள் செய்து வருகிறீர்கள். இப்போது ஃபிக்ரின் (சிந்தனையின்) பக்கமும் கவனம் செலுத்துங்கள்.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவித்துள்ளார்கள்- ஒரு கண நேர சிந்தனை ஈருலக வழிபாட்டை விட சிறந்தது.

பிரார்த்திப்போன்,

காஜா ஹபீபுல்லாஹ் ஷாஹ் சிஷ்தி காதிரி (கடிதம் எண் 87)

இத்துடன் சூஃபி ஞானப் பொக்கிஷங்கள் தொடர் பதிவுகள் நிறைவு பெறுகிறது.



இத்தொடருக்கு துணை நின்ற நூற்கள் மற்றும் தளங்கள்

1) பைஜுல் ஹபீப் - காஜா ஹபீபுல்லாஹ் ஷாஹ் சிஷ்தி காதிரி (ரஹ்)

2) "ஆன்மீக குருவுடன் சிஷ்யனின் ஒழுக்கங்கள்"- மௌலவீ அப்துர் ரஊப் மிஸ்பாஹீ, பஹ்ஜீ

3) ஏகத்துவம் பற்றி அல்குர்ஆன் அதன் ஆய்வுக்குரிய அரிய வழிமுறைகள் - ஷெய்ஹுல் முப்லிஹீன் M.S.M அப்துல்லாஹ் (ரஹ்)

4) தஸ்ஹீஹுல் ஜலாலா - ஷைகுனா ஸதக்கத்துல்லாஹ் (ரலி)

5) மஙானீ - அல்லாமா செய்து முஹம்மது லெப்பை என்கிற மாப்பிள்ளை லெப்பை ஆலிம்

6) ஏகத்துவ மெய்ஞானம் தளம்

7) **Mujeeb Rahman** தளம்

😎**Vaitiyar Malick** தளம்

9) "ஞானம் முழ்கிக்குளித்த நதி " தக்கலை ஹலீமா **Thuckalay Haleema**

10) தப்ஸீருல் ஹமீத் பாகம் 1 மற்றும் பாகம் 17

11) மத்தூபாதே ஹபீப் - காஜா ஹபீபுல்லாஹ் ஷாஹ் சிஷ்தி காதிரி (ரஹ்)

12) School of Sufi Teaching

13) ஹஜரத் **Seyed Abu Thahir** அவர்களின் வீடியோ உரை

14 ) கடவுள் - விஞ்ஞான பார்வையிலிருந்து.... சுஜாதா

15) புல்லாங் குழல் தளம்

16) சம்பூரண சுயம் பிரகாசம் "- மவ்லானா மவுலவி மஷாயிஹ்

முஹம்மத் தாஹிர் ஹஸனீ காதிரீ (ரஹ்)

17) பிஸ்மில் குறமாகிய ஞான இரட்சை

